இரட்டை ஸஞ்சிகை.

ஓம் பரப்பிரம்மணே நம: **128-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு

" எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) 

| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி கார்த்திகை மார்கழி | இ-68,69. |
|---|---|---|
| Vol. 6. | 1931-ம் வருஷம் நவம்பர்மீ டிசம்பர்மீ | No 68,69. |




"சிவனை நினை" சிவத்தியானத்தால் மனுஷ்யன் சுத்தனாகி இக லோகத்தில் ஸகல ஸுகங்களையும் அனுபவித்துப் பரலோகத்திலும் ஆநந்தத்தை யெய்துகிறான். எவன் ஜென்மாந்திரத்திற் சிவபூஜை செய்தானோ அவன் இந்தஜென்மத்தில் பிறவிச்செல்வனாய்ஜனித்து இலக்ஷணமுள்ள மனைவியை யடைந்து ஸுபுத்திரர்களைப் பெற்று எசஸ்ஸை யடைகிறானென்று பெரியோர் கூறுகின்றனர். இதன்றி, மனமானது எதைக் கோருகிறதோ அது லபிப்பது இயற்கையாதலின் மங்களத்தைக் கோரும் மனிதன் மங்களத்தையே யடைகிறான். சிவம் எனும் பதம் மங்களத்தையே கோரும். அதைச் சொல்லிக் கொண்டே காலங்கழிப்பவர்க்கு ஸதா மங்களமே உண்டாகிறது. சிவபக்தர்களுக்கு மிருத்யு பயமில்லை. முன்பு சிவபிரானின் காலால் உதைப்பட்ட வலியை மிருத்யு என்பவன் மறக்கவில்லை யாதலின் அவருடைய பெயரைக் கேட்டமாத்திரத்தில் பயந்து ஓடுகிறானாம். குபேரன் சிவ மூர்த்தியின் தோழமைகொண்டு மிகுந்த செல்வத்தைப் பெற்றான். இராவணன் முதலிய அநேக ராக்ஷஸர்கள் சிவபி

---

வெற்றி எந்தப் பக்கம் இருக்கிறதோ, எவன் ஆண்மைசாலியாக உள்ளானோ அவன் பக்கமே உலகும் திரும்பி, அவன் செய்வதை எதிர்க்காமல் ஜாடையாக இருந்துவிடும்; அத்துடன் அவனுக்குத் துணை கூட உதவும்.

ரானின் கிருபையை யடைந்து மகத்தான ஐசுவரியங்களை யனுப வித்தனர். தன்னை ஸ்தோத்திரம் செய்வோரிடம் சிவபெருமானுக்கு வெகு ஸந்தோஷமாதலின், பக்தர்கள் சீக்கிரத்தில் காரியஸித்தி பெறுகின்றனர். சிவமூர்த்தி ஜனன மரண துக்கங்களை நீக்கும் சக்தி யுடையவராதலின் முக்தியடைய விரும்புவோர் சங்கரனைப் போற்று வதவசியம். சிவபெருமானது கிருபாகடாக்ஷம் எல்லோருக்கும் உண்டாகட்டும்.

ஃ

"சங்கு சுட்டாலும் வெண்மைத் தரும்." பெரியோர்களை எவ் வளவு துன்புறுத்தினும் அவர்களின் நற்குணம் மாறாது. ஹரிதாஸ் என்பவரை அன்னிய மதஸ்தர்கள் ஹிம்ஸித்து அடித்தபோது அவர் வியஸனப் பட்டாராம். எதற்காகவெனில், தம்முடைய சரீ ரத்தில் உண்டான வலிக்காக அல்ல. ஐயோ! இவர்களெல்லாம் நிரபராதியான தம்மை அடித்து வீணாக பகவானுடைய கோபத்துக் கிலக்காகிறார்களேயென்று வியஸனமடைந்தார். இந்த பக்தருடைய கருணையே கருணை! தம்மை ஹிம்ஸித்தவர்களிடம் கூட தாம் தயை பாராட்டுவது ஸாதுக்களின் இயற்கையென்பது ஹரிதாஸ ரின் காரியத்தால் நன்கு விளங்குகிறது.

ஃ

"தியானத்தின் லக்ஷணம்" தியான காலத்தில் மனது ஒருநிலை யிற் நிற்பதற்கு விக்கிரகம் ஒரு லக்ஷியமாக ஏற்படுகிறது. சொற்ப நிமிஷம் விக்கிரகத்தை கண் உற்றுப் பார்க்கவேண்டும்; பின்பு கண் களை மூடவேண்டும்; பார்த்த ரூபத்தை மனதில் சிந்திக்கவேண்டும். அந்த சிந்தனை பிம்பத்தில் கவனம் வைக்கவேண்டும். மனது நிலை நிற்பதற்குப் பழகப் பழக, ரூபம் மறையும். அதன்கண் அந்தர்யாமி யாக இருக்கின்ற ஈசுவரத்தன்மை பிரஞ்ஞையில் சம்பந்தித்து உட் கும். அதனால் மன எழுச்சியும், ஆநந்தமும் ஜனிக்கும். மேலும், ஒரு விக்கிரகமானது காந்த சக்திபோன்று, அதை ஜெபிக்கிறவ ருக்கு சக்தி அல்லதுவீரிய விசேஷத்தை உண்டுபண்ணுவதாகும்.

ஃ

"காலம் அருமையானது" பணத்தைச் செலவழிப்பதிலும் காலத்தைச் செலவழிப்பது பெரும் பிசகு. எத்தனை பேர் ஒரு நிமி ஷம் முன்பாக வந்திருந்தால் ரயில் கிடைத்திருக்குமே யென்று பச்சாத்தாபப் படுகிறார்கள். யோகாப்யாஸம் செய்து வெகுகாலம் வரை உயிரை வைத்துக் கொண்டிருப்பது பகவத்யானம் செய்வ

---

எப்போதும் நீ ஓயாது கொடுத்துக் கொண்டு வருகிறவனுக்கு—சில நாட்கள்வரை கொடாமல் நிறுத்தி—அவன் குணத்தை—அப்போதும் அவன் அன்புள்ளவனா யிருக்கிறானென்றும் சோதித்துப் பார். ஒவ்வொருவரையும் ஆழம் பார்த்து வைப்பது பின்னுக்கு ஏமாறாதிருக்க வழி.

தற்கேயாம். நிமிஷநேரம் ஸாவகாசம் கிடைத்தால் அதைப் பகவானுடைய தியானத்தில் கழிப்பது நலம்.

ஃ

"கடவுளின் அன்பு எது?" நல்லொழுக்கமே கடவுளின் அன்பாகும். பிரபஞ்சமனைத்தும் தெய்வமயமாயிருக்கின்றது. நாம் தெய்வத்தினுள் உள்ளனம். தெய்வம் நம்முள் உள்ளது, நம்முள் தெய்வம் எப்பொழுதும் நல்வழியையே காட்டும். எக்காலும் பேரின்ப வீட்டின் வழியையே உணர்த்தி நிற்கும். இன்னா செய்யாமையே ஒப்பிலா அறமென்றும், பிறர்க்கு உதவிசெய்தலே பிறப்பினுக்குப் பெரும் பயனென்றும் நமக்குப் புலப்படுத்தும். இவ்வழி இன்பத்திற்கு ஒப்பிலாப் பெருவழி. இந்நல்வழி விலக்கி யொழுகுவது துன்பவழிக்கு முதலாம். கடவுளன்பே முதல் தரமென்றுகருதி நல்வழிவிடாதொழுகுமின். நல்வழி யொழுகாது கடவுளிடத்து அன்புகொண்டிருப்பதாகக் கூறின் அது கபடமேயாம். நல்லொழுக்கமின்றி உருத்திராட்சங்கள், துளசிமாலைகள், செபமாலைகள், பூணூல்கள் கடவுளன்பாகா. நல்லொழுக்கமின்றி புண்டரங்கள், திருமணிகள், திருமண்கள், கோபி சந்தன முத்திரைகள், அட்சதைகள், பொட்டுகள்——இவை கடவுளன்பாகா. நல்லொழுக்கமின்றி சந்தியாவந்தனங்கள், ஔபாசனங்கள், அக்கினிஹோத்திரங்கள், வைசுவதேவங்கள், தேவதார்ச்சனைகள், தருப்பாசனங்கள், ராமாயண பாராயணங்கள், புஷ்பங்கள், பூசைகள், தூபங்கள், தீபங்கள், ஆரத்திகள், நைவேத்தியங்கள்—செய்யின் அது கடவுளின் அன்பல்ல. நல்லொழுக்கமின்றி தொங்குங் குடுமிகள், பஞ்சகச்சங்கள், பட்டு வேஷ்டிகள் தரித்துக் கொள்வதாலும் கடவுளிடத்து அன்பு உண்டாகிவிடாது. நல்லொழுக்கமின்றி நாளொன்றுக்கு நாற்பது தடவை தலைமுழுக்கு போடுவதும்—கடவுளன்பல்ல. நல்லொழுக்கமின்றி பட்டினிகள், நோன்புகள், விரதங்கள் எவ்வளவுதான் அநுஷ்டித்தாலும் அவை ஆகாது கடவுளின் அன்பு. நல்லொழுக்கமின்றி கோயிற்றிருப்பணிகள், நவராத்திரி திருவிழாக்கள், ஹரி—ஹர பஜனைகள், சீதா கலியாணங்களும் கடவுளன்பாக மாட்டா. நல்லொழுக்கமின்றி விஷ்ணு ஸஹஸ்ர நாமங்கள், சூரிய நமஸ்காரங்கள் செய்யினும், ஜபிப்பினும் அவை தெய்வ பக்தியாகா. நல்லொழுக்கமின்றி பிட்சைகள், சமாராதனைகள், சந்தர்ப்பணைகள், பூரி தட்சணைகள்—இவற்றாலும் கடவுளின் அன்பைப்பெற இயலாது. நல்லொழுக்கமின்றி வேண்டுகைகள், பிரார்த்தனைகள், முடிப்புகளும் தெய்வபக்தியல்ல. நல்லொழுக்கமின்றிச் செய்யும் வேத பாராயணமும், வேதத்தியானமும் கடவுளை ஏமாற்

---

தயாளப் பிரபுக்களின் குடும்பமே சோதனைக்குள்ளாகிறது. கபட நரிகளின் குடும்பங்களும், துரோகிகளின் குடும்பங்களுமே நன்றாக வாழ்கிறது

றுவதற்கே செய்வதாகும். தெய்வபக்திக்கு இவற்றைவிட நல்லொழுக்கமும், மனோசுத்தியும், சத்தியந் தழுவி நடத்தலுமே முக்கியமானவை. மேற்சொன்ன வெளி ஆசாரணைகள் பொருந்தியிருப்பினும் நல்வழி யொழுக்க மில்லாவிடில் பயன்படா. நல்வழி பிடித்து ஒழுகுபவனுக்கு இந்த வெளி ஆசாரணைகள் அவ்வளவாயில்லாமற் போயினும் அது குறைவாகாது. ஆதலின், நல்லீர்! நல்வழியும் நன்னடக்கையுமே முதன்மையானதென்று தெரிமின். ஆத்ம சுத்தி ஆவசியகமென்று நம்புமின்.

ஃ

**"சன்மார்க்கமே மோட்சத்துக்கு மார்க்கம்"** பரம நிஷ்டாபரர்களென்று காணப்படுவோரிற் பலரை உற்று நோக்கின் எத்துணையோ ஒழுக்கத் தவறுகளுடன் தென்படுகின்றனர். இவர்களிடத்து உண்மையான பக்தி எவ்வாறுண்டாகும்? வெளி வேஷங்கள் இல்லாதிருப்பினும், திரிகரண சுத்தியும், சத்தியவாக்கும், நல்வழிப் பிடிப்புமுள்ளவனே மேலானவனென்று பாவியுங்கள். இப்படிப்பட்டவன் வேற்று மதத்தனாயினும் மரியாதை பாராட்டுங்கள். ஆசாரம் வேறுபட்டிருப்பினும் உபசாரம் செய்து ஆதரியுங்கள். எளியவனாயினும் நல்லொழுக்க முள்ளவனாகிற் பெருமைப் படுத்துங்கள். குடுமிகளையும், குறிகளையும், உடுப்புகளையும் விட நல்லொழுக்கத்தையே பிரதானமாகக் கொள்ளுங்கள். சன்மார்க்கமே தெய்வபக்திக்குப் பிரதான மானது. சன்மார்க்கமே சௌக்கியத்துக்குப் பெருவழி. சன்மார்க்கமே சுவர்க்கம். சன்மார்க்கமே மோட்சத்துக்கு மார்க்கமாம். சன்மார்க்க மில்லாத பக்தி முக்தி தராது.

ஃ

**"கிருஷ்ண பகவானும், கிறிஸ்து நாதரும்."** இருவரின் சரித்திரத்திலும் சில ஒற்றுமை விசேஷங்களுள்ளன. (1) இருவர்களுடைய மாதாக்கள் மஹா பரிசுத்தர்களாகவும், ஈசுவர பக்தியுள்ளவர்களாகவும் இருந்தார்கள். (2) தங்களுடைய குழந்தைகள் கர்ப்பத்தில் இருந்த காலத்தில் அவர்களின் பொருட்டுப் பலவிதமான துன்பத்திற்குள்ளானார்கள். (3) தேவானுக்கிரகத்தால் ரக்ஷிக்கப்பட்டார்கள். (4) அவர்கள் பிறக்கு முன்னமே அவர்கள் பிறப்பார்களென்று முன்னறிவிக்கப்பட்டிருந்தது; அவர்கள் பிறந்த நாட்டு அரசன் அவர்களைக் கொலைசெய்ய எத்தனமுள்ளவனாயிருந்தான். ஆனால் அவ்வெத்தனம் பயன்படவில்லை. (5) இருவரும் பிறக்கும்பொழுதே பூரண ஞானமுடையவர்களாக

ஒரு நூலை விலை கொடுத்து வாங்கி ஆதரிப்போமென்கிற அறிவும் விவேகமும் அன்னியர்களா யுள்ளவர்கட்கே உண்டாகின்றது. அவர்களே ஆசிரியர்கட்கு ஊக்கம் கொடுக்கும் புண்ணியாத்மாக்களாவர்.

இருந்தார்கள். (6) பின்பு, தகுந்த வயதுள்ள மனிதர்களாகி உயர் நலம் அமைந்த நீதிமுறை, தர்ம முறைகளை ஜனங்களுக்கு உபதேசித்தார்கள். (7) இருவரும் மரணமடைந்தோரைப் பிழைப்பு மூட்டினார்கள். (8) அநேக அற்புத சித்திகள் காட்டினார்கள். உதாரணமாக, சொற்ப உணவை வைத்துக்கொண்டு பெருங் கூட்டத்தார்களுக்கு அன்னமிட்டனர். (9) இருவருடைய மரணமும் வெளித்தோற்றத்தில் துக்ககரமாக இருந்ததேயன்றி, அவர்களுக்குத் துக்கமாக இல்லை. அவர்கள் அந்த வேளையைத் தெரிந்து கொண்டவர்களாகவே இருந்தார்கள். அவதார புருஷர்கள் அவர் அவர் இருந்த காலதேச வர்த்தமானங்களுக்குத் தக்கவாறு, அவர்கள் ஒழுகுவாராயினும், பொதுவாய் அவர்களின் வாழ்நாள் நடைமுறை ஒரே தன்மையாகவே நிகழும். ஒருவர் மற்றவரைப் பார்த்து நடந்தார் என்பதில்லை.

ஃ

"பகவத் ஸ்தோத்திரம்" ஓ தேஜோமயா! ஸர்வபூத மனோஹரா! ஜகத் ரக்ஷகா! ஸர்வ வியாபகா! உமது கடாக்ஷமும் அன்பும் ஸர்வத்திலும் வியாபித்திருக்கின்றது. அல்லும் பகலும் எம்மை வருத்துகிற எல்லாத் துன்பங்களுக்கும் ஹேதுவாகிய ஆசாபாசங்களும் லோக கர்மங்களும் எங்களை யணுகாமல் எமது மானசங்களாகிய அன்னங்கள் உனது பாதாரவிந்தங்களிலேயே வசிக்கும்படி கிருபை செய்வாய். எங்கள் சித்த விர்த்தியெல்லாம் விஷய வாஞ்சையில் செல்லாமல் மனோ வாக்குகளுக்கு எட்டாததாயும் மஹத்தாயுமிருக்கிற உமது மஹநீய ரூபத்துள் லயமாகும்படி அனுக்கிரகிப்பாய். நின்னுடைய நித்ய நிர்மல ஆநந்த ஸ்வரூபத்தை யாங்கள் தரிசிக்கும்படி சுஞ்ஞான நேத்திரங்களையும் பிரஸாதித்தருள்வாய். எம் எண்ணமுஞ் செய்கையும் நினது கருணாரச பான நிமித்தமாகவே இருக்கவென்று அருள்வாய். நாங்கள் இப்போது அனுபவிக்கிற உலக இன்பங்கள் யாவும் அநித்தியம். ஆகையால் நித்தியனும், ஆதியந்த ரகிதனும், சரணாகத போஷகனும் வீற்றிருக்கும் எம் பெருமானே! இன்னும் இவ்வுலகத் துன்பங்களாகிய வெயிலில் தபித்து வருந்தவிடாமல் நீர் உமது கருணாகடாக்ஷ வீக்ஷண்யச் சாயையில் சிறிது இடங்கொடுத்து விடாய்தீர்த்து ரக்ஷிப்பாய் ஸ்வாமி! கல்லும் கரடும் முள்ளும் நிறைந்த இவ்வுலக நெறியினின்றும் எம்மை நின் பக்தியாகிற நல்வழியில் காமக்குரோத லோப மோஹாதி துஷ்ட மிருகங்கள் தடுக்காமல் காத்து நினது பாதாரவிந்தங்களாகிய வீட்டைச்சேர நடத்திக்கொண்டு போவாய். கவலையாலும் துன்பத்தாலும் பூரிக்கப்பட்டிருக்கிற எம் மனது சிறிதுநேரமாயினும் நின்னைத் தியானித்துச் சந்தோஷமடையும்படி அனுக்கிரகிப்பாய். எமது அஞ்ஞான இருளைப்போக்கும் மெய்ஞானப்

பேரொளியே! எமக்குள்ளே அந்நியோந்நியத்தையும் பரஸ்பர நேயத்தையும் பெருக்கி உண்மையோடு கலந்துவாழ உறுதியுள்ள மனோதிடத்தை யருள்வாய். உமது திருவுள்ளத்துக்கு இசைந்த நன்மைகளையே யாங்கள் பாராட்டி பரஸ்பர உபகாரிகளாய்ப் பிரவர்த்திக்க அனுக்கிரஹிப்பாய். எங்கள் வாழ்நாள் முழுதும் திருப்புகழ் செப்பும் நினது திருக்கைங்கரியத்தில் தானே செலுத்தி, நித்தியமான பரலோக சுகத்தையே பெறுவதற்கு வேண்டிய உபகரணங்களைத் தேட அருள்வாய். எக்காலத்திலும் எம்மை உனது சந்நிதியிலேயே யிருத்தி, பொய் பழி பாவம் ஒன்றும் அணுகாது, அடியார்களது அன்பு குன்றாது செழித்தோங்கும்படி கடாக்ஷிப்பாயாக. ஓம் தத்ஸத்.

## அன்பின் தவிப்பால் படும் பாடு.

உண்மையன்பு மிக்கோர் தமது பல தொல்லையில் பிறருக்குக் கடிதம் எழுதத் தாமதமாகிவிடில் அதற்காக மிகவும் தங்களை நொந்துகொள்கிறார்கள். பின் வருவது அவ்வித கடிதங்களில் ஒன்று:—“தங்களைக் கண்டு செல்லப் பலவாறு எண்ணியும் இயலாது போயிற்று. திருவருள் கூட்டி வைக்கவில்லையென்ற முடிவுடன் இவ்வூர் வந்து சேர்ந்தேன். தங்கட்குக் கடிதம் எழுதவேண்டுமென்று எண்ணிய பல நாட்களும் பறந்தன. பெருந்தவறு யான் தங்கள்பால் இழைத்துவிட்டதாக என்னுள்ளம் ஒவ்வொருநாளும் என்னிடங் குறைகூறி வருகிறது. ஐயோ! அவர்கட்குக் கடிதம் எழுதாது பலநாள் செல்லுகின்றதுவே; என் செய்யலாம் என ஏங்கி நின்ற நான்,—என் மீது குற்றம் உண்டாகியதே; இதனை எவ்வாறு தீர்ப்பது என அஞ்சிநின்ற நான்,—தங்கட்குக் கடிதம் எழுத வெட்கிநின்ற நான்,—எல்லாத் துன்புறுநாளும் இனித் தங்களது அன்பு மிகுந்த கடிதங்கண்டு இன்புறுநாளாக மாறுமாறு செய்துவைக்க எல்லாம் வல்ல இறைவனை வேண்டி நிற்கின்றேன். என் பெரும்பிழை மறந்து மன்னித்தருள்க, புகலிடம் பிறிதுமுண்டோ?”

உண்மையன்பு இவ்வாறெல்லாம் எழுதச்செய்கிறது. அன்பற்ற கருங்கல்லான நெஞ்சோ சந்தித்தபோது நேரில் பசப்புமொழிகள் பகர்வதுடன் ஒதுங்கிப் பின் பல்லாண்டுகளாயினும் ஒரு கடிதங்கூட வரைவதில்லை. அதற்கு வருந்துவதுமில்லை. அவர்கள் குணமும் தெரிந்துவிடுகிறது.

அமிர்தகுணபோதினி

பிரஜோபத்தி கார்த்திகை—மார்கழி

# ஜான் மில்ட்டன் என்ற மஹாகவி.



ஆண்டவன் இயற்றும் சோதனை விநோதங்கள் இருந்தவாறென்னே! அவர் காட்டும் துயரத் துன்பங்களும் பிறகு ஒரு நன்மைக்கேயென்பது பெரியோரின் சித்தாந்தம். ஒரு மகா கவியின் நேத்திரங்களைப் பகவான் இருளுண்டுபோகச் செய்துவிட்டார்! ஆயினும் அதன் பயனாக அவர் தூக்குத்தண்டனைக் காளாகாதவாறு கண்ணிலாக் கபோதியென்று இரக்கமாய் மன்னிக்கப்பட்டார். அவருக்கு நேத்திரங்கள் செவ்வையாயிருந்திருப்பின் அவரைச் சேர்ந்த மற்றவர்களைப் போலவே அவரும் சிரச்சேத தண்டனைக் குட்பட்டுப்போயிருப்பார். "உனக்குக் கண்கள் வேண்டுமாயின் பிற்காலத்தில் நீ சிரச்சேத தண்டனையைப் பெறுவாய்; கண்களில்லையாகில், மரண சிக்ஷைக்கு ஆளாகாது வெகுகாலம் வரை வாழ்ந்திருப்பாய்; ஆகவே உனக்கு இந்த இரண்டில் எது வேண்டும்?" என்று கடவுள் கேட்கும்பொழுது அதற்கு மனுஷ்யன் என்ன பதில் சொல்வதோ? கடவுளின் சித்தத்தின்படி நடக்கட்டுமென்றே பொறுத்துக்கொள்ள வேண்டியதாகிறது. ஃ

ஜான் மில்ட்டன் என்ற ஆங்கில மகாகவி 1608-ம் வருஷம் டிசம்பர் மாதம் 9-ம் தேதியில் லண்டன் நகரில் பிறந்தார். இவரது பிதா புராதன கிரந்தங்களில் நல்ல பாண்டித்தியமும், சங்கீத ஞானத்தில் தேறின நுண்ணறிவும் படைத்தவர். "தந்தை எவ்வழி மைந்தரவ்வழி" என்பதாக, 15-ம் பிராயத்திலேயே மில்ட்டன் இரண்டு சங்கீதங்களைச் செய்யுட்களாக மொழி பெயர்த்தது மாத்திரமல்ல; ஒரு சிறு குழந்தை இறந்துபோனதின் பேரில், "ஐயோ! பூக்குமுன்னே பொறிந்துபோன பூவே!" என்று இவ்வாறாக ஒரு பாடலும் பாடினார். இந்த மழலைப் பாட்டுகளிலும்கூட அவருக்கிருந்த புத்தி தீக்ஷண்யத்தையும் தெய்வ கடாக்ஷத்தையும், திருவருள் வரப்

---

ஆசைகள் இருவிதம். ஒன்று அசுத்தம். மற்றொன்று சுத்தம். ஜனன மரண சக்கரத்தில் நம்மைக் கட்டுவது அசுத்தம். ஆத்மாவை முக்தியடையச் செய்வது சுத்தம்.

பிரஸாதத்தையும் கூர்ந்து பார்த்தால் கண்டு கொள்ளலாம். லத்தீன் பாஷையில் அவருக்குத் தீர்ந்த பாண்டித்தியம் இருந்ததுமன்றி லத்தீன்பாஷையின் வாசகங்களை அர்த்த புஷ்டியும், சத்த புஷ்டியும் அமைந்த தன்மையில் அலங்காரம் கசிய எழுதுவார். ஆகவே, லத்தீன் பாஷையைப் பூர்வாசிரியர்கள் எழுதின சிறப்போடு தீஞ் சுவை கனிய, இழுக்கு வழுக்கில்லாமல் செம்மொழியாய் எழுதின ஆசிரியர்களுக்குள் ஆதியானவர் மில்ட்டனே யொழிய மற்றொருவ ரல்ல என்று ஹாம்டன் கூறிய செய்தியாக ஜான்சன் பண்டிதர் சொல்லுகிறார்.

ஃ

தற்காலத்தில் இத்தேசத்திலுள்ள கற்றோருக்குப் பேச்சும் எழுத்தும் புளக்கமும் அனைத்தும் இங்கிலீஷ் பாஷையிலேயே நடப்பதுபோல, அக்காலத்தில் அந்தச் சீமையிலுள்ள கற்றோருக்கு லத்தீன்பாஷை மூலமாய்த்தான் ஸகல வியவகாரமும் நடந்தேறி யது. யார் என்ன நூல் எழுதினாலும் லத்தீன் பாஷையில் தான் எழுதுவார்கள். ஊர் நடவடிக்கை இப்படி யிருக்க, மில்ட்டனுர் லத் தீன் பாஷையில் ஒப்போரும் மிக்கோரும் இல்லையென்று எண்ணத் தகும் பாண்டித்தியம் தமக்கு இருந்தாலும், தமது சுயபாஷையில அபிமானமுள்ளவராய் 1627-ம் வருஷத்தில் "விடுமுறை அப்பியா ஸம்" என்றொரு பாடல் எழுதித் தமது சுயபாஷையைப் போற்றி னர்.

ஃ

1629-ம் வருஷத்தில் மில்ற்றனர் உலக இரட்சகர் பிறந்த திரு நாள் தேம்பாவணியாக ஜெனனச்சிந்து என்னும் செய்யுளைப்பாடி னர். இந்தச் சிந்து இங்கிலீஷ் இலக்கியங்களில் இருக்கிற எல்லாச் சிந்துகளிலும் மகா சிரேஷ்டமானது என்று ஹாலம் என்னும் மகா வித்வான் எழுதியிருக்கிறார். அதன்பின் 1634-ம் வருஷத்தில் காமன்கூத்து என்றொரு கோணங்கி நாடகத்தையும், இன்ப துன் பம் இரண்டையும் எதிரெதிராய் நிறுத்தி சோடிப்பு செய்த நூல் களையும் வேறு சிலவற்றையும் இயற்றினர்.

ஃ

முகத்திலே திறந்த கண்ணும், நெஞ்சிலே இருத்திப் பொருத் தின கருத்துமாக, 1638-ம் வருஷம் பாரீஸ், நைஸ், ஜினேவா, பைசா என்னும் நகர்களின் வழியாய் பிளாரன்ஸ் நகரத்துக்குப் போனர். சூரியன் பூமியைச்சுற்றி ஓடுகிறதேன்று சாதித்ததற்காகச் சிறையில் வைக்கப்பட்ட பேர்போன கணித சாஸ்திரியாகிய கலி லேயோ என்பவரை காராக்கிருகத்தில் சென்று ஸம்பாஷித்தார்.

---

போதனை—ஞானம்—முக்தி என்ற விருக்ஷங்களுக்கு விவேகமும் வைராக்கியமும் ஆணிவேர் ஆகும்.

சிறையிலடைத்த அக்கிரம மௌட்டியத்தைக் கடிந்துகொண்டார். இங்கிருந்து ரோம் நகரத்திற்கும் சென்று கடைசியில் 1639-ம் வருஷம் தமது ஊருக்குத் திரும்பினர்.

ஃ

இதன் பின் அவர் லண்டன் நகரில் ஒரு பள்ளிக்கூடம் போட்டுக் காலந் தள்ளிவந்தார். மில்ட்டனுருக்குத் தாரம் மூன்று. முதல் தாரத்தின் பெயர் மேரிபவல். இவருக்கும் மில்றனுருக்கும் பொருத்தம் இல்லாமல் மனஸ்தாபம் நேரிட்டு, அந்த அம்மாள் பிரிந்து வேறே யிருந்து, மறுபடியும் பல சிநேகிதர்கள் இராசிப் படுத்தினதின் பேரில் மில்றன் அவளை ஏற்றுக்கொண்டு மூன்று புத்திரிகளும் பிறந்த பின், 1652-ம் வருஷம் அந்த அம்மாள் இறந்துபோக; இரண்டாவதாக 1656-ம் வருஷம் கத்தரினுள் என்ற பெண்ணை மணந்து, மறு வருஷத்தில் அவளும் இறந்துபோக; மூன்ருவதாக 1664-ம் வருஷம் எலிசபெத்து என்ற நங்கையை விவாகம் செய்துகொண்டார். இதனுல் மில்றனுருக்கு இல் வாழ்க்கை சோதனையும் ஸஞ்சலமுமான வாழ்க்கையாகவே இருந்ததென்று ஊகிக்கலாம். வித்வான்களின் குடிவாழ்க்கையே பெரும் பாலும் இவ்விதமே சுகம் இன்றிக் கெட்டிருப்பது பல இடத்துங் கண்ட உண்மை. இதற்கிடையில் 1644-ம் வருஷத்தில் சில நூல்கள் எழுதினர். அவைகளில் "அறிப்பகுதிகா" என்பது சிரேஷ்டமான நூல். 1652-ம் வருஷத்தில் அவருக்குக் கண்ணெளி முற்றிலும் மங்கிவிட்டது. சரியான குருடனது நிலைமைக்கு வந்துவிட்டார். சிறு பிராயமுதல் கல்வியில் தேட்டங்கொண்டு சதாகாலமும் புஸ்தகமும் கையுமாய் இராக்கண் பகற்கண் விழித்துப் படித்த படியால் இப்படிக் கண்ணிநண்டு போயிற்று. கண்ணெளி மறைந்த பின்பு பகலில் அவருடைய புத்திரிகளும் சிநேகிதரும் அருகில் உட்கார்ந்து பூர்வ நூல்களையும் மூல வேதாகமத்தையும் வாசிக்கச் சொல்லிக் கேட்டுக்கொண்டிருப்பார். இரவிலே கடவுள் தியானத்திலிருந்து; புறக்கண் பஞ்சடைந்திருந்தாலும், அகக்கண் தெரிந்து விளங்க, மனேதிருஷ்டியால் மண்ணையும் விண்ணையும் ஊடுருவப் பார்த்துக் கண்ணுள்ளோர் காட்சியைக்—கடந்த மெய்க்கருப் பொருளைக் கண்டு செய்யுள் அடிகளைச்செய்து திருத்தி மனதில் நிறுத்திக்கொண்டு, பொழுது விடிந்தவுடனே தாம் சொல்லச் சொல்ல அவற்றைத் தமது புத்திரியைக்கொண்டு எழுதுவித்து இவ் விதமாய் நாட்களைக் கழித்துவந்தார். இவரது கவிகள் பழுதில்லாத பல்லலங்காரப் பண்போடு அமைந்திருப்பது மாத்திரமல்ல; இவ

---

ஸ்திரீயினுடைய பலன்—வாழ்வு—தாழ்வு—சிலாக்கியம்—நற்பெயர்—பெரியோரின் ஆசி பெறல்—யாவுமே அவளுடைய நாக்கில் இருக்கிறது. நாவை அடக்குவதற்குத் தக்கபடியே எல்லா உயர்வும் நலமும் பொருந்தும்.

ருடைய ஒரு பதத்திற்கு அதே பொருளுள்ள மறுபதத்தைப் போட்டுச் சற்றே மாற்றினலும், அல்லது ஓரடியின் பொருள் கோளை அணுவளவு திருப்பினலும் செய்யுளுக்கு அலங்காரமாயிருக்கும். சுவை, ஓசை, இசை, இனிமை, அணி அடுக்கு அனைத்தும் அடியற்று, கவிப்பயன் கண் காணுத காட்டுக்குக் குடியோடிப் போகுமென்று மகா கல்விமானுகிய மக்காலே என்னும் பிரபு (Lord Macaulay) சொல்லியிருக்கிறுர்.

ஃ

மிகப் பேர்போன கண் வைத்தியன் ஒருவனைத் தருவிப்பதாக அவரது ஆத்ம நண்பர் ஒருவர் முயன்றகாலை அவருக்குப் பின்வருமாறு கடிதம் எழுதினர். "நீர் சொல்லுகிற வைத்தியன் ஒருவாறு என் கண்ணைச் சொஸ்தப்படுத்தக் கூடியவரா யிருந்தாலும், நான் நமக்கு வைத்த பங்கு இவ்வளவுதான் என்று எண்ணி என் மனதைத் தேற்றிக்கொள்வதோடு********கடவுள் எனக்கு முன் நடந்து வழிகாட்டி முன்னும் பின்னும் என்னைப் பிடித்து நடத்துகிறவரைக்கும் நான் சந்தோஷமாய் அவருடைய சித்தத்திற்கு அடங்கி என் கண்களுக்கு ரஜா கொடுக்க விரும்புகிறேன்'' என்றுர்.

ஃ

பூங்காவனப் பிரளயம் (Paradise lost) என்னும் பெருங்காவியத்தை 1658-ம் வருஷம் தொடங்கி, 1665-ம் வருஷம் முடித்து, 1667-ம் வருஷம் அச்சிட்டுப் பிரசுரம் செய்தார். இந்தக் காவியத்தின்பேரில் அவருக்கு வந்த வரும்படி ஒருதடவை 5-பவுன், மற்ருெருதடவை 5-பவுன் ஆகமொத்தம் 10-பவுனுக்கு அதிகமில்லை. ஆசிரியர்களின் புஸ்தக விற்பனையை என்னென்று கூற? இலவசத்தில்போகும் நூல்களே அதிகம்! ஆகிலும், இங்கிலீஷ் வேதாகமத்தையும், ஷேக்ஸ்பியருடைய நூல்களையும் தவிர, பூங்காவனப் பிரளயத்துக்கு ஒப்பாக, பலகோடி பதிப்பு கண்டதும், பல்லாயிரம் பண்டிதர்களுடைய வியாக்கியானம் கொண்டதும், பலநூறு பாஷையில் மொழிபெயர்ப்புண்டதுமான நூல்கள் உலகத்திலே கிடையாது. 1865-ம் வருஷம் இதை லத்தீன் பாஷையில் திருப்பி, அதன்பின் கிரேக்கு, பிராஞ்சு, இத்தலிய, டச்சு, ஜெர்மன், அர்மினியன், ஸ்பானிஷ், போர்த்துகீஸ், ருஷிய, சுவிதிஸ், ஐஸிலாண்டு பாஷைகளில் திருப்பினதுமாத்திரமல்ல, தமிழிலும் "ஆதி நந்தவனப் பிரளயம்" என்னும் பேரால் இக்காவியத்தின் கருப்பொருளை ஸ்ரீமான் வேதக்

---

வைத்தியரிடம் மருந்து கைவசமிருந்தாலும், பணம் வாராதென்று தோன்றினல், சீக்கிரம் மருந்து செய்து கொடுக்கிறேன் என்பார். இது அவரது வயிற்றுப் பிழைப்புத் தந்திரம். நற்சாக்ஷிகள் பெறவேண்டிய இடத்தில் தருகிற சிரேஷ்ட மருந்துகளை மற்றவர்களுக்கு அவர் கொடுப்பது அபூர்வம்.

கண்ணு என்பவரும், "பரதீச உத்தியான நாசம்" எனும் பேரால் இக்காவியத்தின் ஆதிகாண்டத்தை ஸ்ரீமான் யோவான் சாமுவேல் என்பவரும், மற்றொருவர் "பூங்காவனப் பிரளயம்" என்ற பேரால் அகவற்பா ரூபமாகவும் செய்திருக்கிறார்கள். இத்தமிழ் நூல்கள் இப்பொழுது கிடைக்கவில்லை. ஃ

மில்ற்றனரின் சரித்திரத்தில் இன்னொரு விநோத விருத்தாந்தமுண்டு. அவருடைய ஜென்ம பூமியாகிய இங்கிலாந்து தேசம் அக்காலத்தில் இரண்டு கட்சிப்பட்டு, அரசனும் குடிகளும் ஐக்கியமில்லாமல் ஒருவரோடொருவர் போர் தொடுத்து சுதேச கலாதிகளால் தேசம் திண்டாடித் தவித்தபின் கடைசியாய்ப் போர்க்களத்தில் குடிகள் அரசனைச் சிறைபிடித்து விசாரணை செய்து சிரச்சேதம் பண்ணித் தாங்களே குடியரசாய் நடத்துவதாயினர். இந்தத் துரைத்தனத்தில் மில்ற்றனரும் ஒரு தரும கர்த்தாவாய் ஏற்பட்டு, குடியரசை ஸ்தாபித்த மகான்கள் ஈட்டிப்போரில் நடத்தின நடவடிக்கைகளை இவர் எழுத்தாணிப் போரில் சரியென்று ரூபித்து வர, இவ்விதமாய் விற்—போரும் சொற்போரும் வெகு விரைவுடன் எழும்பிப் பாய்ந்தன. பிறகு குடியரசு சிதைந்து மீண்டும் முடியரசு தொடங்கி, 1660-ம் வருஷம் இரண்டாவது சார்லஸ் ராஜன் பட்டத்துக்கு வந்தபோது முந்திய குடியரசைச் சேர்ந்தவர்களுக்கு வாரண்டுகள் பிறந்தன. இதில் மில்ற்றனுக்கும் வாரண்டு வந்தது. அதற்குத் தப்புவிக்க எண்ணித் தமது உற்றார் உறவினரை வரவழைத்து, தாம் இறந்து போனபாவனையாக ஒரு பொய்ப்பாடை கட்டச்சொல்ல, அப்படியே சுற்றத்தாரும் சிநேகிதரும் அழுது தொழுது பொய்பாடையுடன் பின்நடக்க, பிரேத பூசைக்காரர் பொம்மை மில்ற்றனை சவப்பெட்டியோடு கொண்டுபோய் சமாதி செய்து விடவே, ஊரெங்கும் மில்ற்றன் இறந்து போனார் என்று பெரும் பேராய்க் கிடந்தது. ஆகவே, வாரண்டு சேவகருக்கு மில்ற்றனைத் தேடிப் பிடிக்கவேண்டும் என்கிற புத்தி தோன்றவில்லை. இந்த ஸம்பவம் மில்ற்றன் நன்றாகக் கண்பார்வையுடன் இருந்த காலத்தில் நடந்ததாகும். இதற்குப் பிறகு மில்ற்றனரும் கண்ணொளி மறைந்து விட்டபடியால் அவர் வீட்டை விட்டு வெளியே வரவும் செலவிருக்கவில்லை. ஃ

இப்படியாக, குடியரசைச்சேர்ந்தவர்களிலே மில்ற்றனர் ஒருவர் தவிர, மற்றனைவரையும் இழுத்துப் பறித்துக் கழுத்தைத் தறிக்கிறதும், கழுவில் போடுகிறதுமாய்க் காலங் கழிந்தபின், மத்தியில்

---

தனது துயரமும் சகிப்பும் எல்லை மீறி விடும்போது, தன் உறுதியும் பொறுமையும் எத்தகைய மேன்மை கொண்டிருப்பினும், அவற்றை மறந்து வேறு நிலையிலாகிறான்!

ஒரு பேச்சு உலாவத்தொடங்கி, "மில்ற்றன் இன்னும் சாகவில்லை ; செத்தது வைக்கோல்புரி மில்ற்றனே ; உயிருடன் இருக்கிறது ஜான் மில்ற்றன்"—என்று சத்தம் பரவி, இருந்திருந்து இந்தச் சத்தம் அரண்மனைக்கும் எட்டி அரசன் காதிலும் பட்டது. அந்த அரசன் இதைக் கேள்விப்பட்டவுடனே குலுங்கக் குலுங்க நகைத்து, தலைபிழைக்கும்படி மில்ற்றனர் பண்ணின சம்பிரதாயத்தை மெச்சி, அவர் அச்சமயத்தில் கண்தெரியாத விருத்தராய் இருந்த படியால், கொல்லுவதைவிடக் கொல்லாமல் விடுவதே கொடிய தண்டனையாயிருக்கும் என்று சொல்லி அவரை உயிர் பிழைக்க விட்டானாம். கண்தெரியாமற்போன காரணத்தால் அவர் தலை தப்பும்படியாயிற்று போலும்! ஆகவே, மில்ற்றனர் கண் தெரியாத நிலையிலிருந்து கொண்டு பூங்காவனப் பிரளயம் பாடி முடித்தது சார்லஸ் ராஜன் பண்ணின புண்ணியம் என்று ஒரு வித்வான் சொல்லுகிறார். அதுவும் உண்மையே.

ஃ

ஜான் மில்ற்றன் தாம் செய்த பூங்காவனப் பிரளயம் என்ற நூலின் முதல் இரண்டு காண்டங்களிலும், பாதாள இருளுக்கு இறங்கி அதை விவரித்தபின், மூன்றாவது காண்டத்தில் பரலோக ஒளிக்கு ஏறி அதை விவரிக்கத் தொடங்குகையில், தமது கண்ணொளி மங்கினதைக் குறிப்பித்து, கல்லும் உருகத்தக்க குரலோடு அங்கலாய்த்து, தமது ஊனக்கண் ஒளி மழுங்கினாலும் ஞானக்கண் மிகத்தெளிந்து காணாத காக்ஷிகளைக் கண்டறிந்து விவரிக்கும்படி அருள்தேடிப் பரஞ்சோதியை நோக்கிப் பிரார்த்திக்கின்றார்.

ஃ

உயிரளிக்கும் உன்னொளியை உணர்ந்துநான் தேடிவந்தேன்
தேடிநான் அடையவந்தேன் தேடாய்நீ எனது கண்ணை;
இமைத்திமைத்துச் சிமிழ்த்தாலும் எவ்வொளியும் காணுமல்
பாழிலே உழலுகின்ற பாவிகண் அவிந்து ஐயோ!
விடியாத இருள்மூட விதியேயோ! விதியேயோ!!

பரஞ்சோதி என்னெஞ்சில் புகல்போல நீ உதித்து
மனக்கண்ணின் தத்துவங்கள் மருள்நீங்கத் தெளிவித்து
மானிடரின் கண்ணுக்கு மறைவான இரகசியத்தை
கண்ணுள்ளோர் காட்சியைக் கடந்த மெய்க்கருப்பொருளை
கண்டுநான் விரித்துரைக்கக் காட்சி தாராய் உன் சரணம்!

ஃ

அண்டபிண்ட மனைத்தையும் அறுத்துப் புகுந்து ஊடாடி அவாந்தர வெளியிலெங்கும் அநவரதம் உலாவுகின்ற திவ்விய எண்

---

சிலரை வீட்டில் சேர்த்தால் எவர்கள் நமக்கு முக்கியஸ்தர்களோ அவர்களை நமக்கு விரோதிகளாக்கிக் கொள்ளி வைத்துவிடுகிறார்கள்.

ணங்களை வெளிப்படுத்தும்படியாக மில்ற்றனர் ஆய்ந்துதேடி அகப்படுத்திக் கட்டிவைத்திருக்கும் சீரிய கூரிய தீஞ்சொற்களானது பாட்டிலே ஒன்றின்பின் ஒன்றாய் உருளத் தொடங்கிவிட்டால் கடல் மடையுடைந்த வெள்ளம்போல் கங்குகரை காணுமல் பெருக்கெடுத்து, கண்ணையும் காதையும் கருத்தையும் பறித்துக்கொண்டோடுமாதலின், அவைகள் பிரவகிக்கிற பிரளயத்துக்குச் சமாளித்து நிற்க மாட்டாமல் இங்கிலீஷ் பாஷையுங்கூடத் தட்டுக்கெட்டுத் தடுமாறிப் போகிறது என்று அடிசன் நூலாசிரியர் (Addison) சொல்வதை ஜான்சன் பண்டிதரும் (Dr. Johnson, Life of Milton) "ஆம்" என்று ஸ்திரப்படுத்திப் புகழுகிறார்.

ஃ

கடைசியாக, அவர் 1674-ம் வருஷம் நவம்பர்மீ 8உ ஞாயிற்றுக்கிழமையன்று பரமபதமடைந்தார். அவருடையசரீரம் ஜைல்ஸ் தேவாலயத்தில் சேமிக்கப்பட்டது. 1737-ம்வருஷம் உவெட்மினிஸ்டர் என்னும் தேவாலயத்தில் மில்ற்றனுருடைய சாயலாய் தலையும் செய்து நிறுத்தி, கல்லும்வெட்டி வைக்கப்பட்டது. மக்காலே பிரபு சொல்லுகிறபடி மில்ட்டனுடைய பெயரைக் கேட்டாலும் செவிக்கின்பம்; கண்டாலும் கண்ணுக்கு இன்பம்; அவருடைய கருத்துகள் கற்பகச் சோலையிலிருந்து இறங்கிவந்த அமிர்த புஷ்பங்களையும், அமிர்தக் கனிகளையும்போல மனதுக்கு ரஞ்சிதமாயும், உயிருக்கு சஞ்சீவியாகவும் இருக்கின்றன. பின்வரும் செய்யுள் அவரது நிர்மலமான மனக்கருத்தை நன்கு விளக்கும். உத்தம ஆசிரியர்களின் அருமையை உள்ளபடி யுணராமல் அவர்களைத் தாழ்த்திக் கேவலமாய் உரையாடியும் பழித்தும் பேசுபவர்கட்கு அது நல்ல சவுக்கடியுமாகும்.

ஃ

போதாத காலம் வந்து போல்லாத நாறல்வாயர்
என்ன பேச்சு என்ன ஏச்சு எத்தனையாய் என்னை யேசி
அந்தகாரம் எனை வளைந்து ஆபத்துகள் எனைச் சூழ்ந்து
ஆருமற்ற பாவியாக அடியேன் கிடந்தாலும்
எப்போதும் என்தாயே! என்கவியை நீ நடத்தி
என் கவியை சற்சனர்கள் இதமாகக் கற்பதற்கு
சொற்பமாய் படித்தாலும் சற்புருஷர் படிக்க வைப்பாய்!

ஃ

---

வயது வளருந்தோறும் இருவரது அன்பும் வளர்ந்த இடத்தில் தான் அவர்களை இவ்வுலகினின்றும் பிரித்துப் புண்படுத்தும் சோதனையும் அத்துடன் தொடர்கிறது.

இங்ஙனமாக, ஜான்மில்ட்டன் அழியாத புகழுடம்பை நிலை நாட்டி மந்திரநெறி அமைச்சனுகவும், தத்துவஞான சிரேஷ்டனுக வும், இங்கிலீஷ் பாஷைக்கு அலங்கார கிரீடமாகவும், இங்கி லீஷ் சுயாதீனத்துக்கு ஆதிப்பெரும் வீரியனுகவும் கீர்த்தி சிறந் திருக்கிறுர். ஆகவே, இவருடைய நூல்களையும் சரித்திரத்தையும் படித்தும், ஒருவன், இவர் எழுதினபடி உன்னத நூல்களை எழுத யத்தனிக்காவிட்டாலும், அதற்குத் திறன்கூடிப் பொருந்தாவிட் டாலுங்கூட, விசேஷித்த நல்லறிவு வாய்க்கப்பெற்று மிக்க மேதாவியாய் விளங்குவா னென்பதில் தடையில்லை.

## படித்த பெண்டாட்டி!

நன்கு கற்றோர்க்குச் சில வேளைகளில் படித்த மனைவி கிடைப்பதில்லை. கிடைப்பது அவரவர் பாக்கியம். தாரமும் குருவும் தலைவிதிபோல் அமைவது. பெண்கள் படித்த அள விலேயே பிரஸங்கமேடைக்கல்வியும், ஆசிரியத்துவ ஆற்ற லும் பொருந்திவிடுவதில்லை. சில ஆற்றல்கள் பிறப்பிலேயே பொருந்துவன. பொதுவாக, ஊக்கமுடையார்தான் அத னைப் பெறுவது. ஊக்கமற்றுப் பாடசாலைப் படிப்புடனுள்ள பெண்ணுக்கும் படித்த பெண் என்றே பெயர். இங்நிலையில் பெண் தக்க மேதாவிதானு என்பதை விவாகம் செய்து கொண்ட பின்பு தான் காணமுடிகிறது. இவ்வளவு ஆராய்ந் தும் விதிவசத்தால் பள்ளத்தில் விழுந்தவர் எத்தனைபேரோ? பட்டணத்துப் பெண்ணுக இருந்துவிடுவதனுலேயே நாக ரீகமடைந்தவளாய் விடுவதில்லை. பட்டிக்காட்டுப் பெண் என்பதினுலேயே குணசாலியாய் விடுவதில்லை—நாகரீக மற் றவளாய் விடுவதில்லை. பெண்ணுக்கு முக்கியமான சங்கதி நல்லொழுக்கமும்கீழ்ப்படிதலும்உத்தமகுணமும்கல்வியுமே. அதை விவாகத்திற்கு முன்பே பூர்த்தியாய்த் தெரிந்து கொள்ள முடியவில்லையென்று அனுபோகஸ்தர்களும், விவா கம் செய்துகொண்டு பிறகு ஏன் செய்தோமென்று கதறு வோரும் கூறுகிறுர்கள். நல்ல அதிர்ஷ்டமிருந்து தங்கக் கட் டியான கலாவதிகளைக் கணவிகளாக அடைந்த கண்யர் களும் இருக்கிறுர்கள். அந்த அதிர்ஷ்டம் எல்லோருக்கும் அமைந்துவிடுகிறதா? ஆயினும், பொறுத்து முயற்சியோடு ஒரு கை பார்க்கலாம். பிறகு விதிபோல் நடக்கட்டும். அவ் வளவுக்குக் காத்திருக்கப் பொறுமைப்புத்தி வேண்டுமே?

# விருந்தின் ஆரவாரம்.

எத்தனை விருந்துகள், கிச்சடி பச்சடிகள் !
நித்தமும் பால், டீ, காபி, பலகார விமரிசை!
குளிக்க வென்னீர்; உடம்பு தேய்க்க சோப்பு!
பகல் குழம்பு, காய், கறி இரவில் பிடிக்காது!
வேறு ஆகணும்; புசித்ததுமே தாம்பூலம்.

அப்பால் தலையணை, படுக்கை, பகல் தூக்கம்!
மாலை காபி இல்லையா? அது மிகு கேவலம்.
அன்பினர் வருவதரிது; தங்குவதும் சிறிது.

உன்னிடம் உண்ணுதவரே என்றும் நலம் புரிவர், உண்டவரோ மிக மிகப் பகைப்பர். இது உன் சோற்றின்ஒருவிசேஷம் செலவிட்டவன் ஏமாறிய பேதை. பணம் மிகுத்தவன் பக்கமே மதிப்பு.

வெறும் இட்டிலியா? பக்ஷணம் இல்லையா?
இது என்ன காபி? பாலுமில்லை, திக்குமில்லை!
கீரை வகை ஏதுக்கு? உருளைக்கிழங்கு வாங்கு.
வெளியில் போகிறோம்; நீ சமைத்து வை.
இன்னுமா சமையல்? ஏது இத்தனை நேரமா?
குழம்பு நன்றாயில்லை. கறிகாய் ருசிக்கவில்லை.
எதுவும் மிளகாய் நாற்றம்! முறட்டுச்சமையல்
நல்லபாய் தலையணையில்லை; இதேன்ன குடி?
அவர் இரவில்பால்குடிப்பவர்; பால்எங்கே?
இன்று இவர் விரதம்; புது பக்ஷணம் செய்.
இரவுக்கு வயிறுசரியில்லை; காபி வைத்து தா

கைவறண்ட வேளை பல விருந்து வந்திடும்.
ஒருவர்போக, ஒருவர் வந்தபடி இருப்பார்.
முகம் சுருங்கினால் உடனே ஏச்சு, மிகுபேச்சு
ஆன செலவு எவருமே நினையார், இரங்கார்.

விருந்து கடனில், பின்வரும் சம்பளம் சரி.
இட்டவன் இளிச்சவாயன்; திட்டுகளேலாபம்!



## உண்மைக்கல்வி எது ?

உண்மையான கல்வி எது என்பதைப்பற்றிப் பலர் திரிபான அபிப்பிராயங் கொண்டிருக்கின்றனர். கல்வி பள்ளிப் படிப்போடு முடிந்து விடவில்லை. அது இறக்கும் வரை தொடர்ந்துதான் வருகிறது. நிகழ்ச்சிகளையும், எண்களையும் மனப்பாடம் பண்ணுவதோடு கல்வி அமைந்து விடாது. விரிந்த மனப்பான்மையும், ஆழ்ந்த அறிவும், நன்மை தீமையைப் பகுத்துணரும் சக்தியும் கொடுக்கக் கூடியதாகக் கல்வி யிருக்கவேண்டும். சூரிய மண்டலத்தைப் பற்றியோ, உலகத்தின் பூர்வ குடிகளைப்பற்றியோ மட்டும் நன்கு கற்றிருக்கும் மனிதன் தனது சொந்த நலத்தையும், இன்ப வாழ்க்கையையும் பொருத்த விஷயங்களில் ஒரு குழந்தையைப்போன்று ஒன்றுந் தெரியாதவனா யிருக்கலாம். மக்கள் சமூகத்தின் முன்னேற்றத்துக்கும், சாஸ்திரீய அபிவிருத்திக்கும் அவனது கலைஞானம் மிகத் தேவைப்படுவதாயிருக்கலாம். ஆனால், அவனது சொந்த நலத்துக்கு, இது சிறிதளவும் பிரயோஜனப்படவில்லை.

நம்மிற் பெரும்பாலோர் மனிதர்களாக மட்டுமே இருக்கின்றோம். நமது வாழ்க்கையை இன்பகரமாகவும், பிரயோஜனப்படத்தக்கதாகவும் நடத்தவே முயல்கின்றோம். இம்முறைக்குத் துணை புரிவன எவையென்று கண்டறிந்து அவற்றைக் கற்க விரும்புகின்றோம். சிறு வயதில் பள்ளிக்கூடத்தில் எழுதப் படிக்கத் தெரிந்துகொண்டோம். இப்பொழுது பரந்த உலகில் அவற்றைவிடப் பெரிய விஷயங்களிருப்பதாக நமக்குத் தெரிகிறது. உலக அநுபவமே உண்மைக் கல்வியாம்.

தமிழ் நேசன்.



## சினிமாவின் உபயோகம்

சினிமாப் படங்களைத் தயாரிப்பவர்கள் மக்களுக்குக் கல்வியறிவைப் புகட்டுவதாகக் கருதாமலே கோடிக் கணக்கானவர்களுக்கு அறிவை ஊட்டி வருகின்றனர். பொது அறிவும், உலக சமாசாரங்களும், விரிந்த மனப்பான்மையும் சினிமாக் காட்சிகளைக்கண்டு களிக்கும் ஜனங்களுக்கு நல் விருந்தாயுள்ளன. உலகத்தில் ஒரு பாதி எப்படி யிருக்கின்றது என்பதை மற்றொரு பாதிக்கு அறிவிப்பது சினிமா காட்சிதான். ***

*** மனித உணர்ச்சிகள்தாம் படக்காட்சியில் வெளிப்படுகின்றன. தாய் குழந்தைக்காகவும், கணவன் மனைவிக்காகவும், காதலி காதலனுக்காகவும் தியாகம் செய்வது ஒரு சிறந்த குணம். இதே மாதிரி ஏனைய சிறந்த குணங்களையும் சினிமாவில் பார்க்கின்றோம். ***

*** வாழ்க்கையின் பல துறைகளையும் நமக்குக் காட்ட முன் வந்தது படக் காட்சிதான். நன்மையையும் தீமையையும் திரையில் நேரில் காண்கின்றோம். அதன் மூலம் நாமே நம்மைக் காப்பாற்றிக்கொள்ள வழியேற்படுகின்றது. ***

*** வாழ்க்கையின் உண்மைகளைப் பார்க்க மறுப்பவர் மூடர்களும் மோசக்காரர்களும் ஆவர். ஆலையில் உழைக்கும் தொழிலாளியும், வீட்டுக்குள் அடைபட்டிருக்கும் பெண்ணும், அடுப்படியில் சமையல் செய்யும் வேலையாளும், காரியாலயத்தில் கண்ணுங் கருத்துமாயிருக்கும் வாலிபனும் இதுவரை கேட்டிராத விஷயங்களை சினிமா அவர்களுக்கு விளக்கியிருக்கின்றது.

தமிழ் நேசன்.

# நம்மவர் பரம்பரை யுணர்ச்சி.



இவ்வுலகில் வெண்மையான கடிதத்திற்குச் சமானமான மனத்துடன் எவரும் பிறக்கவில்லை. தேக வொற்றுமை யுடன் பிறப்பதைப்போலக் குண வொற்றுமையும் அவனிடத்தே யிருக்கும். "மகனறிவு தந்தை யறிவு" என்னும் பழமொழி மநுவின் காலத்தியது.

ஃ

"அந்தணத் தந்தைக்கும் வைசியத்தாய்க்கும் பிறந்த மகன் வைத்தியனாவான்" என்று அறநூல் வகுத்தவர் கூறுவது பரம்பரை யுணர்ச்சிக்கொள்கையை வற்புறுத்தும். வியாதியை இன்னதெனத் தெரிதற்குப் பிராமண உணர்ச்சியும், இரணவைத்தியஞ் செய்வதற்கு வைசிய வுணர்ச்சியும் வைத்தியனுக்கு இன்றியமையாக் குணங்களெனக்கொண்டே அவ்வாறு அவர் கூறினர் போலும்.

ஃ

சகுந்தலை தேவதாசியாகிய மேனகையின் குணத்தை விடவேயில்லை. சகுந்தலை பிறவிமுதல் பிராமணருடன் வாழ்ந்து வந்தும், க்ஷத்திரியனான துஷ்யந்தன் மீது கண்டவுடன் காமுற்றதால், தாயான மேனகையின் குணம் தனக்கிருப்பதைத் தெரிவித்துக் கொள்கின்றாள். அன்றியும், தாசியின் மகனாயுள்ளவன் தன் அன்னையைப்போல் பல இடங்களிலும் காமுற்று அலைதல் கண்டிருக்கின்றோமன்றோ?

ஃ

ஆகவே, அறிவிற்கும்—குணத்திற்கும் சம்பந்தமில்லை. அறிவிலான் நல்லொழுக்க முடையவனாதலும், அறிவுடையோன் தீயொழுக்க முடையவனாதலும் இயல்பாயிருக்கின்றது. அறிவு பரம்பரை யுணர்ச்சிக்குத் தக்கபடிமாறுகிறது. முக்கியமாய் ஒழுக்கம் பரம்பரை யுணர்ச்சியினாலேயே ஆக்கப்படுகின்றது. "ஒருவன் எவ்வளவோ கொலைகளையும் பழி பாவங்களையும் புரிகின்றான். ஆனால், தன் ஜாதியார் மறுத்திருக்கிறதும், தனக்கு வழக்கமில்லாததுமான மாமிசம் உண்ணுதலை மட்டும் அருவருத்தொதுக்குகின்றான். இங்ஙனம் ஒதுக்கியது ஜீவகாருண்யம் நோக்கியேனும் நற்குணத்தை விர்த்தி செய்துகொள்வதற்கேனும் அன்று. மாமிசவிலக்கின் பரம்பரை யுணர்ச்சியே அவனை உண்ணுதவாறு தடுக்கும் உணர்ச்சியைத் தோற்றுவிக்கின்றது. உண்மையாக மாமிஸ பக்ஷணியாயிருக்கும் ஒருவன் அதன் கொடுமையும் பாவத்தையும் நோக்கி அதனைச் சீவ காருணியத்தோடும் விலக்கி விடுவானாயின், அவனுக்குள்ள விசேஷ உயர்வு, பரம்பரை யுணர்ச்சியின் வழியாக மாமிஸத்தை விலக்கியிருப்பவனுக்கு உண்டாகமாட்டா.

ஃ

பரம்பரை யுணர்ச்சியினால் ஒவ்வொரு தேசத்தவர்க்கும் தனியான

---

பிறரின் விதி வசத்திற்கு இரங்குவதே நீதி. அவமதிப்போருக்குத் தெய்வத்தின் கூலி என்றுவது வரும். தவறாது.

நடவடிக்கைகள் இருக்கின்றன, அந் நடவடிக்கைகள் தேசத்தின் குளிர் வெப்ப நிலையினாலும், சமய உணர்ச்சி யினாலும், தொடர்ந்துவரும் வழக்கங் களினாலும் தோன்றுகின்றன.

ஃ

இந்தப் பாம்பரை யுணர்ச்சி முக் கியமாய் நம்மவரின் மதவுணர்ச்சி யிலும், பொது நடவடிக்கைகளிலுமே பெரிதும் விளங்கும். பரம்பரை யுணர்ச்சியானது மனிதர் ஒரு வித மாக எண்ணுதலையும், ஒருவகையான ஒழுக்க முடைமையையும் உண்டாக்கு கின்றது. ஃ

நம் முன்னோர்கள் செய்த நூல் களைப் போன்றே இப்பொழுது நாமும் நூல் செய்ய வல்லுநராகின் றோம். புதிய வகையான நூல்களைச் செய்ய ஆற்றல் அற்றவர்க ளாகின் றோம். ஒரு தமிழ்ப் புலவன் புராணம் பாட ஆற்றலுடையவனாகின்றானே யொழிய, இயற்கைப் பொருளை யுள்ள வாறு வர்ணித்துரைக்கத் திறமையி லனாகின்றான். இதுவும் பரம்பரை ஞானத்தைப் பற்றியதே.

ஃ

அந்தந்த ஜாதிக்குணங்களையே அவரவர் விரும்புகின்றனர். தம்மினும் இழிந்த ஜாதியாருடன் கலக்கப் பிரி யப் படுவதில்லை. ஜாதிக்கொள்கைக்கு வெகு கௌரவம் கொடுக்கப் படுகின் றது. இவ்வுணர்ச்சியும் பரம்பரை யுணர்ச்சியே. ஃ

பெண்களை ஆடுமாடுகளாக நினைக் கும் பரம்பரை யுணர்ச்சியாற்றான் காதலித்தபின் மணம் என்பது நீங்கி, இளமை மணம் எங்கணும் ஊன்றிப் பரவியது. பெண்களை அடிமைகளாக நினைத்த உணர்ச்சியால் தான் ஒருவன் தனக்கு எத்தனை வேண்டுமோ அத் தனை ஸ்திரீகளையும் மணக்கின்றான். பிறகு அவர்களுக்குச் சுதந்திரம் கொடுக்க முடியவில்லை. ஏனெனில், அச்சுதந்திரத்தை அரிவையர் தீய வழியில் பாராட்டுவா ரென்றே. பெண் ஆண்மகனுக்கு அஞ்சுவதும் பரம்பரை யுணர்ச்சி வழியில் வந்த பழக்கமே. பெண்மக்கள் தம்மை அடிமைகளாக எண்ணிக் கீழ்நோக்கி னமையும் வெகு நாட்களாகத் தொடர்ந்து பற்றிய பரம்பரை யுணர்ச்சியினாலேயே. இக்காலத்தில் நம்மவரின் க்ஷீண தசையைப் பற் றிக் கூறுவோரெல்லாம் பரம்பரை யுணர்ச்சியினாலேயே எதுவும் நடக் கின்றதென்று அறியக்கடவர். முற் றமே பரம்பரை யுணர்ச்சியைப் போக்காமல் அதிலுள்ள தவறுகளையும் பிழைகளையும் கண்டறிந்து தம்மைத் தாமே சீர்திருத்திக்கொள்வதே முற் போக்குக்கான முதல் வழியாம்.

---

"காடு காத்தவனும், கச்சேரி காத்தவனும் பலனடைவான்" என்பார் கள். காடு வயல் காத்தவன் வரி செலுத்த வழியின்றித் திகைக்கிறான்! கச்சேரி காத்துப் பிழைத்துக் கொள்ளஎண்ணிப் பெரிய படிப்பு படித்துவிட்ட வர்களோ வேலை கிடைக்காது திண்டாடுகிறார்கள். படித்துவிட்டு அலைப வரைவிடக் கூலி வேலை செய்வோர், காய் கறி விற்போர், கைத்தொழில் பழகி னோர், கடை வியாபாரம் தெரிந்தோர் இவர்களின் நிலைமை எவ்வளவோ மேல்! இங்கிலீஷ் கோணல் எழுத்து படிக்காதவர்கள் கவுன்ஸிலர், சேர்மன் பதவிகளெல்லாம் பெறும்படி ஏராளமான திரவியத்தை வர்த்தகவழியில் குவித்துவிட, ஈஸ்-பீஸ்-இங்கிலீஷில் தேறியவர்களோ காலணா உத்தியோக மும் கிடைக்காமல் திண்டாடுகிற காலமாய் விட்டது! என் செய்வது ஈசுவரா!




(462-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஷேக்ஸ்பியரின் வாக்குகள்.

722. Now, God be praised! that to believing souls; Gives light in darkness, comfort in despair.

இப்பொழுது கடவுளைப் புகழ்ந்திட வேண்டும். நம்பிக்கையுள்ள உயிர்களுக்கு இருட்டில் வெளிச்சத்தையும், சோர்வுற்ற காலத்தில் ஆறுதலையும் கொடுக்கிறார்.

723. What cannot be eschew'd must be embraced.

எதைத் தடுக்க முடியவில்லையோ, அதைத் தழுவிக் கொள்ளவேண்டும்.

724. How poor they are that have not patience.

பொறுமைஇல்லாதவர்கள் எவ்வளவு ஏழ்மையானவர்கள்!

725. Now good digestion wait on appetite, And health on both!

நல்ல ஜீரணசக்தி பசியைப் பொறுத்துள்ளது. ஆரோக்கியம், பசி, ஜீரணசக்தி ஆகிய இரண்டிலும் சார்ந்துள்ளது.

726. I never did repent for doing good, Nor shall not now.

நல்லதைச் செய்வதில் நான் எப்பொழுதும் விசனப்பட்டதில்லை. இப்பொழுதும் விசனப்பட மாட்டேன்.

727. God send every one their heart's desire!

அவரவ ரெண்ணப்படி ஒவ்வொருவருக்கும் கடவுள் கொடுப்பாராக!

728. O! let us yet be merciful!

இன்னமும் நாம் இரக்க முள்ளவர்களாவே இருப்போம்.

729. Good things should be praised.

நல்ல விஷயங்களைப் புகழ்ந்திட வேண்டும்.

730. Charity itself fulfils the law; And who can sever love from charity?

தருமம் விதியை நிறைவேற்றுகிறது. தருமத்திலிருந்து அன்பை யாரால் பிரித்திடக் கூடும்?

731. He who the sword so heaven will bear; Should be as holy as severe.

எவரொருவர் தேவலோகத்தின் கத்தியைத் தரித்திருக்கிறாரோ அவர் தெய்வீகம் பொருந்தியவாக இருக்க வேண்டும்.

732. This above all; to thine own self be true, Aud it must follow, as the night the day,

---

ஏமாற்றியே உயர்ந்த நிலை கொண்டோர்க்கு, தம்மிடம்ஏமாறுதவர்களைக் காணில் சகிப்பதில்லை. இப்படி சில ஜனத்தலைவர்களு முண்டு.

Thou canst not then be false to any man.

எல்லாவற்றிற்கும் உயர்ந்தது நீ உண்மையாக நடப்பதே. அப்போது இயற்கையாகவே பகலுக்குப் பின் இரவு வருவதுபோல மற்றவர்களிடம் பொய்யாக நடந்து கொள்ள மாட்டாய்.

733. Heaven is above all; there sits a judge; That no king can corrupt.

எல்லாவற்றிற்குமேல் தேவலோக மிருக்கிறது. அவ்விடத்தில் அரசர்களாலும் கெடுக்க முடியாத தொரு நீதிபதி இருக்கிறார்.

734. Ceremony was but devised at first; To set a gloss on faint deeds, hollow welcomes, Recanting goodness, sorry ere 'tis shown; But where there is true friendship, there needs none.

தெளிவற்ற செய்கைகளையும், உள்ளன்பு அற்ற வரவேற்பையும், நல்லதைக் கெடுக்கும் செய்கைகளையும், ஒழுங்கு செய்வதற்கே சடங்குகளை முதன் முதலில் ஏற்படுத்தப் பட்டன. ஆனால், உண்மையான சிநேகம் இருக்கும் வரையில் எச்சடங்கும் தேவையில்லை.

735. O Lord! that lends me life, Lend me a heart replete with thankfulness.

எனக்கு வாழ்க்கையைக் கொடுத்த மகாப் பிரபுவே! (பிறர் செய்த நன்றிக்கு) வந்தனம் ததும்பிய இருதயத்தையும் கொடுக்கவும்.

736. There are more things in heaven and earth, Than are dreamt of in your philosophy.

உன்னுடைய தத்வ ஆராய்ச்சியில் நினைத்ததைவிட அநேக விஷயங்கள் தேவலோகத்திலும் இவ்வுலகத்திலும் இருக்கின்றன.

P. G. தலசேகரன்.

"மனோரஞ்சினி விலாஸ்"

## சில தபாற்காரர்களின் தந்திரம்.

சில தபால்காரர்கள் தாங்கள் வேறிடத்திற்கு மாற்றுதலாகவோ, ரஜா வாங்கிக் கொள்ளப்போகிற சமயமாகவோ இருக்கும்போது, தாங்கள் தபால் தருகிறவர்களிடமிருந்து நாளைக்குக் கொண்டு வந்து கொடுப்பதாய்க் கூறிப் பத்திரிகை புஸ்தகங்களைப் பெற்றுக் கொண்டு, கடனும் வாங்கிக் கொண்டு கம்பி நீட்டிவிடுகிறார்கள். ஆகவே, இவர்கள் கடன், இரவல் கேட்கும்போது நாளைக்கு மாற்றுதலாகிறீர்களா, ரஜா வாங்கிக் கொள்ளப் போகிறீர்களா என்று கேட்பது நலம். அத்துடன் அவர்கள் பெற்றதற்கு ஒரு ரசீது பெறின் நலம். அதைப் பிறகு அதிகாரிகளிடம் காட்டவும் உதவும். இதில் அவர்களின் உண்மைக் குணம் தெரிந்துவிடுகிறது.

# இன்ஷியூரன்ஸ் ஏன்?



இந்தியாவில் பிறக்கும் லக்ஷம் குழந்தைகளில் சரிபாதி 10-வயதுக்குள் இறந்து விடுகின்றன. அவைகள் தன்னைச் சுமந்து பெற்ற அன்னைக்கு யாதொரு பிரயோஜனமும் அளிக்காமற் போகின்றன. இவற்றில் 25-பிராய வாலிபமுள்ளவர் 39,973-பேரே. இத்தொகை 30-வயதுக்குள் 35,831-க்குச் சுருங்கிவிடுகிறது. இவர்களைவரும் இன்ஷியூர் செய்வதாக வைத்துக்கொண்டால் 35-வது 40-வது வயதிலும் இன்ஷ்யூரன்ஸ் தொகை அதிகரிக்கக் கூடியவர் முறையே 31,533-ம் 27,136 மாவர். 45-வயது எட்டும் 22,803-பேரை இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்காரர் பெரும்பாலும் புறக்கணிக்கிறார்கள். ஆதிஜனத் தொகையில் 7-ல் இரண்டு பாகமே 50-ஆம் வயது காண்கிறார்கள். 55-வது வயதில் 15,000-பேர் உபகாரச் சம்பளம் பெற்று விலகுவது உன்னைப்பிடி என்னைப் பிடியென்றாகி விடுகிறது. இவற்றில் 11,229-பேருக்குத்தான் ஷஷ்டி பூர்த்தி செய்து பார்க்கமுடிகிறது. 70-வருஷத்திய அனுபோகத்தைத் தன் இனத்தாருக்குக் கொடுத்து உதவக் கூடியவர் 5,000-பேரே. இவர்களில் நூற்றுக்கொருவரே 80-வது வயதுக்கு எட்டிப் பார்க்கிறார்கள். இன்னும் ஆச்சரியமென்ன வென்றால், பிறந்த லக்ஷம் குழந்தைகளில் 90-வயது இருந்தேனென்று சொல்லக்கூடியவை பதினொன்றே. அப்புறமா? அப்புறம் எழுத வெட்கமாயிருக்கிறது.

ஃ

எனவே, 18-வயதுக்கு மேற்பட்ட எவரும், தமக்கு ஒரு புது உத்தியோகம், ஜீவனம் தேடிக்கொள்ளப் பிரயத்தனப்படுவதைப் போலவே, லைப் இன்சூரன்ஸ் கம்பெனியிலும் தங்களைப் பதிவு செய்து கொண்டுவிட சிரத்தைப் படவேண்டும். முக்கியமான இந்த சங்கதியை வெகு பேர் மறந்து போயிருப்பதால், அவர்களின் யௌவன பருவம் கடந்தபின்னர் அவர்களும், அவர்களின் காலத்திற்குப் பிறகு அன்னோரது குடும்பங்களும் படும் கஷ்டம் சொல்லி முடியாது. வயது அதிகமாய் விடும்போது லைப் இன்சூரன்ஸில் சேர்ந்து கொள்ளமுடியாமற் போய்விடுகிறது. நாம் லைப் இன்சூரன்ஸில் சேருவதற்கில்லாமற் போய்விட்டதே யென்று வியாகூலப் படுவோர் எத்தனையோ பேர். அவர்கள் சேருவதற் கில்லாமற்போனது லைப் இன்ஷியூரன்ஸின் விஷயங்களை அவர்கள் அதுவரை அறியாமல் இருந்து விட்டதேயாகும். இவர்களைப் போலவே இன்னும் கணக்கற்ற பேர்கள் லைப் இன்ஷியூரன்ஸ் என்ன என்பதைப் பற்றிய ஞானமே யில்லாமல் இருந்து வருகிறார்கள். இவர்கள்

---

கல்யாணத்திற்கு ஆரவாரமாய்ப் புறப்படுகிறார்கள். புறப்பட்ட தம்பதிகளுக்குப் பிற்கால பாக்கியமும் தலைவிதியும் நல்லதாக அமையவேண்டுமே தேவா! கல்யாணத்திற்குச் சென்றோரும் கலக மனஸ்தாபக் குறைகளின்றித் திரும்பவேண்டுமே!!

தங்களின் குடும்பங்கட்கு நன்மை செய்யவேண்டுமென்ற சிரத்தை யில்லாதவர்களென்று சொல்ல முடியுமா? தங்களின் அறியாமையாலும், லைப் இன்ஷியூரன்ஸ் விஷயங்களைத் தீர விசாரியாமையாலுமே தங்களின் குடும்பத்திற்குச் செய்யக்கூடிய தொரு பெரிய நன்மையைச் செய்வதற்கில்லாமல் வயோதிக வயதுக்கும் வந்து விட்டார்கள். தாங்கள்தான் ஏமாறினும், தங்களின் அனுபவத்தை மற்ற குடும்பத்தினருக்குத் தெரிவித்து அவர்களையாவது இன்ஷியூரன்ஸில் சேர்ந்து கொள்ளும்படி செய்வது கடவுளுக்குப் பிரீதியான செய்கையாயும் ஒரு புண்ணியமாகவும் இருக்கும். மொத்தமாகச் சொல்லவேண்டுமெனில், ஒரு குடும்பத்தில் பத்துபேர் இருந்தால் அந்தப் பத்து பேரும் லைப் இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளில் சேர்ந்துவிட வேண்டும். அப்பொழுது தான் அக்குடும்பத்திற்கு மதிப்பும் விருத்தியும் க்ஷேமமும் உண்டாகும். இதைப் பற்றி இன்றைக்கே நீங்கள் யோசித்து ஒரு முடிவு செய்யுங்கள். இங்கு ஒரு எச்சரிக்கையும் முக்கியமாகிறது. வைத்திய பரிசோதனையின்றிச் சேர்த்துக் கொள்ளக்கூடிய ஒன்று—ஒன்றரை ரூபாய் மாத சந்தாவாகவுள்ள இன்சூரன்ஸ் கம்பெனிகளை நீடித்து நடக்குமென்று சொல்லுவதற்கில்லை. அவற்றில் சேர்ந்து ஏங்கினோர் பலர். எனவே, தக்க இடமறிந்து சேருக.

☞ லைப் இன்ஷியூரென்ஸில் சேருவதற்கான விவரங்களுக்கும், நூல் புஸ்தகத்திற்கும் திரிச்சிறைப்பள்ளி தெப்பகுளம் போஸ்ட் 'ஓரியண்டல் கவர்ன்மெண்ட் செக்யூரிடி லைப் இன்ஷியூரன்ஸ் கம்பெனி'க்கு எழுதிக்கொள்க.

## சாந்தமாகக் கற்றுக்கொள்.

அவர்கள் செய்தது பெரிய துரோகமென்று நீ கண்டுகொண்டாலும், அதைப் பகையில் வளர்க்காமல் அவர்களின் கெடுமதிக்குப் பரிதபிப்பவனாக நடந்துகொண்டு போய்விடு. அத்துரோகிகளின் முகங்களும் பிறகு மண்ணில் புதைக்கப்படக்கூடியதே யாதலின் ஏதோ ஜீவனுடன் அவர்கள் உள்ளவரையில் நேசமாகவே நடந்துவிட்டு நீ பரிசுத்த மனமாய்ச் சாந்தமாகச் சென்றுவிடு. அவர்கள் உனக்குச் செய்த துரோகத்தின் பாவத்தை அவர்களே அனுபவித்துக்கொள்ள விட்டுவிடு. நீ எவ்வளவு சாந்தமும் பரிசுத்தமுமா யிருக்கிறாயோ அதற்குத் தக்கபடி அவர்கள் தங்களின் துரோகச் செயலுக்காக அதிக கடுமையாய்க் கடவுளால் சோதிக்கப்பட்டுத் துன்பமடைவார்கள். கடைசியில் தங்கள் துரோகத்தால் தாழ்ந்தே போக, நீயோ உன் பரிசுத்தமே காரணமாக உயர்நிலைகொண்டு பரிமளிப்பாய். ஆகவே, உன்மட்டில் நீ சாந்தமாயிருக்கக் கற்றுக்கொள். என்றும் பரிசுத்தனாயிரு. அதுவே உன் சமாதான பாதை.




## மாமி வீட்டுப் போதனை.

சில மருமக்கள் (ஆண்) தாங்கள் கலியாணஞ் செய்துகொண்ட பெண்களின் பெற்றோரைத் தங்கள் பெற்றோராகவே கருதி, தங்களுடைய வரவு செலவு கணக்குகளை அவர்களிடம் சேர்மையான மனதுடன் யாதொன்றும் மறைக்காமல் சொல்லுகிறார்கள். ஆனால், அந்த மாமன் மாமிமார்களோ சகலத்தையும் கேட்டுக்கொண்டு, (புற்களுள் மறைந்திருக்கும் பாம்புபோல்) வெளிக்கு அந்த மருமக்களுக்கு நல்ல உபதேசங்களைக் கூறிவிட்டு, தங்கள் பெண்களைத் தனிமையாகக் கூப்பிட்டு அவர்களின் கணவர்கள் தங்களுடைய பெற்றோர், உற்றோர் முதலியவர்களுக்குச்செய்து வரும் அற்ப சொற்ப உதவிகளை அடியோடு நிறுத்திவிட முயற்சிக்கும்படி தலையணை மந்திரம் ஓதிவிடுகிறார்கள். பெண்களும் இதைக்கேட்டுப் புருஷர்களிடம் வீண் சச்சாவு செய்துகொள்ளுகிறார்கள். இப்படிப்பட்ட மாமன் மாமியோர், தங்கள் குமாரத்திகளை மணந்ததுமுதல் அந்த மருமக்களுக்கு யாதொரு சுயாதீனமும் கிடையாதென்றும், தங்களின் சொற்கேட்டு நடப்பதுடன் அவர்களுடைய பெற்றோர், உற்றோருக்கு யாதொரு உதவியும் செய்யக் கூடாதென்றும் மதியீனமாய் நினைத்துக் கொள்வதோடு, வீண் சச்சாவுகளையும் கிளப்பிவிட்டு விடுகிறார்கள். மேலும், சாப்பாட்டு விஷயத்திற்காக மருமக்கள் செலவிடும் செலவைக்கூடத் தாறுமாறென்று சொல்லிக் காசுக்கணக்கும் கேட்க ஆரம்பித்து விடுகிறார்கள். இது அளவுமீறிய சங்கதி. ஆதலால் தாங்கள் தயவுசெய்து, இங்கு தன்னயத்தையே கருதும் பணப் பிசாசு பிடித்த மாமியார், மாமனார்களோடு மருமக்கள் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டுமென்றும், ஒரு மாமனும் மாமியும், நியாயமாக, மருமகனுடைய விஷயத்தில் எவ்வளவுதூரம் மாத்திரம் தங்கள் விரல்களைப் போடலாமென்றும் தங்கள் அரிய அமிர்தகுண போதினியின் வாயிலாக வெளியிடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

ஒரு சந்தாதார்.

[தாய் தந்தையர் ஒருவனை வைதாலும் அவமதித்தாலும் அதை ஊரார் கேவலமாகக் கொள்ளார். அடங்கி நடக்கும் குமாரனையே கொண்டாடுவர். ஆனால், பெண் கொடுத்த மாமன் மாமி வகையோ இவ்விதமன்று. அவர்கள் ஒரு சிறு சொல் கூறினும் அது வெளிக்குப் பெரிய அவமதிப்பேயாகும். பெற்றோர்களையும் சகோதரர்களையும் விட்டுப் பிரிந்துவிடுமாறு மாமனார் வீட்டில் போதிப்பின், "அதை என் சொந்தமான இஷ்டப்பொறுப்பில் விட்டுவிடுங்களென்றும், நீங்கள் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாமென்றும்" மரியாதையாகவே தெரிவித்துவிட்டுத் தன் புத்தியின்படியே நடப்பவனென்று காண்பித்துக்கொள்வதே கௌரவம். சகிக்கொணாத—மிதம் மீறிய நிலைமை எற்படும் வரையில் பெற்றோர்களுடன் கூடி வாழ்வதே மதிப்பும் உயர்வுமாகும். ப—ர்.]

# தேனீக்களின் போதனை.

1. நாம் உழைப்பாளிகளா யிருக்கும்படி தேனீக்கள் நமக்குக் கற்பிக்கின்றன; அவைகள் உழைக்காமல் ஒருபோதும் சோம்பேறிகளா யிருப்பதில்லை. நம்மிலோ ஒரு குடும்பத்தில் வீண் சோறு உண்ணும் எத்தனையோ சோம்பேரிகளைப் பார்க்கலாம்.

2. கீழ்ப்படியும் குணமுள்ளவர்களாயிருக்கும்படி நமக்கு அவை கற்பிக்கின்றன; தேனீக்கள் தங்களுக்கு எஜமானியான இராணி ஈக்குக் கீழ்ப்படிந்து அது கட்டளையிடுகிறபடி கேட்டு நடக்கின்றன. கணவனை எதிர்க்கும் பெண்கள் தேனீக்களிடம் கீழ்ப்படிவதற்குப் பாடம் கேட்டுக் கொள்ளட்டும்.

3. சொந்த கிருகத்தில் அபிமானமுள்ளவர்களாயிருக்க அவை நமக்குக் கற்பிக்கின்றன; தேனீக்கள் ஒருபோதும் தமது கூட்டைவிட்டு வெளியே போவதில்லை; அவசியமாயிருந்தால் எப்பொழுதாவது சற்றுப் போய் உடனே திரும்பி வந்துவிடும். வீட்டில் இரவில் தங்காது திரியும் ஆடவர்களும், அயல் வீடுகட்குச் சென்று வெட்டிப்பேச்சுகள் பேசும் பெண்களும் தேனீக்களிடம் புத்தி பெறக்கடவர்.

4. நாமெல்லாம் சுத்தமாயிருக்கும்படி அவை நமக்குக் கற்பிக்கின்றன; தேன் கூட்டைப்போல அவ்வளவு சுத்தமான இடமாக மற்றொன்றைக் காண்பது அரிது.

5. எவர் எக்குணமுடையவராயினும், அவரிடம் நல்ல குணம் ஒன்றைக் கண்டறிந்து அதற்காக அவரை மதிக்கும்படி தேனீக்கள் நமக்கு யோசனை கூறுகின்றன. பூக்களின் நிறமும் தோற்றமும் மணமும் எவ்வாறிருந்தபோதினும், அதை எண்ணாது அதிலுள்ள தேனைமட்டும் தேனீக்கள் கிரகித்து உண்ணுகின்றன.

6. ஆபத்துக்காலத்தில் தேனீக்கள் ஒன்றுக்கொன்று அதிகமான அன்பு பாராட்டுகின்றன; ஒரு ஈக்கு ஒரு துன்பம் வந்துவிட்டால், மற்ற ஈக்கள் தம்மாலான வரையில் அதற்குத் துணைசெய்யப் பாடுபடுமேயொழிய ஒரு நிமிஷங்கூட அதை விட்டு அப்புறம் விலகிப் போவதில்லை. நம்மில் எத்தனை பேர் பிறரது பிணி அவஸ்தையிலும் ஆபத்திலும் நெருங்காமல் ஜாடையாகத் தூர இருந்து விடுகிறார்கள். அவர்களைவிடத் தேனீக்கள் மேலல்லவா?

7. தேனீக்கள் பிரதிதினமும் அதிகாலையில் எழுந்திருப்பவை யாதலால், நமக்கும் அந்த நல்ல வழக்கத்தைக் கற்பிக்கின்றன.

8. தேனீக்கள் நல்ல காற்றில் உலாவுவதற்கு அதிகமான விருப்பமுள்ளவைகளா யிருக்கின்றன. நம்மவரில் காற்றில் உலாவப்போவோர் எங்கோ ஒரு சிலர் தான். காலையில் உத்தியோகத்திற்குப்போவதும், மாலையில் இல்லம் திரும்புவதையுமே உலாத்தப்போவதாக நம்மில் எத்தனைபேர் நினைத்துக்கொண்டு கெடுகிறார்கள்.

9. கூடியிருக்கும் ஒற்றுமையைத் தேனீக்கள் நமக்குக் கற்பிக்கின்றன.

---

சுய நலமுள்ளவனென்று ஒரு மனிதனைப்பற்றித் தெரியாமற் போகவில்லை. வீணாக விரோதப்படாதிருக்கவே—விரோதத்தால் கெடுதி வராதிருக்கவே அவனோடு அன்பு நடிப்பு காட்டிக் கூடக் குலாவுவது.

கம்மில் கூட்டுவர்த்தகம் செய்து அத ஞல் அழிந்துபோனவர் எத்தனையோ!

10. தேனீக்கள் சிறிதும் கோப தாபமில்லாமல் சாந்தமாக வாழ்கின் றவை. அவைகள் ஒன்றுக்கொன்று கலகப்பட்டு ஒருபோதும் சண்டை போடுவதில்லை யாதலால், அப்படிப் பட்ட நல்ல குணத்தை நாம் கைக் கொள்ளும்படி தாம் மேல்வரிச் சட்ட மாக நடந்து நமக்குக் காட்டுகின்றன.

11. எப்பொழுதும் கையில் ஜீவா தாரமான சொத்துடன் வாழும்படி தேனீக்கள் நமக்குக் கூறுகின்றன. தேன்கூட்டில் தேன் இல்லாத பஞ் சத் தவிப்புக்காலம் என்றும் இல்லவே யில்லை.

## பத்திரிகைக்கு விஷயதானம் செய்தல்.

பத்திரிகைக்கு விஷயதானம் செய்து தங்கள் பெயரு டன் பத்திரிகையில் வெளிவரும் விஷயத்தைப் படிக்க வேண்டுமென்றும், அதைத் தங்கள் நண்பர்கட்குக் காண் பித்து மகிழவேண்டுமென்றும் சிலருக்கு மிக்க அவா. இவர்களின் விஷயதானங்களைப் பெற்ற பத்திராசிரியரோ தமது பல தொல்லையில் மௌனமாயிருந்து விடுகிறார். உடனே அவர்களுக்கு இந்த வியாசம் அனுப்பியவர்கள் ஏன் பிரசுரிக்கவில்லை யென்று பல கடிதங்கள் எழுதத் தொடங்கிவிடுகிறார்கள். அந்தச் செலவு விவரமாவது:—

| | |
|---|---|
| வியாசம் அனுப்ப ரிஜிஸ்தர் | 0—4—0 |
| வந்து சேர்ந்ததா என்று கேட்கக் கார்டு | 0—0—9 |
| ஏன் பதிலில்லை? யென்று ரிப்ளை கார்டு | 0—1—6 |
| வியாசம் அனுப்பிப் பத்திரிகையை இனு மாகக் கேட்டதற்குப் பத்திரிகை வர வில்லையே என்று எழுதக் கார்டு | 0—0—9 |
| இந்த தடவை கூடப்பிரசுரிக்கக் காணுமே என்று மறுபடிம் எழுதிக் கேட்க | 0—0—9 |
| இன்னும் ஏன் பிரசுரிக்க வில்லை, திருப்பி அனுப்பிவிடுங்கள் என்று ஒரு ரிப்ளைகார்டு | 0—1—6 |
| ஆக தபாற் செலவு ரூபாய் | 0—9—3 |

தக்க வியாசமாய் சுருக்கி எழுதப்பட்டதாக இருந்தால் பத்திராசிரியர் அவசியம் பிரசுரித்திருப்பார். அவர் மீதும் அதிகமாய்க் குற்றம் சொல்வதற்கில்லை.



# பிரபஞ்ச தரிசனம்



## ஹிந்து மதத்தின் உன்னதம்.



ஸநாதன தர்ம மென்னும் ஹிந்து மதத்தைத் தன்னிடத்தே கொண்டுள்ள பாரத வருஷத்திற்குப் "புண்ணிய பூமி" என்று பெயர் வழங்கி வருகிறது. பாரத வருஷத்தில் முழுதுக்கும் ஞானோதயம் என்னும் நன்னீர் பாய்ச்சியுள்ளது மாத்திரமல்லாமல், உலக முழுவதிலும் அந்த ஞானமாகிய பாக்கியத்தைப் பரவச்செய்துமுள்ளது. புராதன காலத்திலே, இவ்வுலகத்திலே மிகப் பிரசித்திவாய்ந்த தேசத்தார்கள் நாகரீகத்தையும் மதத்தையும் பற்றிய சிறந்த தத்துவங்களை இந்தியாவிலிருந்தே கிரகித்தார்கள் என்பதற்கு எத்தனையோ சான்றுகள் உள்ளன.

ஃ

'சோல் ப்ருக்' என்னும் கலைஞர் பின் வருமாறு புகழ்ந்துகூறியிருக்கிறார். "தற்காலத்துப் புலமையைக் கொண்டு புராதன இந்தியாவைப் பற்றி ஆராயுங்கால், மிகப் பழமைதங்கிய அத்தேசத்தின் நாகரீகம் இணையற்ற லக்ஷணமுடையதென்ற பெரும் விஷயம் தெளிவாய் ஏற்படுகின்றது. இந்தியர்களிடத்திலிருந்து கிரேக்கர்கள் எவ்வளவோ விஷயங்களைக் கிரகித்தார்கள். அவர்களுடைய மதம் கூட இந்தியர்களின் மதத்தையே முக்கியாம்ஸங்களில் ஆதாரமாகக் கொண்டதாயிருந்தது. இனி, ரோமர்கள் கிரேக்கர்களிடமிருந்து ஞானோதயம் பெற்று அதன் மூலமாய் ரோம் நகரம் உலகத்துக்கெல்லாம் ஒப்பற்ற தனி நாயகமாய் விளங்கியது. ரோம் நகரத்தின் ஆதிபத்தியத்துக்குட்பட்ட தேசத்தாரனைவரும், ஆதியில் இந்தியாவிலிருந்து பரவிய தத்துவஞானப் பிரகாஸத்தையும், சமய நெறியையும் அந்த ரோம் நகரத்தின் வாயிலாகப் பெற்றார்களென்பது உலகப் பிரஸித்தம்.

ஃ

இந்தியாவுக்கு எத்தனையோ கஷ்டங்கள் ஸம்பவித்திருக்கின்றன. எத்தனையோ ஜாதியார் ஆள்வாராயினர். இந்த மாறுதல்களால் ஹிந்து ஜாதீயத்தன்மைக்கு மிக்க தீங்கு விளைந்ததென்ப துண்மையாயினும், ஸநாதன தர்மத்தை நசுக்கி விடுவதற்குப் பிறநாட்டார் எவ்வளவு பிரயத்தனப்பட்ட போதிலும், புராதன பாரத வர்ஷத்து ரிஷிகள் கட்டிய மதாசாரமென்னும் பிராணன் இன்னும் இக்காலத்து ஹிந்துக்களுக்குள் துடித்துக்கொண்டேயிருக்கிறது.

ஃ

---

பிறரைக் கசக்கி அதிகமாய் நோகச் செய்து விடுகிறபோது, தானே தன்னில் மிகுதியான பொல்லாங்கை உண்டாக்கிக் கொள்வோனாகிறான். பிறகே அதைப் படும்போது தெரிகிறது.

உலகத்திலுள்ள பற்பல ஜாதியார்களின் சரித்திரத்தை ஆராயுங்கால், திண்ணமாய்த் தெளியப்படும் விஷயம் என்னவெனில், புராதன கிரேக்க ஜாதியார் எவ்வளவு மகத்துவம் பொருந்தியவர்களாயிருந்தபோதிலும் முன்னிருந்த சிறப்பை இப்போது இழந்துபோயினர். அவ்வாறே, மானிடவர்க்கத்தின் சரித்திரத்திலே வெகு காலம் பிரதான்யம்பெற்று விளங்கிய பண்டைய ரோமியர்களும், எகிப்தியர்களும் இப்போது அந்தகாரத்தின் கர்ப்பத்தில அமர்ந்து போயினர். ஆனால், சரித்திரம் ஏற்படுவதற்கு முன்னதாகவே தொன்று தொட்டுத் தோன்றியிருக்கும் ஜாதியாராகிய ஹிந்துக்களோ தங்கள் சுயலட்சணங் கெடாமல் இன்னும் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். இதற்குக் காரணம் ஸநாதன தர்மத்தின் மகத்துவமேயன்றி வேறில்லை.

ஃ

இந்தியாவிலுள்ள பெரிதும் சிறிதுமான பட்டணங்களும் கிராமங்களும் எந்த ஸ்திதியில் உள்ளவையாயினும், அவைகளிலெல்லாம் எண்ணிறந்த ஆலயங்கள் நிறைந்திருக்கின்றன. அவ்வாலயங்களிலே ஸர்வ வியாபகமும், ஸர்வ சக்தியுமுள்ள பரப்பிரம்ம ஸ்வரூபத்தையே வெவ்வேறு மூர்த்தங்களாக ஜனங்கள் வழிபட்டு வருகின்றனர். கூட்டங் கூட்டமாக ஹிந்துக்கள் இவ்வாலயங்களுக்குத் திரண்டு சென்று அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை உள்ளமுருக்கும் பக்திரஸம் நிறைந்த பாசுரங்களால் பாடிப் போற்றுவதை இன்றைக்கும் காணலாம். இந்தியா முழுவதிலுமுள்ள யாத்திரா ஸ்தலங்களாகிய தீர்த்தங்களிலும், க்ஷேத்திரங்களிலும், வருஷந்தோறும் நடந்தேறும் திருவிழாக்களிலும், பல வருஷங்களுக்குப் பிறகு வரும் மகாமகம், 'மேலா'க்களிலும் காணலுறும் காட்சி கண்கொள்ளாக் கம்பீரமான காட்சியன்றோ! இந்த க்ஷேத்திரங்களிலே நற்கருமங்கள் செய்து புண்ணியப் பேறு பெறுவதற்காகத் துறவிகளும், தக்கோர்களும், கற்றோரும், கல்லாதாரும், தனவான்களும், தரித்திரரும், ஆடவரும், பெண்டிரும் பல்லாயிரக் கணக்காய்த் திரண்டு வருகின்றனர்.

ஃ

ஸநாதன தர்மமானது மிகவும் விரிந்து பரந்து சகலத்தையும் தழுவித் தன்னுள் அடக்கி நிற்கும் தன்மை பெற்றதாகையால், அது வெவ்வேறு பக்குவ நிலைகளிலுள்ள ஜனங்களின் பண்புகளுக்கும் பொருந்தக்கூடியதாயிருக்கின்றது. தத்துவ ஞானியாயுள்ளவன் தன் ஞானஸ்வபாவத்தை உயர்த்துவதற்கான மேலான தத்துவங்களை அதிற் கண்டு மகிழ்கின்றான். பாமரனாயுள்ளவனும் தன் மதச்சார்புக் குற்ற குறைகளைத் தீர்க்கத்தக்க சாமானிய வழிபாட்டு முறைகளை அதிற் கண்டு களிக்கின்றான்.

ஃ

பண்டைக்காலத்து ரிஷிகள் தவவொழுக்கமுள்ளவர்களாய் வாழ்ந்து, சமய நெறியையும் ஒழுக்க முறையையும் தம் சிஷ்யர்களுக்குப் போதித்து, நல்ல சீலமுள்ள சம்பிரதாயத்தை ஏற்

---

கேவலம் எலும்பும் தோலும் மாமிஸமுமே சேர்ந்து உருவமெடுத்துத் திரியும் பொம்மைகள் உலகத்தில் பல உண்டு. மங்களகரமான ஹிருதயமும், மனதும், நூல் வாசிப்பும் இவர்களிடம் காணப்படுவது அரிது. அருகே அன்று வந்த "சுதேசமித்திரன்" கிடந்தாலும் அதை அவர்கள் படியார். தொடார்.

படுத்தினர். அந்த சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள் தம்முடைய சாஸ்திர ஞானத்தாலும், ஸ்வதர்மாநுஷ்டானத்தாலும், பகவத் பக்தியாலும் மானிடவம்ஸத்துக்கே ஓர் மஹாப்பிரகாஸமளித்து விளங்கினர். இன்றும் பல இடங்களில் விளங்கி வருவதைக் காணலாம். ஹிந்துக்கள் சிறந்த தெய்வபக்தி யுள்ளவர்களாயிருப்பது மாத்திரமல்லாமல், தான தர்மங்கள் செய்வதிலும் பெயர் பெற்றவர்கள். நிலை குலையாத மதவிசுவாசமும், மாறாத பக்தி சிரத்தையும், ஒப்பற்ற பொறுமையும், ஸமரஸ புத்தியும், மிகக் கடுமையான தவவொழுக்கமும், துறவு நெறியும் அமைந்தவர்கள் அநேகருள்ளார். ஹிந்து மதத்தின் புண்டையாதிபத்தியம் போய்விட்டபோதிலும், அதன் புராதனப் பெருமையும் அதனுடன் போய்விடவில்லையென்பது உற்று நோக்குவாருக்கு நன்கு விளங்கும். துவேஷத்தாலும், ஞானக்குறைவாலும், பிறர் சொல்லும் மௌட்டியமான வார்த்தைகளை நாம் கவனிக்கத் தேவையில்லை. நமது பூர்வப் பெருமையே நம்மை என்றும் காத்து, நல்வழி திருப்பிச் சுகமுறச் செய்யும்.

## ஆ! அப்படியா சங்கதி!

சிலர் மாமிக்கும் மிகவும் வேண்டியவர்களா யிருக்கிறார்கள். மருகிக்கும் வேண்டியவர்களா யிருக்கிறார்கள். தாய்க்கும் குமாரனுக்கும் விரோதமானால் இருவர் பக்கமும் வேண்டியவர்கள்போ விருக்கிறார்கள். மருகி தன் மாமி செய்த அநியாயத்தை இவர்களிடம் ஆத்திரமாய் முறையிடுகிறாள். இவ்விதமே தன் தாய்செய்த அநியாயத்தைக் குமாரன் இவர்களிடம் அங்கலாய்ப்புடன் சொல்லிக்கொள்கிறான். இந்த சங்கதிகள் அவர்களுக்கு ஏற்கெனவே தெரிந்திருந்தும், அப்போது தான் புதிதாகக் கேட்டுத் துடிப்பவர்கள்போல் நடித்து, ஆ! அப்படியா சங்கதி என்கிறார்கள். அவ்வளவுடன் தங்களின் திருவாயை மூடிக்கொள்கிறார்கள். மாமி செய்தது தவறு என்றாவது, தாய் செய்தது அக்கிரமம் என்றாவது இவர்களின் நாக்கு பேசுவதேயில்லை. தங்களிடம் சொல்லியவற்றிற் கெல்லாம் தலையையாட்டி அனுப்புகிறார்களே தவிர, ஒரு தேறுதல் வார்த்தையாவது, ஒரு தைரியச் சொல்லாவது கூறி ஆறுதல் படுத்துகின்றார்களில்லை. இவர்களிடம் வந்து அங்கலாய்த்தவர்கள் இந்தத் தந்திரக்கட்டைகளிடம் ஏன் சொல்லவந்தோமென்று மனம் வெறுத்து மௌனமாய் எழுந்துபோக நேர்கின்றது.

காதலோ, நட்போ, வினை சூழுங்காலமோ—அவை தோன்றுகின்ற வழியையோ—எவ்வகையாக அவை உற்பத்தி பெறுகின்றதென்ற விவரத்தையோ யாரேனும் கண்டு பிடித்து முன்னறிந்து சொல்லக் கூடுமா?




## என் தாய்.

எனதுபசி ஆறத்தன் இன்முலைப்பா லூட்டி
எனதழுகை மாறிடக்கை யேந்தி—இனி தணைத்து
நாரோடுதுயிற்றி என்கன் னத்துமுத்த மிட்டுவந்த
தியாரேனில்என் றன் நற்றாயே. 1

[நார்=அன்பு. துயிற்றி=துயிலச்செய்து, தூங்கச் செய்து.]

திறந்தேனது கண்ணுறக்கம் தீர்ந்தால் அழுகை
பறந்தகலத் தாலாட்டுப் பாடிச்—சிறந்த அன்பால்
ஏரோ டெனைத்தோட் லிட்டாட்டித் தூங்குவித்த
தியாரே யெனில் என்தா யே. 2

[ஏர்=அழகு]

யான்வீழ்ந்தால் ஓடிவந்துற் றென்வருத்தம் நீங்கவே
தேன்விழ் இனியகதை செப்பியதும்—நான் வீழ்ந்த
பாரிடம் பட்டஇடம் பார்த்துமுத்த மிட்டதுவும்
யாரேனில் என்றன்நற்று யே. 3

[தேன் வீழ் இனிய கதை=தேன் சொட்டுகிற மதுரமான கதை.]

இவ்வா றெனக்குமிக ஏற்றமாம் அன்பு செய்தாய்
எவ்வாறெக் காலத்தி லென்னினுமே—ஒவ்வாவ
லாலுன்னை நேசித் தமர்த லொழிந்திருத்தல்
ஏலும் ? உரை யாய்என்தா யே. 4

[ஒவ்வு+ஆவலால்+உன்னை. ஒவ்வு=பொருந்து. அமர்தல்=தங்கு தல். ஏலும்=கூடும். உரையாய்=சொல்வாயாக.

ஆ! ஆ! உனக்கன் பகலேன் அவ் வெண்ணமதும்
நோவேஅஃ தாற்றேன் நுவல் இறைவன்—சாவாதே
நான்சிலநாள் வாழவைத்தால் நன்றியறி வோடுகைம்மா
றியான்செய்கு வேன்என்தா யே. 5

[நுவல் இறைவன்=(எல்லோரும் புகழ்ந்து) சொல்லும் கடவுள், வாழவைத்தால்=(இந்தப் பூமியில்) வாழும்படி வைத்தால். கைம்மாறு= பிரதியுபகாரம்]

---

*மனிதர் செய்யும் கெடுதிகள் அவர்கள் மரித்த பிறகுங் கூட இருக்கின் றன. ஆனல், அவர்கள் செய்யும் நன்மைகள் அவர்களின் கண்முன்பாகவோ, அவர்களோடு கூடவோ புதைக்கப்பட்டு மறைகின்றன.*

விருத்தவய தால்நரைத்துன் மேனிதளர் காலம்
திரைத்த உன்நற்கைக்கெனது செங்கை—பரித்திடஉம்
ஊன்றுகோல் போலுதவ உன்வருத்தம் ஆற்றிடுவேன்
ஈன்றளித்த என்றன்தா யே. 6

[திரைத்த=திரையை உடைய; (வயது முதிர்ச்சியாலுண்டாகும்) மடிப்பைஉடைய. பரித்திடஉம்=பரித்திடும், தாங்கும்.]

தாங்கருநோ வால்உன் தலைநிமிர்ந்து நில்லாதே
தூங்கிடுகால், யான், நீ துயில்படுக்கை—நீங்கலின்றி
நின்மெயினைக் காத்தன்பால் நெக்குவழி நீர்சிந்தல்
என்முறையா கும்என்தா யே. 7

[தாங்கரு நோவு=சகித்தற்கரிய வியாதி. தூங்கிடுகால்=தூங்கும் காலம். துயில்=தூக்கம். நின் மெயினை=உன் உடம்பை. நெக்கு=(நெஞ்சு) நெகிழ்ந்து (உருகி). என்முறை=நான் குழந்தையாய் இருக்கும்போது வியாதியடைந்த சமயங்களில் நீ என் படுக்கையை நீங்காது என்னைப் பாதுகாத்தது உன் முறையாயிருந்ததுபோல, உனக்கு வயதுசென்ற காலத்தில் நீ நோயுற்றால் அப்போது உன்னைப் பாதுகாப்பது என் முறையாகும்.]

தன்னரிய மேன்மைத் தனங்களிடச் சுரக்கும்
இன்னமுத மூட்டி யிருதோண் மிசைத்துயிற்றிக்
கன்னமிசை யுள்ளங் களிதூங்க முத்தாடி
என்னை யளித்தவரார்? ஈன்றாளை யன்றியுமே. 8

## திக்கற்றவருக்குத் தெய்வமே துணை.

நியாயம் என்பது அவன் கக்ஷியிலேயே இருந்தும், உண்மையாகவே அவன் வஞ்சிக்கப்பட்டவனாகவே இருந்தும், காலமுழுதும் உழைத்த சத்தியவந்தனென்பது தெரிந்திருந்தும் எதிர்பக்கக் கக்ஷியினருடனேயே பலரும் சேர்ந்துகொள்ளுகின்றனர். அவன் கக்ஷியில் தர்மதேவதையொன்றே துணை நிற்கிறது. அவன் பக்கத்து விவகாரத்தை எடுத்துப் பேசக்கூடிய மனிதர்கள்கூட எதிர்பக்கமாய் விடுகிறார்கள். எஞ்சி நிற்பவரோ இருபக்கமும் தலையாட்டிப் பட்டும்படாமல் தூரநிற்பவர்களாவர். கடைசியில் முடிவு என்ன? திக்கற்றவருக்குத் தெய்வமே துணை. அத்தெய்வ ஜோதியின் முன்பு எதிர் பக்கத்து ஆரவாரம் எதுவுமே பலிப்பதில்லை; அது சோர்ந்து கீழே விழுந்து விடுகிறது!



# ஒரு பிரயாணியின் வருகை.



சாரதா வீதியில் கோலமிட்டுக் கொண்டிருக்கையில் ஒரு வண்டி அங்கு வந்து நின்று அதிலிருந்தும் ஒருவர் பெட்டியுடன் இறங்கினர். சாரதாவை நோக்கி அம்மா நீங்கள் யார்? இந்த வீட்டுக்கார அம்மா எங்கே யென்று வினவினர். அதற்கு சாரதா என் மாமியார் தன் பெண்ணின் பிரஸவத்திற்குப் போய் இரண்டு மாதமாயிற்று; ஆண் குழந்தை பிறந்தது; நாளையதினம் வருவதாகக் கடிதம் வந்திருக்கிறது என்ருள். உங்கள் வீட்டுக்காரர் எங்கேயம்மா என்று வந்தவர் வினவினர். அவர் கடைவீதிக்குச் சென்றிருக்கிருர் என்ருள் சாரதா.

ஃ

சற்று நேரத்தில் காய்கறிகளுடன் சாரதாவின் கணவன் கந்தசாமி திரும்பி வந்தான், பிரயாணி உடனே எழுந்து வணங்கினர். நீங்கள் யார் என்று கந்தசாமி கேட்க, நான் ஒரு ஏழைப்பரதேசி; ஏதாவது சாப்பாடு போட்டால் என் கையில் உள்ளதைக் கொடுத்துவிட்டு உங்கள் நிழலில் இங்கேயே இருக்கிறேன் என்ருர்.

கந்தசாமி:—தங்களுக்கு மனைவி குழந்தைகளில்லையா?

பிரயாணி:— அது பழய கதை, என் மனைவி குடித்தனத்தில அதிக சமர்த்தை. நல்ல பதிவிரதை. என் தமயன் என் பாக நிலத்தில் கொஞ்சம் தன் நிலத்துடன் சேர்த்துக் கொண்டான். அதற்காக அவனுடன் சண்டை யிட்டதில் என்னைக் குத்திக் கொல்ல வந்தான். நான் மனம் வெறுத்து அன்னிய தேசம் சென்று விட்டேன். இது இருபது வருஷங்கட்கு முந்திய சங்கதி. என் மனைவி மக்கள் என்ன ஆயினரோ அறியேன்.

கந்தசாமி:—இந்த வீட்டையே குறிப்பாகத் தாங்கள் தேடி வந்தது என்?

பிரயாணி:—இது என் தந்தையின் வீடு. இங்கு தான் நான் குடியிருந்தது. எனக்கு ஆண் பெண் இரு குழந்தைகள் உண்டு. என் மனைவி தங்களுக்கு இதை விற்றிருப்பாள். செலவுக்கு இல்லாதவள் என்ன செய்வாள்?

---

எங்கேயோ எப்போதோ சந்தித்த ஒருசந்திப்புதான் மனத்தைக் கவர்ந்து இரு இருதயத்தையும் ஒன்று சேர்க்கின்றது. மற்ற எத்தனையோ சந்திப்புகள், எவ்விதக் கவர்ச்சியும் தராது வீணிலேயே முடிகின்றன.

கந்தசாமி :—தங்களுடையவும் தங்கள் மனைவி மக்களுடையவும் பெயர் என்ன ?

பிரயாணி :—என் பெயர் வேலாயுதம் ; என் மனைவியின் பெயர் விசாலாக்ஷி ; பையன் பெயர் கந்தசாமி ; பெண்ணின் பெயர் சாவித்திரி.

கந்தசாமி :—தங்கள் மனைவியை நிர்க்கதியாய் விட்டுப் போகலாமா ?

பிரயாணி :—என் தமயன் என்னைக் கொல்லத் தயார். நானும் அவரைக் கொன்றுவிட அதிக ஆத்திரமடைந்தேன். கடைசியில் கொன்று தூக்குக்குப் போகிறதைவிட அன்னிய தேசம் போய் விடுவது மேலென்று தோன்றி அப்படியே செய்து விட்டேன்.

கந்தசாமி :—நானே தங்கள் குமாரன், அவள் தங்கள் மருகி. அக்காவுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது. அம்மா நாளை காலையில் வருவார். தங்கள் தமயனுருக்குக் குழந்தைகளில்லாததால் சகல சொத்துக்களையும் எனக்கே கொடுத்து விட்டார். அவரும் அவர் மனைவியும் சுகமாக அடுத்த தெருவில் இருக்கிறார்கள். தங்கள் வீட்டைத் தாங்கள் ஒப்புக் கொள்ளுங்கள்.

என்று கூறிப் பிரயாணியின் காலில் விழுந்து வணங்கினான். சாரதாவும் வணங்கினாள். அதே சமயம் தமயனும் அங்கு வந்து முகஜாடையைக் கண்டுபிடித்துத் தம்பியைக் கண்ணீருடன் தழுவினார். மறுநாட் காலையில் விசாலாக்ஷி ஊரிலிருந்து வந்து தனது விதவைக் கோலத்துடன் தன் பர்த்தாவை ஆச்சரியமாய்ப் பார்த்து நமஸ்கரித்தாள். வீட்டிற்குப் புதிய உயிர் வந்து சேரவே, யாவும் புதிய ஒளி கொண்டு விளங்கியது. விசாலாக்ஷியும் மாங்கல்யத்துடன் சுமங்கலியானாள். குறைபட்ட வீடு நிறைந்த வீடாகியது. சகோதரிகாள் ! உங்களின் இனிய பர்த்தாவை உங்கள் வீட்டின் முக்கியமான உயிரென்றும், அவரால் தான் வீடு நிறைந்து மங்களமாய் விளங்குகிறதென்றும் தெரிந்து கொண்டு அவரை என்றும் சந்தோஷப்படுத்தி, நீங்களும் ஆநந்தமாக இல்லறத்தை நடத்துங்கள். கணவனே கண் கண்ட தெய்வம். அவரைப் போற்றி வாழ்வீர்களாக. கணவனர் தன் வீட்டை விட்டுப் பிரியாதபடி அவருக்கு வீட்டின் மீது அளவற்ற ஆசையை உண்டாக்கி விடுங்கள். உங்களின் சமர்த்து இதில் தான் தெரிய வேண்டும். உங்களை நன்றாகச் சிங்காரித்துக் கொண்டு லக்ஷ்மீ தேவதையைப் போல அவர் எதிரில் நின்று அவரை வசீகரித்துக் கொள்ளுங்கள். இது உங்களின் முதல்வேலையாக இருக்கட்டும். இதில் தான் உங்களின் இன்ப வாழ்வும் அடங்கியிருக்கின்றது. எத்தனை நாள் பகற்பட்டினியானாலுங் கூட தன் பிரியமான பர்த்தாவுடன் இருக்கும் வாழ்வே மேல். அவர் ஒருவர் அருகிலிருந்து விட்டால் எல்லாக் கஷ்டங்களையும் எப்படியாவது சகித்துக் கொண்டு காலம் தள்ளி விடலாம். இது உண்மையேயல்லவா?

---

எவ்விதமேனும் உத்தியோகம் கிடைப்பதற்குப் பெரிய மனிதர்களின் தயவை விரும்பி, அவர்கள் சொல்லும் வேலைகளை யெல்லாம் செய்கிறார்கள். விசேஷகாலங்களில் தொண்டர்களாகவும் சேர்ந்து பாடு படுகிறார்கள். அந்தப் பெரிய மனிதர்களோ இவர்களை நன்றாக மேய்த்துவிட்டுக் காரியம் முடிந்ததும் விலகி அன்னியர் போலாகிறார்கள். இவ்விதம் உழைத்தவர்களுக்கும் பிறகு உத்தியோக சிபாரிசும் கிடைப்பதில்லை.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி

### அத்தியாயம்—6.

தங்கவேலு யார்?

(520-ம் பக்கத் தொடர்ச்சி.)

VI

கண்ணப்பன் :—அட்டா, இது தான் நீ செய்த முட்டாள்தனம். அச் சமயம் நீ அவன் கூப்பிடுவதையும் கவனியாமல் ஓடிப்போய்விட்டபடி யால் நீயே குற்றவாளியென நம்ப யிடமேற்பட்டுவிட்டதல்லவா? விசா ரணைக்காலத்தில் லட்சுமணசாமி உன் னையே குற்றவாளியென ஸ்திரப்படுத் திக் கூறினன்.

இராஜ சந்திரன் :—நான் தைரிய மில்லாமல் அவனுக்குப் பயந்து ஓடி னேன். தோட்டத்தைத் தாண்டி யதும் எதிராஜனைக் கண்டு 'நீ அந் தப் பாவியைப் பார்த்தாயா' என்று கேட்டேன். அவன் எந்தப் பாவியை யும் பார்க்கவில்லை யென்றான். அபி ராமியை நேசிக்கவரும் பாவியாகிய தங்கவேலு இவ்வழியாகப் போகவில் லையா என்று கேட்டேன். நான் பார்க்கவில்லை யென்று அவன் பதில் கூறினன். அப்பால் யான் வேகமாகச் சென்றுவிட்டேன்.

கண்ணப்பன்:— அன்றைய தின முதற்கொண்டு நீ வீட்டிற்கு வாராமல் நின்று விட்டாயல்லவா?

இராஜ சந்திரன்:—ஆம், ஆம், இன் னொரு முக்கியமான சங்கதியையும் கூறுகிறேன். கொலை நடந்து சுமார் ஐந்துமணி நேரமானதும் யான் அபிராமியைப் பார்க்க விரும்பி மறு படியும் அவள் வீட்டிற்குச் சென் றேன். என்னைக் கண்டதும் அவள் பேசிய வார்த்தைகளை யென்னென்று சொல்வேன். நான் மிகவும் துஷ்ட னென்றும், நான்தான் அவளுடைய தந்தையைச் சுட்டுக்கொன்ற பாபி யென்றும், என்னைப் போலீசாருக்குக் காட்டிக் கொடுத்துவிடுவதாகவும் கூறினள். நான் எவ்வளவோ சமா தானம் செய்து, உண்மையில் அவளு டை தந்தையை நான் கொல்லவில்லை யென்றேன். அவள் கிஞ்சித்தேனும் நம்பவே யில்லை. நான் சிலநாள் தலை மறைவாகத் திரிந்து அதிகாரிகள் இக் கேஸில் யாரைக் குற்றவாளியாகப் பிடிக்கிறார்கள் பார்ப்போம் என்றிருந் தேன். அவர்கள் என்னையே குற்ற வாளியாக்கி விட்டு, என்னைத் தேடிப் பிடித்துத் தண்டிக்கவும் ஏற்பாடு செய்துவிட்டார்கள்.

கண்ணப்பன் :—நீ கூறுவதைக் கவனித்தால் எதிராஜனாவது லட்சுமணசாமியாவது கொலைசெய்திருக்க மாட்டார்களென ஏற்படுகிறதல்லவா ?

இராஜ சந்திரன் :—ஆம், அவர்களிருவரும் குண்டுசப்த முண்டான போது என்னைப்போல் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்ததால் அவர்கள் குற்றவாளிகளல்ல. உண்மையில் கொலையைச் செய்தவன் தங்கவேலு என்று மும்மூர்த்திகளறியக் கூறுகிறேன்.

கண்ணப்பன் :— நீ சொல்வதை யோசித்து உண்மையை யறிய அதிக சிரத்தை யெடுத்துக்கொள்ள வேண்டும். நீ அப்போதே தங்கவேலைப் பிடித்துக்கொண்டிருந்தால் மிகவும் நலமாக விருக்கும்.

இராஜ சந்திரன் :—அவன் மிகவும் வலுவானவனுதலால் அவனெதிரே போவதற்கும் எனக்குப் பயமாக விருந்தது. அவன் வந்தால் அவனிடம் நான் பேசுவதேயில்லை. அங்கு என்னுடைய துப்பாக்கியிருந்தபடியால் நானே கொலை செய்தவனென வற்புறுத்த இடமுண்டாய் விட்டது.

கண்ணப்பன் :-தங்கவேலு குமாரசாமி முதலியாரைத் துப்பாக்கியால் சுட்டிருந்தால் அபிராமி விசாரணைக் காலத்தில் அதைச் சொல்லிவிட்டிருக்க மாட்டாளா ?

இராஜ சந்திரன் :-நான் எனக்குத் தெரிந்தவரையில் உண்மையைக் கூறிவிட்டேன். நீ நம்பாவிடில் நானென்ன செய்வேன். உண்மைக் குற்றவாளியைக் கடவுளுக்குத் தெரியுமாதலால் அவர் அவனுக்குத் தண்டனை விதிப்பார்.

கண்ணப்பன் :—தங்கவேலு எப்படி யிருப்பான் ?

இராஜ சந்திரன் :—அவன் சுமார் ஆறடி உயரமும், கச்சலான தேகமும், நீண்ட முகமும், கட்டுமஸ்தான மார்பும் உடையவன். அதிக டம்பமாக உடுத்தி வாசனை தினுசுகளை (Scents) அணிந்துக்கொண்டு வருவான். அவனுடைய காதில் இரவையிழைத்த கடுக்கன்களும், கையில் இரவை யிழைத்த பாம்பு மோதிரமும் அணிந்திருந்தான். அவனுக்கு வயது சுமார் இருபத்தைந்துதா னிருக்கும்.

கண்ணப்பன் :—அவன் எவ்வூரில் வசிக்கிறன்?

இராஜ சந்திரன் :—எனக்கு சரியாகத் தெரியாது. பௌரிங்கிப் பேட்டையிலிருந்து வருவதாக எனக்கு அபிராமி ஒரு நாள் கூறினள்.

கண்ணப்பன் :—பௌரிங்கிப் பேட்டையிலா ? அவ்வூரில் இரண்டு பேர் தங்கவேலு என்ற பெயருடனிருக்கிறர்கள். அவர்கள் இரவை நகைகளை யணிவதில்லையே. அது கிடக்கட்டும். விசாரித்தறிவோம். இப்போது அபிராமி எங்கேயிருக்கிறள் ?

இராஜ சந்திரன் :—அபிராமியா, அவளுடைய சங்கதி எனக்கொன்றுமே தெரியாது. கொலை நடந்த தினம் தான் நான் அவளைக் கடைசி முறை பார்த்தது.

---

கதை என்றல் அதற்கு உயிரையே கொடுத்துவிடக்கூடியவர்கள் சிறு குழந்தைகள் முதல் பெரியவர்களீருக உலகம் முழுதும் நிறைந்திருக்கையில் அருமையான உத்தம கதைகளை எழுதிய ஆசிரியர்களிற் பலர் வறுமை நோயிற் கிடப்பானேன் ? அது அவர்களின் தலைவிதியா ? அல்லது ஜனங்கள் அவர்களைத் தெரிந்து கொள்ளாமையா ?

கண்ணப்பன் :—அவள் அன்றைய தினமே உன்னுடன் வீட்டை விட்டு வந்து விட்டதாகவும், நீங்கள் இருவரும் தனியாக எங்கோ போய்விட்டதாகவும் எல்லோரும் இவ்வூரில் கூறுகிறார்களே? அதனால் தான் உன் தந்தைக்கும் உன் மீது அதிக கோபமும் வருத்தமு முண்டாயிருக்கிறது.

இராஜ சந்திரன் :—அம்மா திரி நினைப்பவர்களுக் கெல்லாம் தலையில் மூளையேயில்லை யென்று யான் கூறுவேன். கண்ணால் பார்க்காத விஷயத்தை யெப்படி வெளியில் சொல்லக் கூடும்? அவள் அன்றையதினமே ஓடிப்போயிருந்தால் தங்கவேலுடன் தான் ஓடிப்போயிருக்கலாம்.

கண்ணப்பன் :—அவள் தங்கவேலைக் காதலித்தாளா?

இராஜ சந்திரன் :—அவன் லட்சாதிப் பிரபுவைப்போல் அதிக டம்பமாக வருவதால் அவனைக் கண்டதும் அபிராமி மயங்கிவிட்டாள்.........

கண்ணப்பன் :—இது விஷயம் பின்னால் யோசிப்போம். இப்போது எட்டுமணியாய் விட்டது. என்னுடன் வா.

என்று அழைத்துக்கொண்டு போய் அவனுடைய தாயினருகே உட்காரவைத்தான். அவனுடைய தாய் அவனைக் கட்டியழுது தேறினாள். முதலியார் வந்து விடுவாரெனப் பயந்து அவனிடம் சிலநேரம் பேசிக்கொண்டிருந்து பின்னர் போகும்படி உத்திரவளித்துக் கண்ணீர்விட்டாள். கிருஷ்ணவேணி அவளைத் தேற்றினாள். கண்ணப்பன் அவனிடம் ஐம்பது ரூபாயைக் கொடுத்தான். அதைப் பத்திரமா யெடுத்துக் கொண்டு எல்லோரிடமும் விடை பெற்று இராஜ சந்திரன் சென்றான்.

ஃ

கண்ணப்பன் அதன் பிறகு விடை பெற்றுத் தன்வீட்டிற்கு பைசிக்கிளில் புறப்பட்டுவரும்பொழுது பௌரிங்கிப் பேட்டையின் கடைசி முனையில் ஓர் மனிதன் கண்ணப்பனை வணங்கினான். அவன் யாரெனில் எதிராஜன். அவனைக் கண்டதும் கண்ணப்பன் பைசிகிலைவிட்டிறங்கி அவனை நோக்கி "நீ யாருக்காக இங்கே நின்று கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான்.

எதிராஜன் :—யான் இன்றைய தினம் சங்கீதக்கச்சேரிக்குப் போகிறேன். லட்சுமணசாமி வருவதாகச் சொன்னபடியால் அவனை யெதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

கண்ணப்பன் :—யானுன்னை யொரு கேள்வி கேட்கிறேன். அது குமாரசாமி முதலியாரின் கொலையைப்பற்றியது என்றான்.

எதிராஜன்:—அந்த கேசின் விசாரணை முடிந்துவிட்டதல்லவா, கொலை செய்தவன் இராஜசந்திரனெனத் தீர்மானமாய் விட்டதே.

கண்ணப்பன்:—அது உண்மை தான். கொலை நடந்த அன்று மாலை இராஜசந்திரன் குமாரசாமி முதலியாரது வீட்டின் புறக்கடைத் தோட்டத்தில் உன்னைக் கண்டு பேசினதாகக் கேள்விப்பட்டேன்.

எதிராஜன்:—ஓ! இப்போது அதைப்பற்றி என்ன?

கண்ணப்பன்:— அம்மாதிரி நீ முரட்டுத்தனமாகப் பேசவேண்டாம். எனக்கு உண்மையைச் சொல்.

---

நீ கஷ்டப்பட்ட காலங்களை மறந்து போகக்கடவாய். ஆனால், அந்தக் காலங்களும், அந்தக்காலத்தில் நீ பட்ட புண்களும் உனக்குக் கற்றுக் கொடுத்த பெரியதான படிப்பனைகளை மட்டும் மறவாதே.

எதிராஜன்:-ஆம், அந்தக் கொலைப் பாதகனைக் கண்டு பேசினேன்.

கண்ணப்பன்:—குண்டின் சப்தம் கேட்டபின் தங்கவேலு என்ற பெயரையுடைய ஒருவன் அவ்வீட்டினுள்ளிருந்து ஓடிப்போனதை நீ பார்த்தாயா? உண்மையைச் சொல். இதனால் உனக்கு யாதொரு கெடுதியும் வராது.

எதிராஜன்:—(சற்று யோசித்தபடியே,) யான் அன்றைய இரவு இராஜசந்திரனைத் தவிர வேறு யாரையும் பார்க்கவில்லை. இராஜ சந்திரனுக்கும் எனக்கும் பிராண சிநேகமுண்டு. அவனைத் தப்புவிக்க வேண்டுமென நான் விசாரணைக் காலத்தில் எவ்வளவோ முக்கிய சங்கதிகளையெல்லாம் மறைத்துக் கூறினேன். லட்சுமண சாமி அச்சமயம், இராஜசந்திரனை அங்கு துப்பாக்கியுடன் கண்டதாகக் கூறியபடியாலும், அவனுடைய துப்பாக்கி அங்கு அகப்பட்டபடியாலும் அவன்மீது குற்றம் உறுதிப்பட்டு விட்டது.

கண்ணப்பன்:— அபிராமியைக் காதலித்து வந்த தங்கவேலு என்பவனை நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா? அவன்தான் கொலை செய்தவனென ஏற்படுகிறது.

எதிராஜன்:—நான் கடவுளறியக் கூறுகிறேன். தங்கவேலு என்ற ஆசாமியை நான் பார்த்ததே கிடையாது.

கண்ணப்பன்:—குமாரசாமி முதலியாரைக் கொன்ற குண்டின் சப்தத்தை நீ காதால் கேட்டாயா?

எதிராஜன் :—ஆம், இடியிடித்தது போல் என் காதில் கேட்டது. அச்சமயம் நான் தோட்டத்திலிருந்தேன் சப்தம் கேட்டதும் ஓடிவருகையில் லட்சுமணசாமியும் என்னுடன் வந்தான். இருவரும் சுற்றிப்பார்க்கையில் இராஜசந்திரன் தவிர யாரும் எங்கள் கண்ணில் அகப்படவில்லை.

கண்ணப்பன் :—நீ இதுவிஷயமாக விசாரித்து, தங்கவேலு என்பவனைத் தேடமுயல். அவன் பெளரிங்கு பேட்டையிலேயே வசிப்பதாகக் கேள்விப்பட்டேன். மிகவும் ஜம்பக்காரனாகையால் இன்றைய தினம் சங்கீதக் கச்சேரியில் அவனைக் கண்டாலும் காணலாம்

என்று கூறிவிட்டு பைசிகிலேறிச் சென்றான். கண்ணப்பன் தன் வீடு சேர்ந்து போசனமுண்டு சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டே, தங்கவேலு என்பவன் யாராயிருக்கக்கூடும், அவனை எப்படிக் கண்டுபிடிக்க இயலும், இராஜசந்திரன் கொலை செய்திருக்கமாட்டானென நம்ப இடமிருக்கிறதானாலும் அதை யெப்படி ருஜுப்படுத்த முடியும்........என்று நினைத்துக்கொண்டேயிருக்கையில், குமாஸ்தா தனபாலன் எதிரே நின்று வணங்கினான். அவனைக் கண்டதும் கண்ணப்பன் ஓர் ஆசனத்திலுட்காரச்செய்து, யான் உன்னை ஒரு சங்கதி விசாரிக்கிறேன், நீ உண்மையைக் கூறவேண்டும் என்றான்.

தனபாலன்:—அப்படியே தடையில்லாமல் செய்கிறேன்.

கண்ணப்பன்:—உனக்கு பௌரிங்கு பேட்டையில் தங்கவேலு என்று பெயருடைய சுமார் இருபத்தைந்து வயதானவர்கள் யாராவது தெரியுமா?

---

யௌவனம் என்பது வரவரப் பரவி வியாபிக்கும் பெரிய காடு. அதில் அபிமானமென்ற மதயானை இஷ்டப்படி உலாவுகிறது. பாபம் என்ற பாம்புகள் மனோராஜ்யமென்ற புதர்களில் நிறைந்திருக்கின்றன.

தனபாலன்:—ஆம், எனக்கு மூவர் தெரியும். அவர்களில் இருவருக்கு வயது நாற்பதுக்குமேலிருக்கும் ஒருவனுக்கு வயது சுமார் இருபத்தைந் திருக்கும்.

கண்ணப்பன்:—அவன் அபிராமியை நேசித்து அவளைத் தற்சமயம் கைக்கொண்டிருப்பானா?

தனபாலன்:—சே, சே, அவன் அப்படிப்பட்டவனல்ல; கௌரவமான குடும்பத்திற் பிறந்து கேடுகெட்டவளாகிய அபிராமியுடன் நேசஞ்செய்வானா? அது நம்பத் தகுந்ததல்ல.

கண்ணப்பன்:—நான் இன்றைய தினம் இராஜசந்திரனையே நேரில் கண்டு விசாரித்தேன். தங்கவேலு என்பவன் தினம் பௌரிங்கு பேட்டையிலிருந்து வந்து அபிராமியை நேசித்ததாகவும் அவனே அவளுடைய தந்தையைச் சுட்டுவிட்டதாகவும் கூறி, தான் குற்றவாளியல்லவென்றும் ஆணையிடுகிறானதலால், நான் இதுவிஷயத்தில் உளவறிய முயல்கின்றேன். நீயும் உன்னாற் கூடிய உபகாரம் எனக்குச் செய்யவேண்டும்.

தனபாலன்:—அப்படியே செய்கின்றேன்.

கண்ணப்பன்:—நீ உடனே போய் நம் வீட்டு வேலைக்காரியாகிய ஜானகியை என்னிடம் அனுப்பு என்றான்.

ஃ

சற்றுநேரத்திற்கெல்லாம் ஜானகியும் வந்து எதிரே நின்றாள். இவளுக்கு வயது சுமார் முப்பதுக்குமேலிருக்கும். இவள் அபிராமியின் தமக்கை. தன் புருடன் வெளியூர் சென்றதால் இவ்விடத்தில் வேலைக்கமர்ந்தாள். அவளைக் கண்டதும், 'ஜானகி, நீ உன் தங்கை அபிராமியைப்பற்றி ஏதாவது கேள்விப்பட்டாயா? அவன் இப்போது எங்கேயிருக்கிறான் தெரியுமா?' என்று கேட்டான்.

ஜானகி:—எனக்கொன்றுமே தெரியாது. என் தந்தை கொல்லப்பட்ட பின் அவளை நான் பார்க்கவேயில்லை. அவளுடைய தந்தையைக் கொன்றவனாகிய இராஜசந்திரனுடன் ஓடிப்போய்விட்டதாக எல்லோரும் கூறுகிறார்கள்.

கண்ணப்பன்:— இராஜசந்திரன் அன்றி மற்றொரு அழகிய வாலிபன் பௌரிங்கி பேட்டையிலிருந்து தினம் மாலைக்காலத்தில் உன் தங்கையுடன் வந்து பேசிக்கொண்டிருந்ததை நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா?

ஜானகி—ஆம். ஒருநாள் மாலை நான் வீட்டிற்குப் போனபோது ஒருவன் அவளுடன் பேசிக்கொண்டிருந்தான். அவன் என்னைக் கண்டதும் அபிராமியிடம் விடைபெற்றுப் போய்விட்டான். அவன் அணிந்திருந்த இரவைக் கடுக்கனும் மோதிரமும், விலையுயர்ந்த ஒழுங்கான ஆடைகளும் காண்போர் கண்களைக் கவர்ந்தன. அவன் போய் விட்ட பின் என் தங்கையை விசாரித்ததில் அவனுடைய பெயர் தங்கவேலு என்று கூறினாள்.

## அத்தியாயம் 7.

### கமலவல்லியின் சந்தேகம்.



அதற்கு அடுத்த நாட் காலையில் கிருஷ்ண வேணி சாரதாவிலாஸத்திற்குவந்து கண்ணப்பனின் அறையில் அவனைக் கண்டாள். அவன் ஏதாவது இராஜசந்திரனைப் பற்றிய ரகசியங்கள் சொல்ல

வந்திருப்பாளென்று தோட்டத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றான். சாரதா விலாஸம் தன் கைக்கு வந்த பின் தான் செய்த சீர்திருத்தங்களை யெல்லாம் அவளுக்குக் காண்பித்து விட்டு ஓர் மாமரத்தின் நிழலில் போடப்பட்டிருந்த பெஞ்சியின் மீது உட்கார்ந்தான். கிருஷ்ணவேணியும் அவன் அருகே உட்கார்ந்தாள். அச்சமயம் கமலா மெத்தையின் மேல் சங்கீதம் பாடிக் கொண்டிருந்தாள். அப்போது கண்ணப்பன் கமலா சங்கீதத்தில் அதிக பிரியமாயிருக்கிறாள் என்றான். அதற்குக் கிருஷ்ணவேணி கல்யாணமாகி விட்டவர்களுக்குக் கவலையற்ற வாழ்வும் ஸந்தோஷமும் உண்டாகக் கேட்க வேண்டுமா என்றாள். கண்ணப்பன் ஸம்பாஷணையை வேறொன்றில் திருப்ப நினைத்து, தான் எதிராஜனைக் கண்டு பேசியதையும், வீட்டில் வேலை செய்யும் ஜானகியை விசாரித்ததையும், தனபாலனிடம் தங்கவேலுவைக் கண்டு பிடிக்கும்படி சொன்னதையும் விஸ்தாரமாக எடுத்துக் கூறினான்.

கிருஷ்ணவேணி :—நீங்கள் மிகவும் சிரமம் எடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். என் அண்ணன் தலையெழுத்து எப்படி யிருக்கிறதோ?

கண்ணப்பன் :— இராஜசந்திரன் மீது கொலைக் குற்றம் வெகு நேர்த்தியாய் அவன் தப்ப முடியாதபடி ஜோடித்திருக்கிறது. தங்கவேலு என்பவன் அகப்பட்டாலும் குற்றத்தை அவன் மேல் சாட்டி நிரூபிப்பதற்குப் பலமான சாக்ஷிகள் வேண்டும். இது இரண்டொரு நாட்களில் நடக்கக் கூடியதல்ல. ஒரு கதாசிரியன் ஒரு கதையை எழுதுவதற்கு ஆரம்பிக்கிறான். அந்த சமயம் அவனிடம் இருக்கும் சரக்கு கொஞ்சமே. அந்த சரக்கும் சில பக்கங்களில் முடிந்து விடுகிறது. மேற்கொண்டு வேண்டிய கதா பாகச் சரக்கைக் காலம் செல்லச் செல்ல அவன் சேகரித்துக்கொண்டே போகும்படி, அந்த சரக்கும் எவ்விதமோ கடவுள் கிருபையால் தொடர்ச்சியாக அவனுக்குக் கிடைத்துக் கொண்டே வருகிறது. முடிவில் அவன் தன் முயற்சியாலும், முக்கியமாய்க் கடவுள் கிருபையாலும், அந்தந்தக் காலங்கள் அவனுக்கு அவ்வப்போது காட்டுகிற புதுபுதுக் கற்பனைகளாலும், தன் கண்ணின் எதிரில் நிகழும் நூதன ஸம்பவங்களாலும் தான் தொடங்கிய கதையை மிக்க அழகாயும் ஸ்வாரஸ்யமாயும் பூர்த்தி செய்கிறான். இது, இனிவர இருக்கிற எதிர்காலமானது அக்கதாசிரியனுக்குச் செய்கிற உதவியாகும். அதுபோலவே, உன் தமயன் விஷயத்திலும் நான் சலியா முயற்சி எடுத்துக் கொண்டு ஓயாமல் உழைத்துவரச் சித்தமாய் இருக்கிறேன். என் உழைப்புக்கு இரக்க முற்றுப் பகவான் நாட் செல்லச் செல்லப் புது புது வழிகளையும் தக்க ஆதாரங்களையும் காட்டிக் கொடுப்பாரென்று நிச்சயமாக எனக்கு நம்பிக்கை உண்டு. கடவுள் நிரபராதிகளைக் கைவிடார் என்பது திண்ணம். ஆகவே, இவ்விஷயம் அவசரப்பட்டுச் செய்யக் கூடியதாயில்லாமல் கதாசிரியனைப் போல் பொறுமையுடனிருந்து முடிவில் வெற்றி பெற வேண்டிய சங்கதியாயிருக்கிறது. ஆதலின், சற்று கால தாமதமானாலும், நீ என் மீது குற்றம் சொல்லாமலும், நான் சிரத்

---

கணவனுக்குத் தன் மனைவி சிறியவளாய் இருப்பதாகவே நினைவாம். ஆனால், சில சமயங்களில் பெரிய பெண்ணின் தோற்றமாக இருப்பதைக் காண்கையில், நீ என்ன பெரிய பெண்போல் தோற்றுகிறாயே என்கிறானும். அதைக் கேட்ட அவள் புன்னகை கொள்கிறாளாம்!

தையுடன் கவனிக்க வில்லை யென்று வருந்தாமலும் சகித்திருக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

கிருஷ்ணவேணி :— உங்கள் வக்கீல் பிரஸங்கம் நன்றாகவே இருக்கிறது. நான் பொறுமையுடன் உங்களை மனதார நம்பியிருப்பேன். அதைப் பற்றிச் சந்தேகம் வேண்டாம். ஆனால், உங்களையே மணப்பதென்றிருந்த என்னுடைய விவாக ஆசையைப் பாழ்செய்து கமலவல்லியைக் கைபிடித்தது போல, இராஜசந்திரன் விஷயத்திலும் ஏமாற்றி விடவேண்டாம். வக்கீல்களை நம்பவும் முடியவில்லை; நம்பாதிருக்கவும் முடியவில்லை. மிக்க வேண்டியவர்களாக இருந்து எவ்வளவோ பிராணுபத்துகளினின்றும் தப்பவைத்துக் காப்பாற்றுகிறார்கள். ஏமாறிப் போன ஒருவனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றி அவனைப் புது மனுஷ்யனுய்த் தலை நிமிர்ந்து நிற்கவும் செய்து விடுகிறார்கள், இவ்வளவு மகோபகாரங்கள் செய்த இவர்களே பிறகு எத்தனை கடிதங்கள் போட்டாலும் பதில் எழுதாமல் மௌனமாய் விலகி இருந்துவிடுகிறார்கள். ஒரு தப்பும் செய்யாத போதே இப்படி வேறுபட்டுப் போகிறார்கள், அதில் தங்களையும் சேர்க்கவே வேண்டியிருக்கிறது.

கண்ணப்பன் :—குத்துச் சொற்கள் கொண்ட உன் வார்த்தைகளுக்கு நான் பெரிதும் இரக்கப்படுகின்றேன். நான் உன்னையோ கமலத்தையோ காதலித்தது கிடையாது. என் வக்கீல் வேலையில் காதலுக்கு நேரமும் கிடைக்கவில்லை. நான் எந்தச் சிற்றின்ப நூல்களையும் வாசித்தவனல்ல. காமத்தால் நேருங் கேடுகளை என் வீட்டிற்குப் பக்கத்திலுள்ள ஆஸ்பத்திரிக்கு வரும் ஸ்திரீரோகப் பிணியாளரைப் பார்த்து நல்ல பாடம் கற்றுக் கொண்டிருக்கிறேன். என்னிடம் வரும் வழக்குகளிற் பாதி ஸ்திரீகளின் சம்பந்தமுடையதே. விபசாரத்தின் முடிவு எவ்வகையாய்த் திரும்பு மென்பது என்னிடம் வரும் வழக்குகளே எனக்குத் தெரிவிக்கும். ஆதலின், காதல் என்பதையே நான் எண்ணுதிருந்தவன். உன்னை நெருங்கிய பந்துவகையில் வைத்துப் பிரீதித்ததே தவிர, வேறு வித்தியாச சிந்தை எனக்கு இல்லை. நீ என்னைக் காதலித்திருந்ததையும் நான் அறியேன்.

கிருஷ்ணவேணி :— இன்னும் என்னென்ன சொல்லப்போகிறீர்கள்?

கண்ணப்பன் :—என் பேச்சுகள் உனக்கு விநோதமாகப் படுகின்றன போலும்! நீ இதற்காக வருத்தமடைய வேண்டாம். கடவுள் உனக்கு என்னை விடப் பதின் மடங்கு செல்வாக்கும் அறிவுமுடைய ஒரு கணவனைத் தருவார். விவாகம் பிராப்தம்போல் அமைவது. கமலவல்லியின் விவாகப் பேச்சு நான் எதிர்பாராமல் நேர்ந்த சம்பவம். போனதுபோகட்டும்.

என்று கூறித் தன் மெல்லிய ரோஸ்வர்ணப் பட்டுக் கை குட்டையால் அவளுடைய கண்ணீரைத் துடைத்தான். அவளும் மனம் தேறினாள். இருவரும் எழுந்து தோட்டத்தை விட்டுப் புறப்படுகையில் மெத்தை மீதுள்ள ஜன்னலின் கதவு திறக்கப்பட்டிருப்பதைக் கண்ணப்பன் கண்டான். அங்கே கமலா நின்று கொண்டு இவர்களைப் பார்த்தவாறு

---

காலம் தவறித் தரும் சம்பளமானது ஆறிப்போன தீபத்திற்கு எண்ணெய் ஊற்றியது போலாகிறது. ஆறி அணையும்போது அந்தத் தீபமானது தான் தவித்த தவிப்பை எளிதில் மறக்க முடிகிறதில்லை.

இருந்தான். இதைக் கண்ணப்பன் கிருஷ்ணவேணிக்கு மெதுவாக "அதோ எதிரே மெத்தை மீதுள்ள ஜன்னலைப் பார்; அங்கே கமலா நின்று கொண்டு நம் மிருவரையும் கவனிக்கிறுன்" என்றுன்.

கிருஷ்ணவேணி :— ஆம்! ஆம்! நான் உன்னுடன் பேசுவதைக் கண்டு அவளுக்கு சந்தேக முண்டாகிறது. எங்கே தன் சொத்தை நான் அபகரித்து விடுவேனே என்று பயப்படுகிறுள் போலும்.

கண்ணப்பன் :—சே, அவள் அவ்விதம் ஸந்தேகிப்பவளல்ல. நான் எத்தனையோ நாட்களாக உன்னிடம் பேசிக் கொண்டு வருகிறேனே யொழிய இன்று மட்டும் உன்னிடம் நூதனமாகப் பேசவில்லையே? அத்தை மகள் என்று பேசியதே தவிர அன்னிய ஸ்திரீயிடம் நான் பேசவில்லையே? நீ கமலாவைப் பற்றிப் பேதமாக எண்ணுதே.

என்று சொல்ல, கிருஷ்ணவேணியும் மௌனமாகக் கண்ணப்பனுடன் வீட்டிற்குள் நுழைந்து சற்று நேரம் இருந்து கமலாவிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டுச் சென்றுள். அவள் சென்றதும் கண்ணப்பன் கமலாவின் அறைக்குள் நுழைந்தான்.

கமலா :—வாருங்கள், வாருங்கள்; உட்காருங்கள். என்னைத் தெரிகிறதா? என் பேர் தான் கமலா. உங்கள் அத்தைமகளுடன் ஒய்யாரமாகத் தோட்டத்தில் ஸல்லாபித்து நின்றீர்களே! உங்கள் கைக்குட்டையால் அவள் முகத்தையும் துடைத்தீர்களே! ஆ! எத்தனை அன்பு? இந்தப் புருஷவர்க்கத்தை நம்பவே கூடாது. எப்பொழுதும் ஒரு அன்னியப் பெண்ணிடம் கண் போடுவதே ஆடவர்க்கு வழக்கம். அவளைக் கற்பழித்த பிறகு திரும்பிக் கூடப் பார்க்கமாட்டார்கள். கிருஷ்ணவேணிக்கு அவள் கற்பை மிச்சம் வைத்தீர்களா?—இல்லையா?

கண்ணப்பன் :—என்ன கமலா? இப்படிப் பேச ஆரம்பித்துவிட்டாய்? நானும் கிருஷ்ணவேணியும் ஒரு ரகசியம் பேசுவதற்காகத் தோட்டத்திற்குப் போனேம். இதில் என்னகுற்றம்?

கமலா :—ஒரு யுவதிக்கும் ஒரு யுவகனுன கனவானுக்கும் அப்படித் தனித்துப் பேசவேண்டிய ரகசியமென்னவோ? காதல் ரகசியமா? இரண்டாவது மனைவியாக அவளுக்கும் ஒரு தாலி கட்டிவிடுகிறதுதானே? நான் மாத விலக்கானல் அவள் உங்களுக்கு அந்த வேளையில் துணையாக இருப்பாள். ஒரு மனைவி கோபித்தால் இன்னெரு மனைவியிடம் ஸந்தோஷமாக இருக்கலாம். மூத்தவள் இறந்தாலும் இளையாள் இருக்கிறுள் என்ற ஒரு தைரியத்தையும் பெறலாம். ஒவ்வொரு பெண்ணினிடமும் ஒவ்வொரு இன்பருசி காணலாமல்லவா? போகட்டும், நீங்கள் பேசிக்கொண்ட ரகசியத்தை நான் அறியலாமா?

கண்ணப்பன் :—உனக்கு மறைத்த ரகசியம் ஒன்றுமில்லை. கிருஷ்ணவேணிக்கு எப்படிச் சொந்தமோ அப்படியே உனக்கும் சொந்தமான—பிராணனை—ஒருவனைப்பற்றியே பேசிக்கொண்டிருந்தோம். வேறு வித்தியாஸமில்லை.

(தொடரும்.)

---

பிறருடைய நகைகளை இரவல் கேட்க வருவதில் வெகு துரிதம். தன் நகைகளையோ பளபளப்பு குன்றுமல் பெட்டியில் வைத்துக் கொள்வது, தன்னுடையதைமட்டும் எவருக்கும் தருவதே யில்லை. ஆனல், பிறர் இரவல் தருவதில்லை யென்று ஊரரைப் பழிப்பதில் மட்டும் குறைவில்லை.




**திருநெல்வேலி சீமை சரித்திரம்.**

இது பாஞ்சாலங் குறிச்சிச் சண்டைகளுள்பட அடங்கியது. கட்டபொம்மு நாயக்கரின் அதிசயச் செயல்களும், தமிழ் நாட்டினரின் வீரமும் வாசிக்குந்தோறும் ஒரு புது உற்சாகம் உண்டாகின்றது. 370-பக்கங்களுள்ள விஸ்தாரமான சரித்திரம். எட்டயபுரம் ஸ்ரீமான் எஸ். குருகுஹதாஸப்பிள்ளை யவர்கள் இயற்றியது. விலை ரூ. 1—12—0.

**இரட்டைக் கோலை மர்மம் :—**

இது சிறு கதை யெனினும் பெருங் கதையைவிட இது மிக ருசிக்கின்றது. துப்பறியுந் திறன் நன்கமைந்துள்ளது. ஸ்ரீமான் கடலூர். வெ. இராமச்சந்திரரவர்கள் இயற்றியது. 28-பக்கங்கள். விலை அணா 4.

**ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் சரிதம் :—**

ஸ்வாமிகளின் சரித்திரம் ஸம்பூர்ணமாக அடங்கியது. சிறந்த ஆராய்ச்சி முறையில் எழுதப்பட்டுள்ளது. உயர்தரமான காகிதமும் அச்சும் அழகிய பதிப்பும் கொண்டது. படங்கள் நிறைந்தது. ஸ்ரீமான் மாங்குடி சா. கிருஷ்ணய்யரவர்கள் இயற்றியது. 80-பக்கங்கள். விலை அணா 8.

**ஆஸ்திக நாஸ்திக சம்வாதம் :—**

இது சுயமரியாதை இயக்கத்திற்குத் துணை புரியும் நூல். கடவுளே யில்லை யென்று தர்க்க முறையில் விவரிக்கப் பெற்றுளது. மிகு சமத்காரமாக ஆக்கியுள்ளது. நூலாசிரியர் தம் கருத்துக் கிசைய விஷயங்களைச் சேர்த்துப் போற்றவும் தூற்றவும் கூடும். நாஸ்திகன் ஸ்ரீமான் C. K. குப்புசாமி அவர்கள் பதிப்பித்தது. டிம்மி 170-பக்கங்கள். விலை அணா 6.

**ஆலி ஜனாப். ரா. கி. ஹாஜி முகம்மத் காசிம், ஜே. பி. மர்ஹூமும் அவர்கள் ஜீவிய சரிதை :—**

வர்த்தகத்துறையில் வெற்றி பெற்ற பெரியாரின் வரலாறும், அவரது தானதர்ம விசேஷங்களும் விரிவாக எடுத்துரைக்கப்பெற்ற நூல். சென்னை ஸைபுல் இஸ்லாம் ஆசிரியரவர்கள் இயற்றியது. டிம்மி 60-பக்கங்கள் கொண்டது.

**பஞ்சமா பாதகங்கள் :—**

பஞ்சமா பாதகங்கள் நேரும் காரணங்களை நீக்காது அந்தப் பாதகங்களை மட்டும் பழித்தலால் ஆம் பயன் என்னவென்று தர்க்க சாஸ்திர நுட்பமாய் வரைந்த நூல். ஸ்ரீமான் சி. எ. அய்யாமுத்து அவர்கள் இயற்றியது. 52-பக்கங்கள், விலை அணா 2

**வெளியாய்விட்டது!**

**உடனேழுதுங்கள்!!**

**ஆங்கீரஸ வருஷத்திய**

**அமிர்த குணபோதினி பஞ்சாங்கம்**

100-பக்கங்கள் கொண்ட அமிர்த குணபோதினி பஞ்சாங்கம் விலை அணா 4. சந்தாதாரர்களுக்கு மாத்திரம் விலை அ. 2.

விலாஸம் தெளிவாக எழுதவும்.

# தென்கலை (Y) வடகலை (U) விவாதம்



ஸ்ரீ விஷ்ணு ஸ்தலங்களில் ஸ்ரீரங்கம் 108-திருப்பதிகளில் முதன்மையாகச் சொல்லப்படுவது போலவே, தென்கலை—வடகலை விவாதத்திலும் முதன்மை பெற்றதாய் விளங்குகின்றது. ஸ்ரீரங்கம் கோயிலுக்கு ஒரு மடாதிபதி இருக்கிறார். சாதாரணமான மரியாதைகளே அவருக்கு ஏற்பட்டிருப்பினும் "தலைவர்" என்ற ஸ்தான கௌரவம் அவருக்குப் பூரணமாயுண்டு. இவர் தென்கலை (Y) யைச் சேர்ந்தவர். ஸ்ரீரங்கம் கோயிலும் தென்கலை (Y) கொண்டதே.

ஃ

வெளியூரிலுள்ள அஹோபிலம் என்ற வடகலை (U) மடத்தைச் சேர்ந்த வடகலை (U) ஜீயர் ஸ்ரீரங்கம் வந்து கோயிலுக்குள் தமது மரியாதைகளான விருதுகளுடன் செல்ல முயன்றார். இவரும் ஒரு மடாதிபதி. ஜீயர் என்பது பிராமண வகுப்பினரில் வைணவத் துறவிகளுக்குக்குறிப்பிடும் மதச்சார்பான ஒரு பதமாகும். அஹோபில மடாதிபதி ஸ்ரீரங்கம் கோவிலுக்குள் தமது விருதுகளுடன் பரிவாரங்களோடு செல்லுவதற்கு வசதியாக ஸ்ரீரங்கம் கோவில் தர்மகர்த்தர்கள் ஒரு புதுஏற்பாட்டைச் செய்ய முயன்றனர். அதன் விவரமாவது:—

ஃ

ஸ்ரீரங்கம் கோயிலுக்குள் செல்வதற்குப் பல வாயிற்படிகள் உள்ளன. அவற்றில் ஸ்ரீ ரங்கநாதரின் மூலஸ்தானத்திற்குச் சமீபித்து இருக்கிறதுக்கு ஆரியப்பட்ட வாசல் என்று பெயர். இந்த வாசலுக்கு இப்பாலேயே வடகலை மடாதிபதிகளோ மற்ற எவரோ தங்கள் விருதுக்கொடிகளுடன் வரலாமென்பதும், அந்த வாசலுக்கு அருகில் வரக்கூடாதென்பதும் பூர்வீகமான ஏற்பாடு. சாதாரணமாகக் கோயிலுக்குள் செல்வதென்றால் அதைப்பற்றி எவ்வித தடையும் இல்லை. ஆனால், ஒரு மரியாதையுடன் விருதுகளுடன் செல்லும்போதுதான் ஆக்ஷேபனை உண்டாகிறது. கோயில்தர்மகர்த்தர்கள் புது விதமாக அந்த வாயிற்படி வரையில் விருதுக் கொடிகளுடன் வடகலை மடாதிபதி வரலாமென்று புது வித ஏற்பாடு செய்தனர். புதிதாக ஒரு ஏற்பாடும் செய்யக்கூடாதென்று ஸ்ரீரங்கம் மடாதிபதி வழக்குத் தொடர, அதன் பேரில் செய்ததீர்ப்பே நாளது வரையில் இருந்து வருகிறது. இந்தத் தீர்ப்பில் ரஸமான பல விஷயங்களும், ஸ்ரீரங்கம் கோவிலின் ஆசார சம்பிரதாயங்களும், வடகலை—தென்கலைப் போரின் பூர்வ வரலாறும் வெளியாவதனால் அதனை இங்கு பதிப்பிக்கிறோம். இதில் ஸ்ரீரங்கம் மடாதிபதி வாதியாதார் பிரதிவாதி அஹோபில மடாதிபதியாவார்.

ஃ

திருச்சி, டிசம்பர் 13௳ 1924௵ ஸ்ரீரங்கம் ஜில்லா முன்சிப்பு கோர்ட்டில், அகோபிலமடம் ஜீயர் தம்முடைய பரிவாரங்களுடன் செல்லக்கூடாதென்று தடை உத்தரவு பிறப்பிக்கும்படி கொடுத்த மனுவின்பேரில் முன்சீப்பு அவர்கள் செய்த தீர்ப்பின் சாரம் பின்வருமாறு:—

ஃ

"இதற்குமுன், அகோபிலமடம் ஜீயர் ஸ்ரீரங்கத்திற்கு தரிசனத்திற்கு வந்தபோது என்ன நடந்த தென்பதைக் கொண்டு இரண்டு கக்ஷிகளின் உரிமைகளைப் பற்றித் தீர்மானிக்க வேண்டி யிருக்கிறது. அதிலிருந்து, தற்போது தர்மகர்த்தாக்கள் செய்திருக்கும் தீர்மானம் மாமூலுக்கு விரோதமா அல்லவாவென்று தெரியும். இதுசம்பந்தமாகத் தாக்கல் செய்யப்பட்டிருக்கும் பத்திரங்களிலிருந்து, 1793, 1806, 1829, 1889, 1892, 1915 வருஷங்களில் அகோபிலமடம் ஜீயர் ஸ்ரீரங்கம் கோவிலுக்கு வந்ததாகத் தெரிகிறது. இந்த ஒவ்வொரு சமயத்திலும், விவாதமும் விவகாரமும் நடந்திருக்கிறது. 1829-ம் வருஷத்திலிருந்து முதல் பிரதிவாதியின் முன்னோர்கள் தங்களுக்கு இந்த உரிமை யுண்டென்று கூறியிருக்கிறார்கள். ஒவ்வொரு தடவையும் வாதியின் முன்னோர் இதை ஆக்ஷேபித்ததோடு, நீதிபதிகள் தலையிட்டு முதல் பிரதிவாதியின் முன்னோர் அந்தப் பாத்யதைகளைக்கொண்டாடாதவாறு தடுத்திருக்கின்றனர். இதர தஸ்தாவேஜிகளைக்கொண்டு, இந்தக்கோவில் தென்கலேக் கோவில் என்று ஏற்படுகிறது. 1808-ம் வருஷத்தில் திருச்சியில் இருந்த ஜில்லா கோர்ட்டார், ஸ்வாமியின் நெற்றி, மண்டபம், கருடஸ்தம்பம் முதலியவற்றில் தென்கலே நாமம் இருந்ததாகவும், ஸப்தப்பிராகாரத்தில் வடகலேயைச் சேர்ந்தவர்கள்மீது தென்கலேயைச் சேர்ந்தவர்களே ஆதிக்கம் வகித்து வந்தனரென்றும், ஆகையால் ஸ்ரீரங்கம் கோவில் தென்கலேக் கோவில் தான் என்றும் முடிவு செய்திருக்கின்றனர். ஃ

தர்மகர்த்தாக்கள் செய்திருக்கும் தீர்மானம் தான் இந்த வழக்குக்குக் காரணம். அந்தத் தீர்மானத்தினல் கோவிலின் தென்கலேத்தன்மை மாறி அதனல் ஸ்வாமிக்கு அபசாரம் ஏற்படுமென்றும், மேலும், அந்தக் கோவிலில் தமக்கே உரித்தாகிய உயர்ந்த கௌரவங்கள் இதனல் பாதிக்கப்படு மென்றும் வாதி கூறுகிறார்.

ஃ

கோவிலின் தன்மையைப் பற்றி முதலில் கூறுகிறேன். ஸ்ரீமான் ஜஸ்டிஸ் சேஷகிரி ஐயருடைய தீர்ப்பில், கோவில் தென்கலேக் கோவில் என்றும், வடகலேச் சிப்பந்திகளுடைய பாதுகாப்பிற்காக ஒரு வடகலே தர்மகர்த்தா அவசியமென்றும் கூறப்பட்டிருக்கிறது. வடகலே தர்மகர்த்தா சமயம் நேர்ந்த போதெல்லாம் கோவிலின் மாமூல்களை மாற்றி வடகலேக்கு அதிக செல்வாக்கு ஏற்படும்படி செய்ய முயற்சித்ததாக ஹைகோர்ட்டார் கூறியிருக்கின்றனர். ஆகையால், இது தென்கலேக்கோவில் என்று நிச்சயமாக ஏற்படுகிறது.

ஃ

இப்போது அஹோபில மடம் ஜீயர் தமது பரிவாரத்துடன் உள்ளே சென்றால் தென்கலேத் தன்மைக்கு பாதகம் ஏற்படுமா என்றும், ஸ்வாமிக்கு அபசாரம் ஏற்படுமா, மாமூலுக்கு விரோதம் ஏற்படுமா என்றும் கவனிக்கவேண்டும். மேலாகப் பார்ப்பவர்களுக்கு அப்படி யொன்றும் ஏற்படாதென்று தோன்றியபோதிலும், ஹிந்துக்கள் மத விஷயத்தில் அனுஷ்டிக்கும் முறைகளைக் கவனித்தால், இது மாமூலுக்கு விரோதமென்றும், முதல் பிரதிவாதியின் முன்னோர் எப்போதும் தம்முடைய பரிவாரங்களுடன் உள்ளே செல்ல அனுமதிக்கப்படவில்லே யென்பதும் நிச்சயமாகிறது. இராஜாக்களுடைய சபையில் மரியாதைகள் எவ்வளவு ஸம்பிரதா

யப்படி நடக்கின்றனவோ அதைவிட ஸ்ரீரங்கம் கோவிலில் அதிகமான ஸம்பிரதாய முறைகள் அனுஷ்டிக்கப் படுகின்றன என்பதை ஞாபகத்திலிருத்தவேண்டும். அதில் ஏதாவது சிறிது மாறுதலேற்பட்டாலும் சச்சரவும் குழப்பமும் ஏற்படும்.

ஃ

தர்மகர்த்தாக்கள் பூராவும் தங்களுடைய அதிகாரத்திற்குட்பட்ட ஒரு விஷயத்தைப்பற்றித் தீர்மானம் செய்திருப்பதால் கோர்ட்டார் இதில் தலையிடக்கூடாதென்று வாதிக்கப்பட்டது. இதைக் கவனிக்கத் தான் வேண்டும். தர்மகர்த்தாக்கள் மாமூலுக்கு விரோதமாக ஒரு ஏற்பாடு செய்தால் அது நம்பிக்கை மோசமாகும். அவர்கள் தங்களுடைய செய்கைக்கு ஒரு ஆதாரமும் காட்டவில்லை. தவிர, ஆரியபட்ட வாசலைத் தாண்டி, தங்கவெள்ளித் தடிகளைத் தூக்கிக் கொண்டு செல்லும்படி அனுமதிப்பது புதிதாக அஹோபிலமடத்து ஜீயருக்காகச் செய்யப்படுவதென்றும், மேலும், இதர மடாதிபதிகளுக்கும் அந்த உரிமை கொடுக்கப்படுமென்பது, இதர வகுப்பினரைச் சேர்த்துக் கொள்ளுவதற்காகவென்றும் வாதி பக்கத்தில் கூறப்படுகிறது. இதிலிருந்து தர்மகர்த்தாக்களின் தீர்மானம் புதிதாக ஒரு முறையை ஏற்படுத்த முயற்சிக்கிறதென்பது என் அபிப்பிராயம். முதல் பிரதிவாதி தம்முடைய பரிவாரங்களுடன் ஆரியப்பட்ட வாசல் வரையில் செல்ல உரிமை யுண்டென்று கூறுகிறார். இது வாதத்திலிருக்கிறது. இனித்தான் தீர்மானிக்கப்பட வேண்டும். முதல் பிரதிவாதியை ஸ்வாமி தெரிசனத்திற்குச் செல்லக் கூடாதென்று தடுப்பது சாதாரணமாக ஒருவருக்குள்ள உரிமையைக் கூட மறுப்பதாகும். அவர் தம்முடைய பரிவாரங்களுடன் செல்லுவேனென்று கூறும்போது தான் சிரமம் ஏற்படுகிறது. நான் மிகவும் ஜாக்கிரதையாக இதைக் கவனித்தேன். ஒரு தடவையாவது தம்முடைய பரிவாரத்துடன் செல்ல அகோபிலமடம் ஜீயர் அனுமதிக்கப்பட்டிருக்கிறரென்று நிரூபிக்கப்பட்டால் நான் இந்த மனுவைத் தள்ளிவிடத் தயாராக இருக்கிறேன்.

ஃ

பல விஷயங்கள் சாதுர்யமாக வாதிக்கப்பட்டன. அவற்றைப்பற்றி நான் ஒரு முடிவும் கூறவில்லை. அசல் வழக்கு விசாரணைக்கு பாதகமாகவோ சாதகமாகவோ இருக்கக்கூடிய எதையும் பற்றி நான் கூற விரும்ப வில்லை. ஆனால், வாதி கூறுவதற்கு ஆதாரம் இருப்பதாகவும், விஷயம் விசாரித்து முடிவு செய்யப்பட வேண்டிய தென்றும் கருதுவதால், இவ்வழக்கு முடியும்வரை முதல் பிரதிவாதி தம்முடைய பரிவாரத்துடன் கோவிலுக்குள் செல்லக்கூடாதென்று உத்தரவிடுகிறேன். ஃ

ஒய் (Y) அடையாளம், யூ (U) அடையாளம் என்று தென்கலை வடகலையைச் சாதாரணமாகப் பரிகசித்துச் சொல்லினும், இவ்விரண்டினுடையவும் விவகாரங்கள் வெகுவாக நீண்டுகொண்டு போகிறதென்பதும், அநேக வருடகாலமாக இந்தப் பெரிய போர் இருந்துவருகிறதென்பதும் இத்தீர்ப்பினல் ஒருவாறு விளங்கும்.

---

சாதிவ்த்தி யாசமிகுத் தோற்றுமைவிட் டிந்தியா தவிக்கும்போது
சோதிவட கலையுந்தென் கலையுமெதி ராடிநிற்குஞ் சூட்சி கண்டால்
ஆதியண்ணு மலைப்பரனை ஆறுகோண்டு போகமற்றை யமர்தேய்வங்கள்
ஓதியசக் கரைப்பொங்கற் கோப்பாரி வைத்தகதை வோவ்வுந்தானே!




# எவருக்கு அதிக வேலை?

1. ஒரு நாள் சாயங்காலம் வேலைகளையெல்லாம் செய்து முடித்து உணவருந்திய பின்பு குடியானவனான நல்ல முத்தும், அவன் மனைவி கருப்பாயியும் உல்லாசமாக உலாவிய வண்ணம் சல்லாபித்துக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களுக்குள் எவருக்கு அதிக வேலை யென்பதைப்பற்றி ஒரு தர்க்கம் எழுந்தது.

2. "நிலத்தை உழுது பண்படுத்தி வித்து விதைப்பதைப் பார்த்தால், ஒரு வீட்டில் இருந்து உணவு தயார் செய்வது, குழந்தைகளைக் கவனிப்பது, முதலிய வேலைகளெல்லாம் எனக்கு எவ்வளவோ மேலானதாகத் தோன்றுகின்றது" என்றான் நல்லமுத்து.

3. "ஆமாம், தூரத்துப் பயிர் கண்களுக்கு அழகாகத்தான் படும். கிட்ட நெருங்கிப் பார்த்தால் உண்மை தெரியும். உங்களுக்கு வயலில் வேலை ஒன்றுதானே? எனக்கு வீட்டில் எவ்வளவோ வேலைகள் இருக்குதே" என்றாள் கருப்பாயி.

4. அத்தருணம் கருப்பாயினது தம்பி அங்கு வந்து சேர்ந்தான். இருவரும் அவனிடத்தில் தங்கள் விவாதத்தைக் கூறி, தங்கள் வழக்கைத் தீர்க்கும்படி வேண்டிக் கொண்டனர். அதற்கவன், **"ஒருவர் வேலையை மற்றொருவர் செய்து பார்த்தால், எவருக்கு அதிக வேலை யென்பது தானாகவே விளங்கிவிடும்"** என்று கூறிவிட்டுச் சென்றான். நல்லமுத்துவும் கருப்பாயியும் அவ்வண்ணமே செய்யத் தீர்மானித்தனர்.

5. மறுநாள் காலையில் கருப்பாயி தன் புருஷனை நோக்கி, 'குழந்தை தொட்டிலில் கிடக்கிறது; அழாமல் பார்த்துக் கொள்ளுங்கள்; கோழிக் குஞ்சுகளுக்கு இரை போட்டு அவை வெகு தூரம் போகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். தயிர் கடைய மறந்து விடாதீர்கள்; நெல் குத்தி சமையல் செய்து வையுங்கள்; நான்

---

ஒருவர் தான் பசியாற் களைத்து மூர்ச்சித்தாலும் அதை ஒரு பெரிதாக எண்ணார். ஆனால், தன் கண்ணனைய குழந்தைகள் பசியால் வாடுவதைக் காண அவர் மனம் சகியாது. அந்தக் கண்றாவியான காட்சியிலும் மரணமே மேல் எனத்தோன்றும்.

போய் வருகிறேன்" என்று மட மடவெனக் கூறிவிட்டு வயலுக்குச் சென்றாள்.

6. நல்லமுத்து ஸந்தோஷத்தோடு கோழிக் குஞ்சுகளுக்கு இரை போட்ட பின்பு அவை வெகு தூரம் போகாமலிருப்பதற்காக என்ன செய்யலாமென யோசித்தான். அப்போது திடீரென அவன் மனதில் ஒரு எண்ணம் உதித்தது. கோழிக் குஞ்சுகளின் ஒவ்வொரு காலையும் சிறு கயிற்றால் கட்டி பெரிய கோழியின் கால்களோடு பிணைத்து விட்டால் அவை வெகுதூரம் போகாதென நினைத்து அவன் அப்படியே செய்தான். அப்பால் நெல் குத்துவது, தயிர் கடைவது, குழந்தையின் தொட்டிலை ஆட்டுவது, எல்லாவற்றையும் ஒரே நொடியில் செய்து முடிக்க ஏதேனும் குறுக்கு வழி இருக்கிறதாவென நீள யோசித்து ஒரு முடிவக்கு வந்தான்.

7. தயிர் கடையும் கோலில் ஒரு நூலைக் கட்டி அதைத் தன் இடுப்பிலும், குழந்தைத் தொட்டிலில் ஒரு கயிற்றை கட்டி அதைத் தன் கைகளிலும் மாட்டிக் கொண்டால், நெல் குத்தும்போது உண்டாகும் தேகத்தின் அசைவால் தயிர் கடைகிற கோல் சுற்றுமென்றும், கையால் வேலை செய்யும்போது தொட்டில் அசையுமென்றும், நெல்லையும் சீக்கிரம் குத்தி விடலாமென்றும் அவனுக்குத் தோன்றியது. உடனே அவன் அப்படியே செய்து பார்த்தான்.

8. அப்போது திடீரென வீட்டு முற்றத்தில் பெருங் குழப்பமுண்டாயிற்று. ஒரு கழுகு கோழிக்குஞ்சு ஒன்றைத் தூக்கிக் கொண்டு ஆகாயத்தில் கிளம்பிற்று. அந்தக் கோழிக் குஞ்சின் கால்கள் கயிற்றால் கட்டப்பட்டு மற்றக் கோழிக் குஞ்சுகளோடும், பெட்டைகோழியோடும் பிணைக்கப்பட்டிருந்ததால், அவைகளும் கூச்சலிட்டுக் கொண்டு அப்படியே அந்தர மார்க்கமாய்ப் பிரயாணம் செய்ய ஆரம்பித்து விட்டன. அந்த ஆரவாரத்தைக் கேட்ட நல்லமுத்து ஆத்திரத்தோடு வெளியில் குதித்தான். அவன் கைகளும் இடுப்பும் தொட்டிலோடும், தயிர் கடையும் கோலோடும் முறையே கயிற்றால் கட்டப்பட்டிருந்ததால் அவன் வீட்டுத் திண்ணையில் குப்புற விழுந்தான். அதே சமயத்தில் குழந்தை தொட்டிலிலிருந்து கீழே விழுந்தது. தயிர் பானை அப்படியே கவிழ்ந்து விட்டது. உலக்கை திடீரென விழுந்து பானையை உடைத்தது. நல்லமுத்து எழுந்து வந்து அழும் குழந்தையை எடுப்பதற்குள் அடுப்பில்

---

*பிறர் கஷ்டப்படவேண்டுமென்று ஆத்திர வேளைகளில் நினைத்தாலும், பிறகு உத்தமர்களின் மனஸாக்ஷி அதற்கு உடன்படுகிறதில்லை. தன் மனைவியைத் தெய்வம் தான் கேட்க வேண்டு மென்று கோபிக்கினும், அவளைத் தெய்வம் கேட்கவேண்டுமென்று அவன் மனஸ்பூர்வமாக விரும்புவதில்லை. ஏனெனில், அவளுக்கு அவஸ்தைநேரிடில் தானும் அதில் பங்கு பெறவேண்டியிருப்பதால் தான்.*

இருந்த தீயும் கெட்டு விட்டது. நல்ல முத்து இன்னது செய்வ தெனத் தோன்ருமல் திகைத்து நின்ருன்.

9. அச்சமயம் கருப்பாயி வீடு வந்து சேர்ந்தாள். வீட்டின் அலங்கோலத்தைப் பார்த்ததும், "கோழிக் குஞ்சுகள் எங்கே? சமையல் செய்யவில்லையா? குழந்தை ஏன் அழுகிறது? தயிர்ப் பானையை உடைத்து விட்டீர்களா? என்ன! இன்னும் நெல் குத்தி யாகவில்லையா?" என்று பல கேள்விகளை மூச்சு விடாமல் வெளியே கொட்ட, நல்ல முத்து வெட்கத்தோடு நடந்த விஷயங்களைக் கூறி, "உனக்கு வயலை உழுது விதைப்பது தானே வேலை. எனக்கோ பல வேலைகள் இருந்ததே" என்ருன்.

"அப்படிச் சொல்லுங்கள். இந்த வேலைகளை யெல்லாம் நான் தானே தினந்தோறும் செய்து வருகிறேன். இப்போது நமது தர்க்கம் முடிந்ததா?" என்று புன்னகையோடு வினவினுள் கருப்பாயி.

த. சு. சங்கரலிங்கம்.

## ஒருபோது அது குற்றமில்லை, மற்ருெருபோது அது குற்றம்.

தான் வெளியிலிருந்து வந்தபோது வீட்டைத்தன் தாய் பூட்டிக்கொண்டு எங்கோ சென்றிருப்பதைக் கண்டு வெகுநேரம் காத்துக்கிடந்து, பிறகு பல சாவிகளை இரவல் வாங்கி ஒரு சாவியால் பூட்டைத் திறந்துவிடுகிருன். அதன் பின் வெகுநேரம் பொறுத்துத் தாய் வர, அவளைப் பார்த்துக் குமாரன், எங்கோ அம்மா போனுய், எந்தச் சாவியும் பூட்டுக்குச் சேரவில்லையே என்கிருன். பூட்டைத் திறந்தது தாய்க்குக் குற்றமாகப்படவில்லை. இதே தாய் விரோதி யானுல், பூட்டப்படாமல் தொங்கிக்கொண்டிருக்கிற பூட்டைப் பார்த்துத் தன் குமாரனை திருட்டுச்சாவி போட்டுத் திறந்ததாகச் சொல்லிப் போலீஸுக்கும் தெரிவிப்பதாக ஆரவாரம் செய்வாள். குற்றமும் குற்றமில்லாமையும் மனம் இருக்கும் அந்தந்தக் காலநிலையைப் பொறுத்தது. அன்பு நிறைந்துள்ளபோது எதுவும் குற்றமாகப்படாது. அன்பு மாறினுே ஐயோ! எல்லாம் குற்றமே! பகையே!




1. பத்திரிகை ஏஜண்டின் வீட்டிற்கு ஒவ்வொரு நாளுஞ் சென்று விற்பனைக்காக வைத்திருக்கும் பத்திரிகைகளை நண்பர்களைப் போலப் பேசி மெதுவாகப் படித்துப் பார்த்து வந்து விடுவது சிலரது சுபாவம்.

2. எனக்கு ஒரு முறை காய்ச்சல் வந்தபோதுதான் நோயாளிகளின் துன்பம் எப்படி இருக்குமென்பதை யறிந்து கொண்டேன் என்று ஒரு டாக்டர் கூறுகின்றார்.

3. பிரசங்கமேடையில் பஞ்சமா பாதகங்களை விட்டொழிக்க வேண்டுமென்றும், இன்னும் பல போதனைகளையும் சரமாரியாகப் பொழிகின்றார். அவரே வீட்டிற்கு வந்தவுடன் உடம்பு மிகவும் களைப்பாய் இருக்கின்றது; சோடாவில் கொஞ்சம் பிராந்தி கலந்துகொண்டு வாவெனத் தன் மனைவிக்குக் கட்டளை யிடுகின்றார்.

4. நண்பனுடைய கடிதம் கிடைக்குமென ஒவ்வொரு தினமும் தபால் நிலயம் சென்று காத்திருக்கின்றான். அது என்றோ எதிர்பாராத நாளில் கிடைத்து இன்ப மூட்டுகின்றது.

5. யார் நமக்கு ஆபத்துக்கு உதவக் கூடுமென நம்பியுள்ளோமோ அவர்கள் சமயத்தில் மெதுவாக விலகிக் கொள்வதும், நாம் எதிர் பாராத வேறொருவர் வந்து உதவி புரிந்து காப்பாற்றுவதும் பிரபஞ்சத்தில் காணும் காட்சி.

6. வெகு பிரயாசையுடன் பகல் இரவு தூக்கமில்லாமல் பல சொந்த வேலைகளைக் கவனியாது ஒருவரது திருமணத்தைமுடிக்கின்றார். மாப்பிள்ளையோ மனைவியைக் கண்டவுடன் கலியாணத்துக்குக் காரணமாய் நின்ற அந்த ஒருவரைப் பிறகு கண்ணெடுத்துப் பார்ப்பதே இல்லை.

7, புதிய கெட்டிக்காரனைவிட பழைய பைத்தியக்காரன் மேல். ஏனெனில் அநுபவத்திற்கே மதிப்பு.

8. கிராமபோன் பெட்டி வாங்கும் வரையில் அதனிடத்தில் அமோகமான மோகம். சில நாட்களுக்குப் பின்பு பல மாதங்கள் வரை அதைத் தொடுவதே யில்லை சிற்றின்பப் பிரியர்களும் இப்படியே.

9. அமிர்தினியின் சந்தாநேயர் ஒருவர் கூறுவது:—அமிர்தினி வந்த தினமுழுதும் ஆனந்தமே. எத்தனைமுறை படிப்பினும் தெவிட்டுவதில்லை. பின்பு மறுமாதம் பத்திரிகை கிடைக்கும் வரையில் அதே ஏக்கம்.

C. V. N. நாராயணன் செட்டியார்.

---

ஒரு கதைப் புஸ்தகத்தை இலவசமாய்ப் படித்துக் கொடுத்து விடுவதென்றால், அதன் ஆசிரியருக்கு அதன் விலையைக் கொடாமல் அவர் வயிற்றில் அடித்து ஏமாற்றியதுபோல் தான். பெரிய பணக்காரர்களிற் சிலருக்கு இலவசத்தில் பெறுவதில் வெகு விருப்பம். அவர்கள் நூலாசிரியரைக் காணும்போது "எங்கே நமக்கு ஒரு புஸ்தகங்கூடக் கொடுப்பதில்லையே" என்கிறார்கள்.

# மூளைக்கு விருந்து.

1. ஒருவன் தன்னிடமுள்ள ரூபாய்களை எடுத்துக்கொண்டு தன் மூத்த குமாரன் வீட்டுக்குப் போகும்போது வாசலில் இருந்த தன் மூத்த பேரனுக்கு ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டு உள்ளே சென்றவுடன், தன் மூத்த குமாரன் தகப்பனூர் வைத்திருந்த ரூபாய் அளவு கொடுத்தான். அதை வாங்கிக்கொண்டு வெளியே வரும்போது இளைய பேரனுக்கு ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டு இரண்டாவது குமாரன் வீட்டுக்குப் போனுன். போகும் போது அவ்விடத்திலும் தன் மூத்த பேரனுக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட்டு உள்ளே சென்றவுடன், அவனும் தகப்பனூர் வைத்திருந்த அளவு ரூபாய் கொடுத்தான். அதைப் பெற்றுக்கொண்டு வெளியே போகும்போது இளைய பேரனுக்கும் ஒரு ரூபாய் கொடுத்துவிட்டு, மூன்ருவது குமாரன் வீட்டுக்குப் போகும்போது முன் கொடுத்ததுபோலவே மூத்த பேரனுக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட்டு உள்ளே சென்ருன். அவனும் தகப்பனூர் வைத்திருந்த அளவு ரூபாய் கொடுத்தான். அதைப் பெற்றுக்கொண்டு வெளியே போகும் போது தன் இளைய பேரனுக்கு ஒரு ரூபாய் கொடுத்துவிட்டபின்பு அவனிடம் இருந்த ரூபாய் எல்லாம் மீதமில்லாமல் சரியாய்ப் போயிற்று. ஆதலால் அவன் முதன்முதலில் கொண்டுபோன ரூபாய் எவ்வளவு?

2. ஓர் எண்ணைக்கொண்டு மற்றொரு எண்ணினுல் பெருக்கினுலும், அல்லது அந்த இரண்டு எண்களையும் சேர்த்துக் கூட்டினுலும், ஒரே தொகை வரும். அந்த எண்கள் இரண்டும் எது?

3. ஒரு பூவன் வாழைத்தாரின் விலை எட்டணு; ஒரு ரஸ்தாளி வாழைத்தாரின் விலை 1-2-0; ஷை தார்கள் இரண்டும் கலந்து ஒருவன் நூறு ரூபாய்க்கு நூறு வாழைத்தார்கள் வாங்குகிருன். வகைக்கு எத்தனை வாங்கு கிருன்?

4. நடுவெழுத்து வினு:—1. நன்மைப் பெயர். 2. வாசனைப் பெயர். 3. கமலப் பெயர். 4. சிவன் பெயர். 5. ஓராண்டின் பெயர். 6. கிளியின் பெயர். இப்பெயர்களின் நடுவெழுத்தால் விஷ்ணுவின் பெயர் வரவேண்டும்?

5. ஓரற்புதத் தருவாம்; அதில் ஈராறு கிளைகளுண்டு; இக்கிளை ஒவ்வொன்றுக்கும் சிறிய கிளை நான்குண்டு; இச்சிறுகிளை ஒவ்வொன்றுக்கும் அதனிலும் சிறிய கிளை எழுண்டு; இவ்வேழு கிளைகளிலுமுள்ள இலைகள் பாதி கருமையும் பாதி வெண்மையுமாம். இத்தரு எது?

6. மூன்றெழுத்தி லோராண்டின் பெயர்:—இடையும் முதலும் சேரி லோர் நிறம்; இடையும் கடையும் சேரில் மூவ்வள்ளலில் ஒருவர்; முதலுங் கடையும் சேரில் திற; இடையும் முதலுங் கடையும் சேரில் ஓர் நதியின் பெயராகும். இப்பெயரெது?

7. பற்கள் தெரிவதேன்? பொற்கொல்லர் வீட்டுக்குப் போவதேன்?

☞ இவற்றிற்கு விடுவிப்பு இந்த ஸஞ்சிகையிலேயே யுண்டு.

அரவக்குரிச்சி—S. K. பிச்சை முத்துராஜா.




## 3. இல்லறம்.

(553-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 244. "தாங்குகிற ஆள் உண்டு, தளர்ச்சி உண்டு."



அதுதான் உன் ரகசியம். தான் கண்டபடி செலவிட்டாலும், இரவலில் வேண்டியவரை அள்ளிக் கொடுத்து ஆகி விட்டாலும், தன்னைச் சேர்ந்தவர்கள் பலமாய் வந்து உட்கார்ந்து கொண்டாலும், தான் வரும்படி சொல்லியனுப்பி அந்த வகையில் மனுஷ்யர்கள் வந்து சேர்ந்தாலும், இவற்றிற்கெல்லாம் ஆகவேண்டிய செலவுகளுக்கு வாங்கிப் போடவும் தாங்கவும் வீட்டுக்கார மனுஷ்யன் இருக்கிறான் என்பதினாலேயே இவ்வளவு ஆரவாரமும் செய்கிறாள். அவன் செலவிட முணுமுணுத்தபோது அதற்காகத் தளர்ச்சியும் கொள்கிறான். வந்தவர்களுக்குக் கௌரவமாய் நடத்தாவிடில் தனக்கு அவமானம் என்று துள்ளுகிறாள். கண்டபடி வாரி இறைப்பதில் அது தனக்கு ஒரு கௌரவமென்று நினைத்துக் கொள்கிறாள். தன் வீட்டில் வைத்த காபியைக் கொண்டு போய்ப் பக்கத்து வீட்டிலும் எதிர் வீட்டிலும் கொடுத்து அதில் ஒரு பெருமை முளைத்துக் கொண்டதாக நினைக்கிறாள். இவளிடம் காபியைப் பெற்றுக் கொண்டவர்களோ அதைத் தங்கள் குழந்தைகளுக்குக் கொடுத்து அவ்வளவுடன் தங்களுக்குக் காபிவைக்கிற செலவு இல்லாதபடி நின்று கொள்கிறார்கள். அந்த செட்டுத்தன புத்தி இவளிடம் உண்டாகக் காணோம். அவர்களைப் பார்த்தேனும் கற்றுக் கொள்வதாகவுமில்லை. ஃ

தன் வீட்டுக்கு மற்றவர்களை வரச் செய்து உபசரித்து மகிமைப்பட்டுக் கொண்ட இவள் அவர்களின் வீட்டிற்குப் போனாலோ, இவளை உண்ணச் சொல்வதுமில்லை. அவர்கள் தங்கள் வீட்டுவேலையை ஒரு கையாற் செய்து கொண்டே மற்றொரு கையால் இவளுக்கு வரவேற்பு கொடுத்து வாய் தித்திக்கப் பேசிக் கைச் செலவில்லாமலே இவளை அனுப்பிவிடுகிறார்கள். அவர்கள் எவ்வளவு பக்குவமாயும் தந்திரமாயும் போகிறார்கள் என்பதும் இவள் புத்தி

---

சுகமாய் இருக்கையில் வைத்தியர் ஆயிரம் தடவை நம் கண்முன்பு தென்படுவார். நமது க்ஷேமமும் விசாரிப்பார். நாம் வியாதியானாலோ அழைக்கப் போனாலும் அவர் வீட்டில் இரார். இருந்து அழைத்தாலும் இதோ வருகிறேன் என்பார். வருவது அரிதே. முன்னதாகப் பணப்பை அவிழ்த்தால் வரலாம்.

யில் படுவதில்லை. சென்னப்பட்டணத்தில் நடக்கும் கல்யாணத்துக்குத் தன்னை எப்படியும் அந்த வீட்டு அம்மாள் அழைக்குமென்றும், தான் அந்த அம்மாளை ஆயிரம் முறை உபசரித்திருப்பதாலும், தனக்கு மிகவும் வேண்டியவளானதாலும் தான் போகாமல் விவாகம் நடவாதென்றும் இந்தப் பெருமைக்காரி எண்ணிக் கொள்ளுகிருள். அந்த எண்ணத்தோடு அந்த அம்மாளின் வீட்டிற்கும் மெதுவாகப் போய் விவாகப் பேச்சை எடுக்கிருள். அந்த வீட்டு அம்மாளோ எதிலும் பட்டுக் கொள்ளாத பச்சடியாயிருந்து பக்குவமாய்ப் பேசி அனுப்பி விடுகிருள். விவாகத்திற்கு இவளை வாவென்றும் அழைக்கவில்லை. அந்தப் பேச்சையே எடுக்கவு மில்லை. இவள் ஜாடை தெரிந்து திரும்பி விடுகிருள். இத்தகைய வெளியன்பினருக்காக இவள் தன் வீட்டில் நடத்திய தடபுடல் செலவுகள் கொஞ்சமா? அவை யெல்லாம் தன்னைத் தாங்கிற ஆள் உண்டு என்று செய்த சங்கதி. தாங்குகிற ஆள் யார்? அவன் தான் அவளுடைய கணவன்! ஏமாந்தவன்!!

ஃ

இவ்விதமே, தன் சிற்றன்னையோ, தன் அத்தையோ, தன் பெரியப்பனே இவர்கள் வீட்டிற்கு ஒரு விசேஷத்திற்குப் போகிருள். அவர்கள் வீட்டிற்கு அடுத்த தெருவிலேயே இவளுக்கு வேண்டிய உறவினரும், இவள் தன் வீட்டில் தடபுடல் விருந்து செய்து உபசரித்தவர்களும் இருந்தாலும், அவர்களையெல்லாம் அந்த விசேஷத்திற்கு வரும்படி சொல்லியனுப்ப இவளால் முடிகிறதில்லை. அதற்கு இவள் போயிருக்கிற வீட்டிலும் இவளைத் தாங்கி இடம் கொடுப்பவர்களுமில்லை. அந்த விசேஷத்தை அவர்கள் தங்கள் வீட்டோடு முடித்துக் கொள்கிருர்கள். எவர்களையும் அழைப்பதில்லை. இவளும் அந்தக் குறிப்பு தெரிந்து மௌனமாயிருந்து விடுகிருள், காரணம் என்ன? தன்னைத் தாங்குவோர் அங்கு இல்லாததால் தான். தாங்குவோர் இல்லாத இடத்தில் தளர்ச்சியும் இல்லை; முகத்தைக் கோணிக் கொள்வதும் இல்லை; அப்படிக் கோணிக் கொண்டாலும் அதற்கு மதிப்பு தருவோருமில்லை, இவள் அதிகாரமும் அங்கு செல்வதில்லை. செல்லுகிறதெல்லாம் தன்னைத் தாங்குகிற கணவனிடம் தான்; தளர்ச்சிபட்டுக் கொள்வதும் குறைபட்டுக் கொள்வதும், முகம் கோணிக் கொள்வதும் எல்லாம் அவன் ஒருவனிடம் தான் காட்ட முடிகிறது. அவன் ஒருவனைத்தான் அலறவைக்கப்பண்ண முடிகிறது. வீடு முழுதும் கூட்டங்கள் சேர்த்துக் கொண்டு அவனைச் செலவு செய்யும்படி தொல்லைப் படுத்தவும் முடிகிறது. எட்டணவுக்கு இட்டிலியும், அரைப்படி பாலும் வாங்கி ஆரவாரிக்கச் சொல்லுகிறது. அவன் செலவுகளை எண்ணிக் கண்ணைப் பிசைந்தால் அவனைக் குத்திப் பேசவும் வாய் போகிறது. அவனைத் தவிர மற்ற இடத்திலோ தனது ஆட்ட பாட்டம் எதுவும் செல்லாமல் அடங்கி விடும்படியாகிறது. இவை யெல்லாம் புத்தியில்லாத பெண்களின் செய்கைகள். காசு பணம் சம்பாதிப்பதிலுள்ள கஷ்டத்தை யறியாத ஸ்திரீகளின் சங்கதிகள்.

ஃ

இப்படித் தலை துள்ளி நடப்பதில் இன்னென்றும் உண்டு. கணவன் யோக்கியமாய் மானஸ்தனய் உள்ளவரையில் இந்த ஸ்திரீகள் இவ்விதம் தலை

---

ஆழம் காண முடியாத துயரக்கடல் எப்படி யிருக்குமென்று சிறு குழந்தையொன்று கேட்கிறது. அதற்கு என்ன பதில் சொல்வது? அதன் வாழ்வில் அந்தத் துன்பக் கடலை அறியாமலே போய் விட்டால் நல்லது தான்.

துள்ளிப்போதலும், எதிர்த்தலும் நடக்கின்றது. பிறகு அவன் இவளாலேயே மனம் முறிந்துபோய் ஒரு குடியனாகவோ, வேசிக்கள்வனாகவோ மாறிக்குடித் தனச் சிந்தையேயற்று வீட்டில் உள்ள யாவற்றையும் வேசிக்கு ஒப்புவிக்கிற வனாக ஆகிவிடும்போது இந்தப் பெண்களின் ஆணவமும் அடங்கி, மூன்று வேளைப் புசிப்பு ஒரு வேளையில் சுருங்கி, வீடும் தரித்திரகோலத்திற்கு வந்து குட்டிச்சுவராகின்றது. இவ்விதம் குட்டிச்சுவராக்க மனமில்லாமல் உத்தம வழி யில் வீட்டுக்காரன் நடப்பதால் தான் இந்தப் பெண்களும் மீறி நிற்கிறார்கள். அவன் துன்மார்க்கத்திற்குத் திரும்பிவிடில் இவர்களும் அடங்கித் தொலைவார் கள். பலர் தங்களின் மனைவி சரிவர நடவாமையாலேயே அன்னிய ஸ்திரீயின் வசமாகிப்போய்த் தங்கள் குடித்தனத்தை சின்னாபின்னம் செய்திருக்கிறார்கள். ஆடவர்கள் நல்லோராவதும் தீயோராவதும் பெண்களால் தான். யதார்த்த மான அன்பும் பக்தியும் இல்லாத குடித்தனத்தில் எவர் முன் வந்து சமாதா னம் செய்தாலும், அந்த சமாதானம் நீடித்து நில்லாமல் மறு தினமே கலகங் கள் ஸதிபதிகளுக்குள் தோன்றிக்கொள்ளும். புருஷர்கள் கோழைமனத்தின ராயிருக்க, அதனால் பெண்கள் திமிர்பிடித்து மீறுபவர்களாய் விடுவதுமுண்டு.

ஃ

245. "தனக்கு என்று அடுப்பு மூட்டித் தான் வாழும் காலத்தில் வயிறும் சிறுக்கும், மதியும் பெருக்கும்.

இது நேர்த்தியான அனுபவப் பழமொழி. அதுதான் உண்மை. கண வன் உயிரோடு இருந்தபோது கண்டபடி செலவுகள்செய்து துள்ளிவிழுந்தோ ரெல்லாம், அவன் கண்மூடிப் போன பிறகு—அவனால் வந்த வருமானமும் அவனோடேயே துடைத்துக் கொண்டு போய் விட்ட பிறகு—தானே சொந்த மாய் நாலுகாசு கையில் வைத்துக் கொண்டு அடுப்பு மூட்டுகையில்தான் முன்பு இல்லாத நல்ல புத்திகளெல்லாம் உதயமாய் விடும்; செட்டுத்தனமும் தோன்றும்; காசின் அருமையும் கண்ணுக்குத் தெரியும்; கண்டதை வாங்கித் தரும்படிக் கணவனைக் கேட்டுப் பெருந்திண்டி தின்ற வயிறும் சிறு சிறுக்கும். இப்படிப்பட்ட காலம் வந்து அடங்கிப் போன பெண்கள் எவ்வளவோ பேர் உண்டு. பிறர் வீட்டில் குந்தித்தின்று அரிசியின் விலை என்னவென்று தெரியாமலே காலங்கடத்திய ஆண்மக்களும் பிறகு மனைவியும் தானுமாக ஒரு குடித்தனமாய் ஏற்படும்போது அதற்கான நல்ல புத்தியைப் புதிதாகப் பெற்றுக் கொண்டு அடக்கத்துடன் வாழவும் கற்றுக் கொள்கிறார்கள். முன்பு திமிர் பிடித்துக் குதித்ததெல்லாம் இப்பொழுது மறைந்து போய், குடும்ப பாரம் தம் தலையிலேயே விழுந்து விடுவதில் அடங்கி வணங்கி ஒடுங்கிப் போகிறார்கள். எதுவும் தனக்குத்தானே படும்போது தான்—தான் பாடுபட்டுத் தேடிய பணத்தைச் செலவிடும்போது தான் தெரியவரும் போலிருக்கிறது.

(தொடரும்.)

---

வஞ்சகர்களின் சூழ்ச்சி தெரிந்து, அவர்களே தன் ஜீவ துணைவர்க ளென்று தான் முழு மனதுடனும் நம்பிக் கட்டிவந்த மனக்கோட்டை காற் றாய்ப் பறந்து விடுகிறது. இது பல வருஷங்களுக்கு முன்பே தெரிந்திருந் தால் எவ்வளவோ மேன்மையாயிருக்குமே என்று எண்ணுகிறான்.

# சந்திரமதியின் புத்திர சோகம்.

(507—ம் பக்கத் தொடர்ச்சி.)

மறைநீதியுற்றபுறநாடழித்துவருசேனையாள்வதறியேம்,
அறைநீதிமுற்றுமுணராவமைச்சையணிவாயில்வைத்துமறியேம்,
குறையேயிழைத்துவினையேவிளைத்தகுடிவைத்திருந்துமறியேம்,
இறையேதவத்தின்விளைவேயெமக்குமிதுவோவிதித்தவிதியே!

வேத நீதிப்படியே நடக்கிற அந்நியர் நாட்டைக் கெடுத்து, அங்கிருந்து; வந்து கூடுவனவான சேனைகளை ஆளுஞ்செய்கையைத்தெரிந்தோமல்லோம், பெரியோர்கள் சொன்ன நீதி முழுதுந் தெரியாத மந்திரியை எங்கள் அழகிதான அரசன் மனைவாயிலிலே வைத்தாளவுந் தெரிந்திலோம்; குறையான வைகளையே புரிந்து பாவச் செய்கைகளையே மேன்மேலும் வளர்க்கிற குடிகளை எங்கள் நாட்டிலே குடிவைக்கவுந் தெரிந்திலோம்; இப்படி யிருக்கும் போது, எங்களுக்கும் ஓ ஓ தெய்வமே! ஓ எங்கள் தவப்பயனே! நீங்கள் அமைத்த அமைப்பு இப்படிப் பாம்பு கடித்திறப்பதோ—சொல்வீர்கள் ?

கனமுந்தருக்கள்குலமுந்தரித்தகரமும்பெருத்தவுரமும்
தினமுஞ்சிறக்குமுகமுந்தரித்தசிகையுங்கிடக்குமுறைகண்
டினமுந்தரித்ததுயிரானபாவியிறவாமலென்றன்மகனே!
மனமுந்தரிப்பதிலைநொந்துபெற்றவயிறுந்தரிப்பதிலையே!

கைம்மாறு வேண்டாது கொடுக்கிற மேகச் செய்கையையும், கற்பகமுதலான தெய்வவிருக்ஷங்களினுடைய செய்கையையும் கொண்ட கையும், பெரிதான சாமர்த்தியமும், எப்போதும் சிறந்துள்ள முகமும், தலையிலே கொண்ட குடிமியும், மண்மேற் கிடக்கிற வகைகளைக் கண்டும், இன்னமும் என்னுயிரானபாவி சாவாமலிருக்கிறதாயிற்று; எனது குமாரா! இனி என் மனமும் தாங்குகிறதா யில்லை; வருந்திப் பெற்ற என் வயிறும் தாங்குகிறதா யில்லை;—நீ யிறந்ததாலான துன்பத்தை.

பரவாதிகட்குமிகவேவிளைத்தபடிபோலுளத்திலறமே
விரவாததுட்டமுனிகௌசிகற்குவினையேயிழைத்தகுறைபோல்
கரவேபிடித்துவறியேனளித்தகளிரூவிசெற்றகடுவாய்
அரவேயுனக்குமுளதோபகைக்கவ்வளியேனிழைத்தவினையே.

ஒரு சமயவாதிகள் மற்றொரு சமயவாதிகளுக்கு மிகவும் இடர் செய்கிறது போல், எங்கள் விஷயமாகத் தமது சிந்தையிலே தரும குணங்களை யெவ்வளவுங் கொள்ளாத கொடுஞ்செய்கையை யுடைய கௌசிக முனிவருக்கு நாங்கள் பண்ணின குறையைப் போய், எளியவளான நான் பெற்ற இளை—

---

சாதாரணமாகப் பேச ஆரம்பித்த பேச்சுதான் பெரிய வினையில் முடிந்துவிடுகிறது. அப்படி அது வினையின் வழி திரும்புகையில் பாதிபேச்சில் எழுந்து தூரப்போய்விடு. நேரப்போகும் கலகமும் அடங்கிவிடும்.

யானைப் போன்ற புத்திரனுயிரை மறைத்திருந்து வந்து போக்கின விஷ வாயையுடைய பாம்பே! இப்படி விரோதம் செய்வதான உனக்கும், பிற ரால் ஐயோவென்று இரங்கத்தக்கதாக நான் செய்த குறைவுண்டோ?

என்னயகன்றன்மணிமார்பிலேறிவிளையாடுகின்றவெழிலோய்!
முன்னய்விளைந்தகனன்மூழ்கவெம்பின்முதலேகடந்தமதலாய்!
செந்நாய்திரண்டுசெறிகானிருந்துதெளியாதிரங்குமெனைநீ
அன்னய்வருந்தலையெனுததுன்றனறிவுக்கடாதுமகனே!

எனது நாயகனுடைய அழகிதான மார்பிலேறி விளையாடத் தக்க செல் வக் குமாரா! முன்னே மூண்ட நெருப்பிலே எங்களுக்கு முன்னே போய் விழப்போன குழந்தாய்! செந்நாய்கள் கூடி நெருங்கின இந்தக் காட் டிலே யிருந்து மனந் தெரியாமலழுகின்ற என்னைப் பார்த்து, தாயே வருந் தியழாதே யென்று சொல்லாமற் கிடக்கிறது உன் புத்திக்குத் தக்கதல்லவே ஓ புத்திரா!

மறவாளெயிற்றுமணிமாசுணத்தின்வலியாலிறந்துளவெனெ
டிறவாதிருக்குமதிபாவிதன்னெடுறவேதெனக்கருதியோ
திறவாய்சிவந்தகனிவாயுரைத்தல்செய்கிலாய்முகத்துவிழியாய்
பிறவாதமித்தனடியேவழுத்துபெருமானளித்தமகனே!

கோபத்தை யுடைய வாள் போலும் பற்களைக் கொண்டதாய் ரத்தத் தையுந் தலையிலே கொள்வதான ஒரு பாம்பினது விஷ பலத்தினுலே இற ந்து கிடக்கிற என்னுடனே கூட சாவாதிருக்கிற அதிக பாவியான வளுடனே உறவு கொள்ளுகிறதினுலே என்ன பிரயோசனமெ ன்று நினைத்தோ, உனது சிவந்த கனி போன்ற வாயாலொரு சொற் சொல்லாதிருக்கிறுய்?—என் முகத்திலும் விழியாதிருக்கிறுய்?— பிறத்தலில்லாத கடவுள் திருவடிகளையே துதிக்கின்ற பெருமையையுடைய அரசன் பெற்ற குமாரா!

வடியேறுவெற்றிநெடுவேன்மலர்க்கைமகனேடிறந்துமடியாக்
கொடியேன்முகத்தில்விழியார்முனிக்குவளநாடளித்தகொடையார்
இடியேறடர்த்தமரமாகிமண்ணிடையேயுழைத்தலழகோ?
அடியேனையொக்கமுடியாதிருத்தலனியாயமிக்கயமனே!

கூர்மையேறின வெற்றி கொண்ட நீண்ட வேலைப்பிடிக்கிற மலர் போலுங் கையையுடைய மகனுடனே கூடச் செத்துப் போகாதிருக்கிற பாவியான என் முகத்திலே இனி விழிக்கமாட்டார்; யாரென்றுல்—ஒரு முனிவருக்குத் தமது வளநாடு முழுதுங் கொடுத்த பிரபுவானவர்;

---

வியாதியஸ்தர்களைப் பரிகசிக்கிற டாக்டர்களும் வைத்தியர்களும் தங்க ளின் தோலின் நிறத்தை மாற்றிக் கொள்ள முடியாமைக்கு ஏன் வெட்கப் படு கிறதில்லையோ? ஒருவனை நொண்டியென்றுல் அவன் காலை வளரச் செய்து குணப்படுத்துகிறது தானே! அதற்கு சக்தியைக் காணுேமே, பழிக்கமட்டும் புத்தி போகிறதே! ஐயோ இழிகுணமே! வித்யா கர்வமே!

இடியேற்றினாலே பட்டுப் போன மரம் போலாகி மண்ணிலே கிடந்து நான் வருந்துதல் உனக்கு அழகாயிருக்கின்றதோ? என்னையுங்கூட நீ கொல்லாதிருக்கிறது ஓ யமனே! மிகவும் அநியாயம்.

ஃ

 இந்த இடத்தில் "சண்ட கௌசிகம்" என்ற நூலிலிருந்தும் சந்திரமதிக்கும் அரிச்சந்திரனுக்கும் நேருகிற துயரம் நிறைந்த சந்திப்பைக் குறித்து இரண்டொரு பக்கங்கள் எடுத்து விவரிக்கலாம். ஆனால் சிலர் எவருக்குமே தெரிந்த அரிச்சந்திரன் கதையை வீணில் வளர்த்துப் பேச நாம் வந்துவிட்டதாய் எண்ணிவிடுவரென்று அஞ்சி இத்துடன் நிறுத்திவிட்டோம். ஆசிரியரின் நோக்கம் உத்தமமானதாயிருப்பினும் அதனிற் குற்றங் கண்டு பேசுபவரே அதிகமாயுள்ளார். என் செய்வது? இது கிடக்க, நாம் மேலே கூறிய "சண்ட கௌசிக" மென்பது ஆரிய க்ஷேமீக வரகவி வடமொழியில் இயற்றிய ஒரு நாடகமாகும். இந் நாடகம் ஒருவாறு மார்க்கண்டேய புராணமுறையாய் அரிச்சந்திரனைப் பற்றியது. இதிகாசமாகிய பாரதத்தினுள்ளும் அரிச்சந்திரனைப் பற்றி ஒன்றுஞ் சொல்லப்படவில்லை, ஆயினும், வியாசமுனிவரால் திருவாய்மலர்ந்தருளப் பெற்ற பதினெண் புராணங்களுள், மார்க்கண்டேயம், ஸ்காந்தம் ஆகிய இவ்விரண்டினுள்ளும் அரிச்சந்திரன் கதையை விவரமாகக் காண முடிகிறது.

## ஜாதி வித்தியாஸம்.

ஜாதி வித்தியாஸம் மனத்தைப் பொறுத்தது. விட்டால் விடலாம், கொண்டால் கொள்ளலாம். பெண்ணைக் கொடுப்பதிலும், கொள்ளுவதிலும்தான் ஜாதி வித்தியாசம் முன்வந்து நிற்கிறது. சிநேகத்திற்கு ஜாதி முறைமை தேவையற்றதாகும். சாயபுவும், நாயுடுவும் ஒரு பந்தியில் உட்கார்ந்து புசிக்கவும், ஒரு பாயில் படுத்துறங்கவும், ஒருவருக்காக மற்றவர் பிராணனைக் கொடுக்கவும் தயார்தான். ஜாதி வித்தியாசம் ஒழியவேண்டு மென்பதைவிட, ஜாதிக்கொடுமைகள் ஒழியவேண்டுமென்று பேசுதல் நன்றாகும் கொடுமை தோன்றுவது அறியாமையாலும் — அகங்காரத்தாலுமே. எந்த ஜாதியும் அதனதன் மட்டில் உயர்வானதே. தன்னைத் தாழ்ந்த ஜாதியென்று நினைப்பது பழகிப்போன நெடுநாளைய ஈன அடிமை எண்ணத்தாலேயே. ஜாதியில் உயர்வு பெறத் தன் நெஞ்சிலேயே ஒரு உயர்வு தோன்றவேண்டும். கடவுள் யாவர்க்குந் தந்தையே. பரமபிதாவின் கோயிலுக்குள் புகக்கூடாதெனத் தடுத்தல் மிக மடமையே.

# "பகதூர்" என்றால் என்ன ?



டெல்லி மகா நகரத்தில் ஆண்ட மோகலாயச் சக்கிரவர்த்திகளில் மகா கீர்த்திவானன ஷாஜிஹானுடைய நான்கு குமாரர்களில், ஒருவரான அவுரங்கசீப் ஒரு சமயத்தில் பெரும் விபத்தில், அகப்பட்டுக் கொண்டார். ஷாஜிஹான் சக்கிரவர்த்திக்கு யானைச் சண்டையில் வெகு பிரியம். ஆக்ராபட்டணத்தில் யமுனை நதிக்கரை யோரத்தில் தமது மாளிகையில் வாசம் செய்ய நேரிட்டபோது, இந்தச் சண்டையொன்று நடத்திப் பார்க்க விரும்பி மாளிகைக்கு முன்னுள்ள மைதானத்தில், சுதாகார், சுரத்சுந்தர் என்ற இரண்டு பெரும் யானைகளை சண்டைக்கு விட்டார். வேடிக்கை பார்க்கச் சக்ரவர்த்தியும், அவருடைய குமாரர்களும் கூடினார்கள். அரண்மனைப் பிரபுக்களும், மந்திரிகளும், போர் வீரர்களும், ஜனங்களும், ஏராளமாய்க் கூடியிருந்தனர். அவுரங்கசீப் இந்தச் சண்டையை நன்றாய்ப் பார்க்க வேண்டுமென்று சண்டை செய்யும் யானைக்கருகில் கத்தியுடன் குதிரை மேல் நின்றார். யானைகள் வெகு மூர்க்கமாய்ச் சண்டை செய்தன. சண்டை செய்து கொண்டிருக்கும் போது, சுதாகர் யானை அடங்கா வெறி கொண்டு, சுரத்சுந்தர் யானை பின்வாங்கி இருந்த சமயத்தில் திரும்பி ராஜகுமாரனைத் தாக்கிற்று ராஜ குமாரன் பயப்படாமல் நின்றபடியே தன்னைத் தாக்கின யானையின் மீது ஈட்டியை எறிந்தான். யானை இன்னும், அதிக வெறி கொண்டு நீண்டு பருத்த துதிக்கையால் குதிரையையும் ராஜ குமாரனையும், அடித்து வீழ்த்திற்று. கீழே விழுந்த ராஜ குமாரன் சரேலென்று எழுந்து தன் உருவின கத்தியால் யானையின் துதிக்கையை வெட்டினான். கூடி இருந்த ஜனங்கள் மிரண்டு ஓடத்தலைப் பட்டார்கள். எங்கு பார்த்தாலும், பயமும், குழப்பமும் தோன்றின. அவுரங்கசீபுக்கு நேரிட்ட ஆபத்தைப் பார்த்திருந்த அவரது மூத்த சகோதரர் ஷுஜா அதிவேகமாய்க் கூட்டத்தை விலக்கிக் கொண்டு ஓடிவந்து தன் கத்தியால் யானையை அடித்தார். யானை பயப்படாமல் சீறிக் கொண்டிருக்கவே அதனருகில் பாணங்கள் விட்டு அதைத் துரத்தி விடப் பார்த்தார்கள். சக்கிரவர்த்தி தன் சேவகர்களைப் பார்த்து ராஜ குமாரனைத் தப்புவிக்க முன் செல்லக் கட்டளை யிட்டார். அவர்களும், பல விதமாய் யானையைத் தாக்கினார்கள். ஜெயசிங் என்ற ரஜபுத்திர வீரனும் ஓடி வந்து யானையைத் தாக்கினான். ஷுஜாவினுடைய குதிரையும், ஜெயசிங்கினுடையகுதிரையும், யானைக்குப் பயந்து மிரண்டோடின. அவுரங்கசீபோ தன் குதிரையை நின்றபடி நிறுத்தி அஞ்சா நெஞ்சத்தினராய் கையும், கத்தியுமாய் நின்றார் யானைக்குத் தப்ப மாட்டாரென்றே சக்கர

---

பிறரிடம் தபாலுக்குக் கடிதங்கள் கொடுத்தனுப்புவதில், அவர்கள் அதிலுள்ள சங்கதிகளை வாசித்து விடுவதால், நமது ரகசிய விஷயங்கள் அவர்களுக்குத் தெரிந்து விடுகின்றன. அதைப் படிப்பதற்காகவே தாங்கள் தபாலுக்குச் செல்வதாகக் கூறுகிறார்கள்.

வர்த்தியும், ஜனங்களும் பயந்தார்கள். நற்காலமாய் அந்த சமயத்தில், பின் சென்ற சுரத்சுந்தர் யானைக்கு வெறி மிஞ்சித் தாக்க வோடி வரவே சுதாகர் ஏற்கனவே பட்ட காயங்களாலோ, அல்லது சண்டை செய்ய இஷ்டமில்லாமலோ தன் எதிரியை விளைந்து வந்து அதன் பின் ஓடத் தலைப்பட்டது. ராஜ குமாரரும் தப்பினார். ஜனங்கள் சபாஷ் சபாஷ் என்று சப்த மிட்டனர். பீதி யுற்றிருந்த சக்கிரவர்த்தி 14 வயதுள்ள சிறுவனை தன் குமாரனை மார்பில் அணைத்துத் தட்டிக்கொடுத்துக் களிப்புற்றார். அவன் தைரியத்தை மெச்சி சக்கரவர்த்தி அவனுக்குப் "பகதூர்" பட்டம் கொடுத்தார். சூழ்ந்திருந்த பிரபுக்கள் தகப்பனுக்குத் தகுந்த பிள்ளை யென்று சிலாகித்தார்கள். ஷாஜிஹான் இளம் வயதுள்ளவராயிருந்த காலத்தில் தம் தகப்பன், ஜிஹான்ஜியர் சக்கிரவர்த்தி கண்முன்னால் ஒரு காட்டுப்புலியைத் தன் கத்தியினால் தாக்கினதுபோல அவுரங்கசீப் மலைபோன்ற மதம் பிடித்த யானையைக் கத்திக் கொண்டு தாக்கினார். இவ்வாறு விளையாட்டுச் சிறுவனான 14-வயதுள்ள ராஜ குமாரனுக்கு சக்கரவர்த்தி "பகதூர்" பட்டம் கொடுத்தார். "பகதூர்" என்றால் சூரன் என்று பொருள்.

ச. முனிஸ்வாமி பிள்ளை,
டர்பன், நெட்டால்.

## நூலாசிரியக் கரும்பு.

நூலாசிரியக் கரும்பை பகவான் சும்மா இருக்க விடுவதில்லை. அந்த ஆசிரியக் கரும்பை ஆலையிலிட்டுப் பிழிந்து வதைக்கின்றார். அக்கரும்பைப் பல பல பாடுபடச் செய்கின்றார். உலகத்துச் சோதனைகளின் பெரும் பகுதியை நூலாசிரியருக்கே வைக்கின்றார். நன்கு கற்ற அந்த ஆசிரியர் உலகின்கண்ணே பல்வகைத்தான துன்பங்களையும் நுகர்ந்து விழிநீர் பெருக்குகின்றார். இவ்வகையினில் அவர் பட்ட எல்லையில்லாத் துயரச் சுழல்களினின்றும் கண்டு கொண்ட அனுபவங்களையும் அறிவுப்பெருக்கினையும் தமது நூல்களிலே புகுத்தி உலகத்தோருக்கு ஞானப்பால் ஊட்டுகின்றார். இங்ஙனம் அவரைப் பக்குவப்படுத்துதற்காகவே தயாபரரான கடவுள் எண்ணற்ற சஞ்சலங்களை அவருக்குத் தருகின்றார் போலும்! நூலாசிரியர் கஷ்டப்படுவதினின்றும் பல அநுபவங்கள், ஏற்பட்டு அப்போதனைகள் அவரது நூல்களின் வழியே உலகுக்குப் பிறக்கின்றனவாம்.

ஒருவன் ஒன்றிருக்க ஒன்றைப் பிசகாய்ச் சொல்லும்போது அதைக் கேட்பவன் அவன் மனம் நோகாவாறு தலையசைத்து, அவனுடைய வார்த்தைப் பிசகை அவனே பிறகு தெரிந்து கொள்ளும்படி விட்டு விடுவது மேல். இது தனக்கும் மேல்பட்ட பதவியிலிருப்போரிடம் நடந்து கொள்ள வேண்டிய விதமாகும். இதுவே பிழைக்கும் வழி. தலையாட்டிக்கே வாழ்வு!

# விபசாரத்தின் பயங்கரம்

(505-ம் பக்கத் தொடர்ச்சி.)

## II



மேக வெட்டை முற்றினால் அது தந்தி மேகம் என்ற நிலைக்குத் திரும்பும். முன்பு புருஷ அவயவத்தினின்றும் சீயொழுகியது போய், இப்பொழுது நீர் விடுங்காலையில் நூலிழை போன்ற ஒன்று நீருடன் கலந்து வெளிவரும். புருஷ அவயவத்தின் மேற்றோல் சுருங்கி மூடிக்கொள்ளத் தொடங்கும். அவ்விதம் மூடும்படிவிட வொண்ணாது. மூடாதபடி செய்வதில் மேல் தோலில் பிளப்புகள் கண்டு எரிச்சல் தோன்றும். அதற்கு அரைக்குன்று மணியெடை படிக்காரத்தில் சில சொட்டு ஜலம் விட்டு மாசிக்காயை அதில் நன்குதேய்த்து அறைத்து அதைமேல் தோல் பிளப்புகளில் தடவி வெற்றிலை வைத்துக் கட்டவேண்டும். இவ்விதம் காலையும் மாலையும் செய்யில் ஐந்து தினங்களில் குணமாகும். நீர் அதிக எரிச்சலாக இருப்பினும், அவயவ நுனி புண்ணாக இருப்பினும் கால்படி வெள்ளை வெங்காயத்தை சிறு சிறு துணுக்குகளாக்கி அரைபலம் நெய்யில் ஒருபலம் பனங்கற்கண்டு சேர்த்து இளகலாக வறுத்துக் காலை ஆகாரத்துக்கு முன்பு புசிக்கவேண்டும். பிறகு சாதம் கொதிக்கும் ஜலத்தில் ஒரு அணு வெண்ணெய் போட்டு சாப்பிடவேண்டும். இவ்விதம் பத்து தினங்கள் செய்யில் எரிச்சல் குணமாகிவிடும், ஆனால், இவை யெல்லாம் அப்போதைய தற்சமயசாந்திக்கான கைம்முறையே யன்றி வியாதியை நிவர்த்தித்ததாகாது. தக்க வைத்தியரிடம் வியாதியைக் குணப்படுத்திக் கொள்வதே புத்திசாலித்தனம்.

ஃ

மேக வெட்டையுள்ள ஸ்திரீ புருஷர்கள் ஒன்று சேரின், அவர்கட்கு உபத்திரவம் ஏற்படுவதில்லை. நெருப்பும் நெருப்பும் முட்டிச் சந்தித்தது போல அது ஆகிவிடும். ஒரு நெருப்பு மற்றோரு நெருப்பை ஒன்றும் செய்வதில்லை. ஆனால், பரிசுத்த மேனியாகிய பஞ்சும், நோய்த் தேகமான நெருப்பும் கூடிக் கொள்ளின் பஞ்சு பஸ்மீகரப்பட்டுப் போவது போல், வியாதியற்ற சரீரத்தில் உடனே வியாதி படர்ந்து கொள்ளும். தன் மனைவியை யன்றி வேறு எவரையும் நோக்காதவனும், விவாகத்திற்கு முந்திய காலத்தைப் பரிசுத்தமாகவே கழித்தவனும் எந்த ரோகத்துக்கும் உட்படுவதில்லை. அவன் அன்னிய ஸ்திரீயின் வசமாயின் அவசியம் அவனை ரோகம் தொடர்ந்து கொள்

---

தங்களின் வழுக்கைத் தலையை வெளியில் காட்டிக் கொள்ளாதிருப்பதற்காகச் சிலர் எப்போதும் தலைப்பாகை தரிக்கிறார்கள். வேறு சிலர் தங்களின் வயோதிகமுகம் தெரியாதிருப்பதற்கு அடிக்கடி க்ஷவரம் செய்து கொள்கிறார்கள். மறைப்பதுதான் வெளியில் அதிகம் தெரிந்துவிடுகிறது.

ளும். அன்னிய ஸ்திரீயினிடத்து ஆவல் அதிக மிருப்பினும், எங்கு ரோகம் வருமோ என்ற பயத்தால் விபசாரத்தை விட்டொழித்தவர்களு மிருக்கிறார்கள். பெண் சம்மதித்து அழைப்பின் அதற்கு இணங்காத ஆட வர்கள் லக்ஷத்தில் ஒருவர் இருப்பது கூடச் சந்தேகமே. சில ஆடவர்கள் பல நாள் தூர்த்த நினைவுடனேயே இருந்து எவ்விதம் கெடுப்பதென யோசனைகள் செய்து கொண்டு, பூனை எலி மீதுபாய்வது போன்று சட்டெ. னத்தாம் விரும்பிய நங்கையின் மீது பாய்ந்து அவள் திடுக்குற்ற சமயத்தில் புத்தியை மயக்கிக் கெஞ்சாத விதமா கக் கெஞ்சி நிமிஷத்தில் தங்கள் வசப் படுத்திக் கெடுத்து விடுகின்றனர். அடுத்த நிமிஷத்தில் அப்பெண்ணின் கணவன் அங்கு வந்தும் நடந்த விஷ யத்தை அவன் அறிந்து கொள்ள முடிவதில்லை. சோர நடத்தையில் சம்பந்தப்பட்ட அவ்விருவரும் வெகு பக்குவமாய் நடந்துகொண்டு எதும் அறியாதவர்கள் போல் காண்பித்துக் கொள்கிறார்கள். ஒரு முறை தனக்கு இசைந்து போன நங்கை பின் என் றைக்கும் தனக்குச் சொந்தமான சொத்தே யென்று விபசார சிகாமணி கள் தீர்மானித்து விடுகிறார்கள்.

ஃ

இனி விபசாரத்தின் பொருட்டுச் சாமானியமாகச் செய்யப்படும் சூழ்ச்சி களைக் குறித்துச் சற்றுப் பரி சோதித்து நோக்குவோம். ஒருவனைச் சந்தேகித்துத் தன் மனைவியுடன் இனி பேசவேண்டாமென்று கண் டித்திருப்பினும், அதற்காகப் பல் முறை சண்டைகள் நடந்திருப்பினும், அவன் அப்போதைக்கு மட்டும் விலகி விட்டு, பிறகு மற்றொரு காரணார்த்த மாய் வருபவன் போல் வீட்டுக்குள் வருகிறான். சண்டைகள் நடந்து நாட்பட்டு விட்டதால் ஆத்திரம் தணிந்த புருஷன் வலியத் தன் வீடு வந்தவனை விசாரித்தனுப்ப நேர் கிறது. இவ்விதம் ஒரு முறை வந்து வழக்க மானதும், பிறகு அடுத்தடுத்து வரத் தொடங்குகிறான். வீட்டுக்குள் வந்ததும் மெதுவாக சமையற்கட்டை நோக்கிச் சென்று அங்கு பெண்களு டன் ஏதேனும் பேசிவிட்டு எதும் அறியாத திருட்டுப் பூனைபோல் நடித்து வீட்டுக்காரன் பக்கத்தில் உட் காருகிறான். பிறகு அவனது வருகை அதிகமாகவே மறுபடியும் ஒரு சண்டை உண்டாகி வரவேண்டா மென வீட்டுக்காரன் தெரிவிக்கிறான். அவனும் வராமலே யிருந்து பிறகு மறுபடியும் முன்னைப்போல் வரத் தொடங்குகிறான். இது கடைசியில் கொலையில் விழக்கூடிய அவ்வளவு பெரிய விபரீதத்திற்கு முற்றி விடு கிறது. முக்கியமாய் இராக்காலங் களில் வருவதும், வீட்டில் படுப்பதும், நித்திரை செய்வதுபோல் காண்பித்து, வழித்த படுக்கையாக இருப்பதும், வீட்டுக்காரன் தூங்கி விட்டானா என்று கவனிப்பதும், இரவு முழு துமே அடிக்கடி எழுந்திருப்பவனாக இருப்பதும், வீட்டுக்காரன் இல்லாத நேரங்களில் வருவதும், அவன் வெளி யூர் சென்றிருக்கையில் அந்த சமயம் அடிக்கடி வீட்டிற்கு வந்து பெண்களு டன் பேசுவதுமான சண்டாளத்தனங் களும், தந்திரங்களும் கபடங்களும் செய்கிறார்கள். வீட்டுக்காரனிடம் வெகுவிசுவாசமாக இவர்கள் நடப்ப தும்பெரிய தந்திரசாமர்த்திய வித்தை யாகும். இவர்களின் மனையிடம் இன்

---

எதிர்பார்த்த கடிதங்கள் குறித்த வேளையில் வராவிட்டால், உயிர் எவ் வளவோ துடிதுடித்துப் போய்விடுகிறது. எதற்காக இவ்விதம் வீண்தாமதம் காட்டி மற்றவர் ஏங்கித் தவிக்குமாறு சித்திரவதை புரிகின்றார்களோ?

ஞெருவன் இவ்வாறு நடப்பின் இவர்களுக்கு எப்படி வாதனை தருமென்பதை யோசித்துப் பார்த்து இந்த சண்டாளத்தனங்களை இந்தப் படுபாவிகள் விட்டுவிடக் கடவர்.

ஃ

ஒரே தாய்க்கும் தந்தைக்கும் பிறந்து மான ரோஷ முள்ளவர்களாயிருப்பின், ஒரு முறை தங்களைப் பற்றிச் சந்தேகித்த இடத்திற்கு மறுமுறை தங்கள் ஆயுள் காலம் வரையில் வரவே மாட்டார்கள். அதுதான் யோக்கியர்களுக்கு அழகு. ஒரு அவசியம் நேரிட்டு வீட்டிற்கு வந்தாலும், வீட்டுக்காரனுடன் மட்டும் பேசிவிட்டு அவ்வளவில் சென்றுவிட வேண்டுமேயன்றி, சந்தேகிக்கப்பட்ட தாங்கள் அவ்வீட்டுப் பெண்களிடம் மறுபடியும் பேச்சுவார்த்தைகள் வைத்துக் கொள்வதும், மெதுவாக அந்தப் பக்கமாய் எட்டிக் காலடி வைப்பதும், வீட்டுக்காரன் சந்தேகித்து அங்கு வரின் ஏதோ வேறு வேலையாக நிற்பவன் போல் நடிப்பதும், சுத்த போக்கிரித்தனங்களாகும். இவர்கள் வீட்டுக்காரனுக்கு எவ்வளவு தான் சமய உதவிகள் செய்திருப்பினும், செய்து வரினுங்கூட, அவ்வளவும் இந்த ஸ்திரீ சந்தேகத்தால் பாழ்பட்டுப் போகின்ற தென்பதை அறியக் கடவர். இவர்கள் கொண்டு வருகிற மிட்டாய்ப் பொட்டணங்களும், பக்ஷணங்களும், பழங்களும் சந்தேகத்தையே யுண்டு பண்ணும். எவ்வளவோ உதவிகள் செய்திருந்தும், இப்படி நன்றி கெட்டவனு யிருக்கிறுனே யென்று வீட்டுக்காரனைப் பற்றி இவர்கள் தூஷிக்கவேண்டாம். நன்றி செய்ததை நினைக்கிறவிஷயம்வேறு; ஸ்திரீ சந்தேக விஷயம் வேறு. வீட்டுக்காரன் நன்றி கெட்ட மனிதனல்ல. ஆயினும், ஸ்திரீயின் சந்தேகம் பயங்கரமானதும் பொல்லாததுமாகும். இவர்கள் செய்த உதவிகளுக்கு வீட்டுக்காரன் நன்றி மறந்தவனல்லவாயினும், அவன் எவ்வளவோ விசுவாசமாக அந்த உதவிகளை நினைத்துக் கொண்டிருந்த போதிலும், இவர்கள் நடந்து கொள்ளுகிற அயோக்கிய போக்கிரித்தனங்களின் காரணமாக ஏற்படுகிற ஸ்திரீ சந்தேகத்தால்-அவர்கள் என்ன உதவி செய்தவர்களாயிருந்த போதிலுங்கூட—அவர்களை வெறுத்துப் பகைக்க வேண்டியவனுய் விடுகிறுன். எந்த சமயம் கொலை பழிகள் ஏற்படுமோ சொல்வதற்கில்லை.

இத்தகையோர் பின்வரும் விதமாக நடந்து கொள்வார்களாயின் ஒரு நல்ல குடும்பத்தைப் பாழ்படுத்த எண்ணிய தோஷத்திற்கு ஆளாகாமலும், கொலை பழி சண்டை ஜெயில்களுக்கும் இடமில்லாமல் செய்யலாம்.

1. வீட்டுக்காரன் வீட்டில் இல்லாத காலத்தில் திருட்டுத் தனமாய் வருகிற போக்கிரித்தனத்தை அடியோடு விட்டுவிட வேண்டும்.

2. இரவு நேரங்களில் வீட்டிற்கு வருவதும், வீட்டில் படுத்துக்கொள்வதாகப் பாவனை செய்வதும் கூடாது. என்ன அவசிய மேற்பட்ட போதிலுங் கூட, வீட்டுக்காரனுடன் பேசிவிட்டு

---

மிக்க வேண்டிய இரண்டு நண்பர்கள் பேசிக்கொண்டிருக்கையில் அவர்களில் ஒருவனுக்கு வேண்டிய ஒருவர் அருகே உட்கார்ந்து பேசிச்சென்ற போது தமது பொடிடப்பியை மறந்து வைத்துவிட்டுச் சென்றுவிட, இன்ஞெரு நண்பன் அதை மெதுவாக மறைத்துவைத்துவிட்டுக் கடைசியில் அதை விலைக்கும் விற்றுவிட்டான். இவன் செயல் கண்டு மற்ற நண்பரும் போதும் நேசமென்று விலகினர். இப்படியும் கபடமனிகள் உண்டல்லவா?

உடனே புறப்பட்டுப்போய் விட வேண்டும்.

3. வீட்டுக்காரன் வெளியிடங்களுக்குப் போயிருக்கும் சமயத்தில், அவன் திரும்பிவர எத்தனை வருஷங்களாயினுங்கூட, அந்த வீட்டின் பக்கமே அடி எடுத்து வைக்கக்கூடாது. தான் வந்தது எவருக்குத் தெரியப் போகிறதென்று போக்கிரித்தனமாய் எண்ணக்கூடாது. அவன் ஊரிலிருந்து வரும் வரையில் தாங்கள் அடியோடு வாாமலே விலகி விடவேண்டும்.

4. தாங்கள் சந்தேகிக்கப்பட்ட பெண்களிடம் தெய்வ சாக்ஷியாக, அவர்களின் மனைவி குழந்தைகளின் மீது ஆணையாக—எவ்விதப் பேச்சுகளும் வைத்துக்கொள்ளவேகூடாது. வீட்டுக்காரனிடம் மட்டும் பேசிவிட்டு அவ்வளவுடன் விலகிக் கொள்ளவேண்டும். பெண்களிடம் பேச்சு எக்காரணத்தாலும் வார்த்தை கூடாது.

இவ்விதம் நடந்தால் கடவுளுடைய சாபத்துக்கும், கொலை பழி மனஸ்தாபங்களுக்கும் தப்பி வெளிக்காவது யோக்கியனாகலாம்.

(தொடரும்.)

## இருவரும் குள்ளநரிகள்.

வீட்டிற்கு வந்தவர்களும் அன்பற்ற பக்கா குள்ள நரிகள். வீட்டுக்காரனும் அந்த அன்பற்ற தன்மையைத் தெரிந்து அதற்குத் தக்கபடி தாளம் கொட்டுகிற தந்திரசாலி. இதில் ஒருவரையொருவர் விழுங்கவோ ஏமாற்றவோ முடிகிறதில்லை. இருவரும் ஜாக்கிரதையாகவே விழித்த கண்களுடன் எந்தக் குற்றச்சொல்லும் வராதபடி பார்த்துக்கொள்ளுகிறார்கள். எவ்வளவு அதிக செலவுகள் நேர்ந்தபோதிலும் வீட்டுக்காரன் தான் முணுமுணுத்தால் அதற்குமுன்வரையில் தான் பணத்தைச் செலவிட்டுச் செய்திருக்கும் உபசரிப்பு பாழ்பட்டுவிடுமென்று சகித்துக் கொள்கிறான். வாய் திறப்பதே யில்லை. சிரிப்பு முகமாகவே இருந்து அவர்களை அனுப்பிவைக்கிறான். தங்களின் சங்கதிகளை வீட்டுக்காரன் நன்கு தெரிந்தவனென்று அறிந்துள்ளவிருந்தினரும் அதற்கேற்ற பக்குவமாய் நடந்துகொண்டு போய்விடுகின்றனர். கடைசியில் இருவரும் உள்ளத்தில் அன்பற்றுப் பஞ்சதந்திரம் படித்தவர்களே யாகிறார்கள்.

ஹா! என் இறைவா! பக்தி நிறைந்த மனத்தோடு உனக்கு நறுமலர் கொணர்ந்து பூசை செய்தேனே! இது தானோ உன் அருள்! உன் சித்தம். இரங்குவதும் என்றேயோ!! என்று என் துயரம் விடியுமோ?



# ஹாஸ்ய சஞ்சீவினி



குழந்தை :—நான் சின்ன குழந்தை உன்னை முத்தமிடலாம். அப்பா உன்னை முத்தமிடலாமா? அவர் பெரியவராச்சுதே?

தாயார் :—அவர் என்னை முத்தமிடக் கூடாதுதான்,

குழந்தை :—அவர் நேற்று உன்னை முத்தமிட்டதை மெத்தையிலிருந்து பார்த்தேனே? அது தப்பல்லவா?

ஃ

பாலு :—உனக்குக் குழந்தை குட்டிதான் இல்லையே. நன்றாகச் செலவிடுகிறது தானே. ஃ

வேலு :—என்னிடமிருந்து ஏதாவது பிடுங்கவா இப்படிப் பேசுகிறாய்? நானா மயங்குகிறவன்?

ஃ

—“அவன் பெரிய போக்கிரியாயிற்றே, இங்கே ஏன் சேர்த்தாய்?”

—“ஒரு பத்திரம் எழுதக் கூப்பிட்டேன், அது முடிகிறதற்கு முந்தியே காபிஹோட்டலில் 12-அணுவுக்கு செலவு வைத்து விட்டான்.”

—“பிடுங்குகிற வேளை எது வென்று அவனுக்கு நன்றாகத் தெரியும். அவனுக்கு அதே பிழைப்பல்லவா?” ஃ

ருக்கு :—சேஷி புருஷன் 4-அணா கடன் கேட்கிறான். கொடுத்தால் வருமாடி?

குப்பி :—சேஷி அவரைக் கசக்கிப் பிசுக்கி வாங்கிக் கொடுத்துவிடுவாள். தாராளமாகக் கொடு.

ஃ

கணவன் :—அடியே! வேலைக்காரி, காபி தயாராகிவிட்டதா?

மனைவி :—கனம் பொருந்திய வேலைக்காரரே, எனக்கும் என் குடும்பத்துக்கும் உழைக்க வேண்டிய வேலையைப் பொழுது விடிந்ததும் தொடங்கிக் கொண்டீரா? சரிவரச் செய்யும். ஃ

மோட்டை :—அப்பா, ஏதாவது படித்திருக்கிறாயா?

கட்டை :—ஆ! ஆ! முரட்டுத் தனமாய்ப் பேச நன்றாய்ப் படித்திருக்கிறேன்.

மோட்டை :— இலக்கணம் தெரியுமா?

கட்டை :—கருமான் வீட்டு உலக்கணமும் தெரியும்.

மோட்டை :—எழுத்துத் தெரியுமா

கட்டை :—தலையெழுத்து தெரியும்

மோட்டை :— ஐகாரக் குறுக்கந் தெரியுமா?

கட்டை :—குஷ்டங் கண்ட கை கால் குறுக்கந்தானே?

மோட்டை :—பாடத் தெரியுமா?

---

ஒத்தாசை செய்ய இஷ்டமுடையவன் ஜாடையாய் ஒதுங்கமாட்டான். உதவி கேட்கிறவரை காத்திராமல் தானே வலியச் செய்ய வருவான். நமக்கென்ன, எப்படியாவது போகட்டுமென்று மெதுவாக நழுவ மாட்டான்.

கட்டை :—வாயில் வந்தபடி திட்டிப் பாடத்தெரியும்.

மொட்டை:—ராமாயணம், பாரதம் தெரியுமா ?

கட்டை :—தெரியும், அரை ஆள் சுமைதான் இருக்கும்.

மொட்டை :—அகரம் தெரியுமா ?

கட்டை :—அது ஒரு கிராமத்துப் பெயர்தானே ?

மொட்டை :—தகரம் தெரியுமா ?

கட்டை :— தகரக்கடையிலிருக்கிறது.

மொட்டை :—நகரம் தெரியுமா ?

கட்டை :— மைசூரில் அந்தப் பெயருள்ள ஒரு ஊர் உண்டு.

மொட்டை :—மகரம் தெரியுமா ?

கட்டை :— மகரமீன் சமுத்திரத்திலிருக்கும்.

மொட்டை :— கூட்டல் கழித்தல் தெரியுமா ?

கட்டை :—தாசி வீட்டில் பார்க்கலாம். ஃ

ராகவன் :— அவளும் என்னைப் பார்க்கிறாள், நானும் அவளைப் பார்க்கிறேன், அவளும் என் வீட்டிற்கு ஏதாவது ஒரு காரணம் வைத்து அடிக்கடி வருகிறாள், நானும் ஒரு காரணத்தை வெளியில் காட்டி அவளிடம் பேச்சு கொடுக்கிறேன், அவளும் பதில் பேச்சு தருகிறாள். இருவரும் ஒரு சமயம் சிரிக்கவும் சிரிக்கிறோம். அவள் மனம் என்னை விரும்பி விட்டாளென்பது இன்னும் நம்பிக்கையாகத் தெரிய வில்லை. இருவரும் மனதில் எவ்வளவோ எண்ணுகிறோம்.

விஜயன் :—அன்னியரின் மனைவி மீது இப்படிக் கண் போடுகிறாயே. உன் மனைவி மீது நான் இப்படிக் கண் போட்டால், உனக்கு எப்படியிருக்கும். ? ஃ

மனைவி :— நான் இல்லாமற் போனால் வீடு நாறிப் போகுமே.

கணவன் :—நீ வந்து சிலவருஷங்களே ஆயின. நீ வருவதற்குமுன்பு இந்த வீடு நாறியா கிடந்தது ? எவ்வளவோ பேர் வீடு முழுதும் நிறைந்திருந்தார்களே ? ஃ

பக்கத்துவீட்டுக்காரன் :—என்னை எதற்காகக் கூப்பிட்டீர்கள் ?

அடுத்தவீட்டுக்காரன் :— என் மனைவி தீபாவளிக்கு வாங்கிய ஜவுளிகளை யெல்லாம் உங்கள் மனைவிக்குக் காண்பித்துப் பெருமை கொண்டாடினாள். அதுபோல, நானும் எனக்கென்று வாங்கிய இரண்டொரு கோவணத் துணிகளை உங்களிடம் காண்பித்துக் கௌரவம் தேடிக் கொள்வதற்காக அழைத்தேன். பெண்ணுக்குப் பெண் ஜோடி என்றால், நாம் ஆணுக்கு ஆண் ஜதையாக ஆவோமே ? ஃ

மாரியப்பன் :—என் மனைவியைக் கெடுத்தவனைக் குத்திக் கொல்ல நினைத்திருக்கிறேன்.

---

தொலையாத துக்க சோதனைகளுக்கும், தீராப்பிணிகளின் கதறுதலுக்கும் தெய்வமே துணை. அந்தவேளையில் நமது அருகிலிருப்போரே நாம் என்றும் நினைவு கூறத் தக்கவராவார். நமது துன்பத்தைக் கண்டு நகைப்போரும் விலகுவோரும் தமது இயற்கைக் குணங்களை அந்த நிமிஷம் வெளியிட்டு நம்மை விழித்துக் கொள்ளச் செய்வோராவர்.

**யோசனையப்பன் :—** அப்படிச் செய்வதில் நீ தூக்கோ தீவாந்தர சிக்ஷையோ அடைகிறாய். அது உன் மனைவிக்கு இன்னும் சௌகரியமே தரும். அதை விட அவளைத் துரத்தி விட்டு, அவள் முன்பு வேறு கல்யாணத்துடன் வாழ்ந்தால் அது தான் புத்திசாலித்தனமான பழிக்குப் பழியாகும். ೲ

**கணவன் :—** அந்தப் பெண் இங்கு அடிக்கடி வருவதில் உனக்கு தான் உற்சாகமே தவிர, எனக்கொன்றுமில்லையே. ೲ

**மனைவி :—** உங்களுக்கு உற்சாகமுண்டாக்க அவன் உங்களைக் கட்டிப் பிடித்து முத்தமிட வேண்டுமா?

ೲ

**நண்பர் :—** தங்கள் குமாரன் பரீக்ஷையில் தேறி விட்டானா?

**வியாபாரி :—** அதைப்பற்றிக் கவலையில்லை, அவனை என் கடை வியாபாரத்தில் பழக்கப் போகிறேன்.

ೲ

**மனைவி :—** என் தாய் வீட்டார் உங்களுக்கு வாங்கித் தந்த வேஷ்டிகள் கொஞ்சமா?

**கணவன் :—** இது வரை மூன்று ஜோடி என்று கணக்கு இருக்கிறது. நான் பதில் செய்ததற்கும் கணக்கு இருக்கிறது. ೲ

**ராமசாஸ்திரி :—** அமவாசையிலா ஹோட்டலில் உண்பது? எவரும் குளிக்கவில்லையே! உமக்குக் கொடுத்தது நேற்றைய ஜலமல்லவா?

**சுப்புதீக்ஷிதர் :—** என் வீட்டுக்காரிக்கு வீட்டை மெழுகுகிறதிலுள்ள சிரத்தை என் மீதிருந்தால் நான் இங்கு வருவேனா?

ೲ

**மீனாக்ஷி :—** என்னடி பவுன் விலையேறி விட்டதாமே?

**காமாக்ஷி:—** நாமென்னடி நகையா செய்யப் போகிறோம்? வயிறு வாடாதிருந்தாற் போதும். அதுவே பெரிய நகை. ೲ

**நீலன் :—** எவ்வளவு சாமர்த்தியமாக அவன் பையிலிருந்து ஒரு ரூபாய் எடுத்து விட்டாய்?

**வேலன் :—** நான் எடுத்ததாக அவன் எண்ணமாட்டான். எவ்வளவு நெருங்கி உறவு நேசமாயினும் ரூபாய் எண்ணித் தருகையில் தவறி ஒரு ரூபா அதிகம் கொடுத்து விட்டால் எவரும் திருப்பித் தரார்.

ೲ

**பத்தினி :—** என் வாயில் தாம்பூலத்தின் சிவப்பு பார்த்தீர்களா?

**பர்த்தா :—** என்ன சங்கதிக்காக இந்த வார்த்தையை ஆரம்பிக்கிறாய்?

ೲ

**தாயார் :—** உன் இரண்டணாவில் காலணாபோக, காலணாதான் மிச்சம்.

**குழந்தை :—** ஆமாம், அதோ பழம் விற்கிறது; அந்தக்காலணாவைக்கொடு.

---

பரீக்ஷையில் பலதடவையும் தவறிப் போகிறவர்களிற் பலர் பிற்காலத்தில் எவரும் வியக்கத்தக்க பெரும் ஆசிரியர்களாகவும் மேதாவிகளாகவும் விளங்கி நின்றதைக் காண்கின்றோம். எதுங் கல்லாது இகழப்பட்ட மடையச் சாம்பிராணியே பிறகு மகா ஞானியாக மாறிவிடுகின்றார். இவையெல்லாம் பூர்வ ஜென்ம சம்பந்தம். அந்தந்தக் காலம் நெருங்குகையில் அவரவர்களுக்கு முன் தொடர்பை யொட்டிப் பரிபூரணத்துவ பக்குவம் சித்தித்துக்கொள்கின்றது.

# குடும்ப விநோதக் குறள்.

### 5. தூற்றும் புத்தி.

1. தூற்றிக் கனங்குலைக்கும் துர்க்குணப் பேய்களும்
சாற்றும் எமனுமொன்று தான்

2. குடும்பத்தின் மர்மத்தைக் கொட்டும் பிசாசு
கொடுங்குண மூளியெனக் கூறு.

3. 'என்மகனா! எங்கேயோ என்மகனா அந்தநாய் ?!
என்றுரைப்பாள் இன்பகுணத் தாய்.

4. 'கல்யாணம் செய்தேன் கருமாதி பாக்கி' யென்
பொல்லாத கும்புகூடும் போது. [பாள்

5. வெந்துமனம் வெகுதே வேற்றார்பால் தூற்று
சிந்தைநோவ நேர்சொலட்டு மே. [மொழி

6. வீட்டுக் கலகத்தை வீணன் ஒருவனிடம்
காட்டுவதால் கண்டபய னேன் ?

7. விருந்தாளி வந்தால் வெகுநீளப் பேச்சு
திருந்துங் குணமிதுவோ தேர்.

8. ஊரா ரிடமெல்லாம் ஓயாமல் தூற்றுவதால்
வாராத தாழ்வு வரும்.

9. குடும்ப மதிப்புக் குதித்தோமே ; தூற்றும்
கொடும்புத்தி கொண்டோர்சொல் கேட்டு.

10. சந்தி சிரிப்பதால் தான்மூட்டை கட்டியதேன் ?
எந்நாளுந் தாழ்வுகண்ட தே.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

*மனைவி கொத்துச்சாவிகளைப் போக்கடித்துவிடுகிறாள். அது கடைசியில் கணவன் பெட்டியிலிருந்தும் கிடைக்கிறது. அதற்குக் கணவன், நீ எங்கேயாவது போட்டிருக்கலாம்; அதை நான் நல்ல எண்ணத்துடன் எடுத்துப் பெட்டியில் வைத்திருக்கவேண்டும்; நீ தேடிதலையவேண்டுமென்று எண்ணியிரேன்; நான் அப்படி வைத்து மறந்துபோயிருக்கலாம் என்கிறான். இதுவும் ஒப்பத்தகுந்ததே.*






கார்த்திகையன்று கூடிய நமது கடையில் தாண்டவக்கோன் தான் கண்ட ஒரு விநோதத்தைச் சொல்வதற்காக எழுந்தார். சென்ற ஆனிமாதத்தில் ரயில்வண்டியில் ஒரு வேடிக்கையைக் கண்டேன். அதிகாலையில் தஞ்சாவூர் ஸ்டேஷனில் வண்டி வந்து நின்றதும் ஏராளமான ஜனக்கூட்டம் நாங்கள் இருந்த வண்டியில் ஏறிற்று. வெகு நெருக்கி உட்கார்ந்து தொல்லைப் பட்டுக் கொண்டிருந்தோம். வண்டி புறப்படுகிற சமயத்தில் ஓர் வாலிபர் தமது கைப்பெட்டியுடன் வண்டிக்குள் ஏறினார். அவரை உள்ளுக்கு வராதபடி ஒருவர் தடுக்க எழுந்தார், அதற்குள் வண்டியும் புறப்பட்டு விட்டது. வாலிபரும் கதவை மூடிக் கொண்டு உட்கார இடமின்றிக் கதவின் பக்கத்திலேயே நின்று கொண்டு எங்கேயாவது இடமிருக்கிறதா வென்று எங்களை நோக்கினார்.

ஃ

எனக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெண் அப்பொழுது தான் வாங்கிய "சுதேசமித்திர"னை ஆவலுடன் படித்துக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் ஒரு புஸ்தகம் இருந்தது. வாலிபர் அப்பெண்ணைப்பார்த்து அந்தப் புஸ்தகத்திற்குக் கொடுத்த இடத்தைத் தனக்குக் கொடுக்கும்படியும், அப்புஸ்தகத்தைக் கையில் எடுத்துக் கொண்டால் தனக்குக் கொஞ்சம் இடம் கிடைக்குமென்றும் வேண்டினார். அந்தப் பெண்ணும் அவ்விதமே புஸ்தகத்தை எடுத்துக் கொள்ள வாலிபரும் அங்கு உட்கார்ந்து கொண்டார். வாலிபர் உத்தமராகையால் என் பக்கமாய் அதிகம் ஒட்டி நெருக்கி உட்கார்ந்துகொண்டு, தான் அந்தப்பெண்ணுக்குச் சற்று விலகி இடம் ஒதுங்கி மரியாதையாக இருக்கத் தன்னாலான மட்டும் ஜாக்கிரதையாகத் தன்னைப் பற்றிக் கவனித்துக்கொண்டு தலை குனிந்த பெண்ணாக இருந்தார். அது ஒரு நல்ல மாதிரியாகவும் பரிசுத்தமான தன்மையாகவும் காணப்பட்டது. அப்பெண்ணின் முகத்தை அவர் பார்க்கவேயில்லை. பிறகு சுதேசமித்திரனையும் இரவல்கேட்டு வாசித்தார். இதற்குள் திரிச்சி ஜங்கிஷனுக்கு வண்டி வந்து நின்றது. அந்தப் பெண்ணைச் சேர்ந்தவர்கள் பல் துலக்கிக் கொண்டு தாங்கள் கொண்டுவந்திருந்த இட்டிலி பக்ஷணங்களைப் புசித்தனர். வாலிபரும் பல்துலக்கிக் கொண்டு ஏதோ வாங்குவதற்கு எழுந்தபோது அப்பெண் தன் தாயாரைப் பார்த்து "அவருக்கும் கொடுங்கள்" என்றாள். அந்த அம்மையும் வாலிபருக்கு இரண்டு மூன்று இட்டிலியும், ஒரு முறுக்கும், இரண்டு வாழைப்பழங்களும் தர, வாலிபரும்

---

ஒருவனை ஒரு ஸந்தர்ப்பத்தில் அவனது மனத்தாழம் கண்டு கசந்து விட்டபோது, பிறகு அவனதுபேச்சை எடுப்பதற்கே மனது சம்மதிப்பதில்லை. தன்னையறிந்து கொண்டவரின் முன்பு அவனும் எதிர்வருவதில்லை. கடிதமும் எழுதுவதில்லை. அத்துடன் அந்த சேர்க்கை பிரிந்து தொலைகிறது.

இருகையேந்தி வெகு பிரியமாக வாங்கிக் கொண்டு சந்தோஷத்துடன் புசித்தார். அப்பெண்ணின் தாயாரிடம் இன்னும் கொஞ்சம் மிளகாய்த் தூள் இட்டிலிக்கு வேண்டுமென்று கபடற்றமனதோடும் கேட்டுப்பெற்று ஆனந்தமாக உண்டார். மிளகாய்த் தூளும் அதற்குத் தக்கபடி நல்ல ருசியாகவும் இருந்தது.

பிறகு அவர்கள் காபி வாங்கப் போக, அதற்கு முன்னதாக வாலிபர் எழுந்து தான் காபி வாங்கி ஆளுக்கு ஒவ்வொரு டம்ளராகக் கொடுத்து, அப்பெண்ணுக்கும் தந்து, எனக்கும் ஒரு டம்ளர் கொடுத்தார். பிறகுதானும் வாங்கி அருந்தினர், அப்பெண்ணைச் சேர்ந்தவர்களும் குழந்தைகளுமாக மொத்தம் 14-பேர் இருந்தனர். நான் ஒன்று, வாலிபர் ஒன்று, ஆக 16-டம்ளர் காபிக்கும் சேர்த்து ஒரு ரூபாயாக வாலிபர் கொடுத்து விட்டு சுதேசமித்திரனை மறுபடியும் படிக்கத் தொடங்கினர். எனக்கும் வண்டியிலிருந்தவர்களுக்கும் வாலிபர் மீது அதிக பிரியமாய் விட்டது. அந்தப் பெண்ணுக்கும் அப்படியே. பிறகு அப்பெண்ணின் தாயார் வெற்றிலைப் பாக்கை எல்லோருக்கும் கொடுத்து எனக்கும் தந்தார். அதற்கு முன்பே அந்தப் பெண் தனக்கு ஒரு டம்ளர் காபி அந்த வாலிபர் தம் கையாலேயே கொடுத்ததற்குப் பதிலாகத் தாம்பூலத்தை தானே அவருக்குக் கொடுத்தாள். அந்த வாலிபரும் வணக்கமாய்க் குனிந்து வாங்கிக்கொண்டார்.

ஃ

நான் விசாரித்தபோது அந்தப் பெண்ணைச் சேர்ந்தவர்கள் திண்டுக்கல்லில் நடக்கும் விவாகத்திற்குப் போவதாகத் தெரிந்தது, நானும் திண்டுக்கல்லில் இறங்க வேண்டியவனே. நீங்கள் எங்கு போகிறீர்கள் என்று அவ்வாலிபரைக் கேட்க, அவரும் திண்டுக்கல்லுக்குத்தான் என்றார். திண்டுக்கல் வந்ததும் வண்டியே முழுதும் காலியாகி விடுமென்று தெரிந்தது, மணப்பாறை ஸ்டேஷனில் வண்டிநின்றதும் அப்பெண்ணைச் சேர்ந்தவர்கள் வேறொரு வண்டியிலும் ஏறியிருந்தபடியால், அந்த வண்டியிலிருந்த ஒருவர் இறங்கிவந்து நீங்கள் எல்லாம் பத்திரமாயிருக்கிறீர்களா, பலகாரம் சாப்பிட்டாய் விட்டதா என்று கேட்டுவிட்டு, வாலிபரை வியப்புடன் நோக்கினர். இவர் எந்த ஸ்டேஷனில் ஏறினரென்று அவர் கேட்க, அப்பெண்ணின் தாயார் தஞ்சாவூர் ஸ்டேஷனில் ஏறினர், எங்களெல்லோருக்கும் காபி வாங்கிக் கொடுத்தார் என்று சொல்லிவிட்டு, இவரை உனக்குத் தெரியுமா என்று அவரை வினவினர். அவரும் சிரித்துக் கொண்டு நன்றாகத் தெரியும், நமக்கு ரொம்ப சொந்தம், அவர் வீட்டுக்கு நாலாவது வீட்டில் தான் நாம் இறங்கப்போகிறோம் என்றார். அதற்கு அந்தப் பெண்ணின் தாயார், "அப்படியா, சந்தோஷம்; நல்ல குணம், நல்ல படிப்பு, புத்திசாலி, அந்தப் பேப்பரை அவர் பத்மாவதியிடமிருந்து வாங்கி வெகு சிரத்தையாகப் படிக்கிறார்" என்றார். "பத்மா அவ

---

சிலர் நெற்றியில் வெள்ளை வெளேரென்று யானைக்குப் போட்டதுபோல் நாமம் போட்டுக் கொள்கிறார்கள். ஜனங்களும், அவர்களுக்கு அந்த "நாமக்காரரா" என்று கேட்டு ஒரு பெயரும் கொடுத்துவிடுகிறார்கள். இவர்களின் சங்கதியோ இடத்துக்குத் தகுந்தபடி பேசி ஏமாற்றிப் பிழைப்பதாயிருக்கிறது. முழுதும் வஞ்சக உருவங்களாயும் நன்றி மறந்தோராயும் படுமோசக்காரராயும் துரோகிகளாயும் இருக்கிறார்கள். தங்களின் பாவ பரிகாரார்த்தமாகத்தான் இவர்கள் பட்டை நாமம் இட்டுக்கொள்கிறார்களோ ?

ருக்கு வாசிக்கப் பேப்பர் கொடுத்ததா? ரொம்ப சந்தோஷம்'' என்று அவர் சொன்னதும் வண்டி அசைந்ததால் தாம் இருந்த வண்டிக்கு ஓட்டமாய் ஓடிப்போய் ஏறிக்கொண்டார்.

ஃ

இடையே சில ஸ்டேஷன்கள் வந்து போயின. கடைசியில் ஒரு ஸ்டேஷன் வந்தது. முன் வந்து போனவர் மறுபடியும் எங்கள் வண்டியின் பக்கம் வந்து நின்று பெண்ணின் தாயாரைப் பார்த்து அடுத்தஸ்டேஷன் திண்டுக்கல் என்றார். அதற்கு அந்த அம்மாள், வாலிபரைக் காண்பித்து, இவருக்குத் தஞ்சாவூரில் என்ன வேலை யென்றார். அதற்கு அவர், தஞ்சாவூரில் டாக்டர் பரீக்ஷைக்கு இரண்டு வருஷமாக வாசித்துக் கொண்டிருக்கிறார்; திண்டுக்கல்லில் இந்தத் திங்கட்கிழமை அவருக்கு விவாகம்; அதற்காகத்தான் அவர் புறப்பட்டுப் போகிறார் போலிருக்கிறது. என்னை அவர் ஒரு தடவை பார்த்திருந்தும் அவருக்குத் தெரியவில்லை; அவர் யார் சொல்லட்டுமா?'' என்றார். அதற்கு அந்த அம்மாள், நமக்கு மிகவும் வேண்டிய உறவினரா என்றார். அந்தப் பெண்ணும் அதற்கு வரும் விடையை ஆவலோடு எதிர் பார்த்தாள். அவரும் விசேஷித்த சிரிப்புடன் "அவர்தான் உன் மருமகப் பிள்ளை; உன் பெண் பத்மாவதியின் புருஷன்; விவாகத்திற்கு முன்பே இரண்டு பேரும் ஒன்றாகி இருவரும் ஒரேபக்கத்தில் உட்கார்ந்து விட்டார்கள்!'' கற்றாரைக் கற்றாரே காமுறுவர்'' என்பது சரியாய் விட்டது. பேஷ்! சந்தித்த முதல் சந்திப்பு மனோதிருப்தியா யிருந்தால் கடைசி வரையும் அப்படியேதான்'' என்றார்.

இதைக் கேட்டதும் அந்த அம்மையும், அவர் பெண்ணும், வாலிபரும் திடுக்கிட்டு வியப் பெய்தினர். பத்மாவதி நாணத்துடன் எழுந்து மற்றோர் பக்கம் போய் நின்று கொண்டாள். வாலிபரும் புதுமணப்பெண் போல் தலைகுனிந்து கொண்டார். இவ்விவரங்கள் தெரிவித்த அவரும் எங்கள் வண்டியிலேயே ஏறி பத்மாவதி யிருந்த இடத்தில் மாப்பிள்ளைக்குப் பக்கம் உட்கார்ந்து கொண்டு உற்சாகத்துடன் பேசத் தொடங்கினார். நான் இந்த இனிய இயற்கைக் காட்சியைக் கண்டு வியப்பும் மகிழ்வும் எய்தினேன். திண்டுக்கல்லில் இவர்களின் விவாகத்திற்கும் போய்வந்தேன்'' என்றார். இந்த உண்மையான கதையை யாவரும் கேட்டு ஆநந்தித்தோம். பிறகு அவரவர்கள் தமது ஆழ்ந்த அனுபவங்களைக் குறித்துப்பேசினர். மாலையில் 5-மணிக்கு நமது கதையும் பூர்த்தி பெற்றது.

'பஹதூர்' பொன்வண்டு செட்டியார்.

---

ஆறு வறண்டிருந்தால் நட்டாற்றில் மலவிசர்ஜனம் செய்து அவமதிப்பர். பிரவாக காலத்திலோ ஓரமாய் நின்று அச்சத்துடன் கால் கை கழுவி மரியாதை புரிவர். ஒருவனுக்கு சக்தி யிருக்கும்போது மற்றவரின் மரியாதைகள் அதிகமே. அந்த சக்தி குன்றிவிடினோ மிதிப்பதும் தூற்றுவதும் சாதாரணமே.

---

ஜாதிச் சண்டைகளில் ஒருவருடைய நல்ல நடவடிக்கையைக் குறித்துச் சொல்வதனால் அது ஒரு பிரயோஜனமும் கொடுக்காது. வடகலை (U) தென்கலை (Y) யுத்தத்தில் வைணவர்களெல்லாம் ஆக்கிரக புருஷர்களாகிறார்கள். இவ்விதமே ஹிந்து முஸ்லிம் வகையிலும் மதப்போர்களின் ஆவேசத்தில் நற்குணமெல்லாம் பறந்து ஓடிவிடுகிறது!




# பெரிய 'பருப்பு'களின் உழைப்பு!



விகட விநோதாசிரியனாகிய நான் இவ்வூரிலே நாகரீகத்திலே முற்றி ஏகபோகத்திலே காலைக்கிளப்பிக் கொண்டிருக்கும் 'பெரிய பருப்பு'களின் உழைப்பு எவ்வண்ணம் நடந்தேறுகிறதென்று என் ஊன்று கோல்மேல் நான்றுகொண்டு எட்டியெட்டிப் பார்த்தபோது எதிரே அகப்பட்டுக்கொண்ட வேடிக்கைகளை என் நஞ்சான் குஞ்சான்களுக்கு ஒரு கதையாகச் சொல்லலாமென்று நினைத்துக்கொண்டேன். கேட்கிறீர்களா துரைகளே!

ஃ

பெரிய பருப்புகள் என்றால் ஆனையத்தனை உயரமும், வண்ணான் சாலத்தனை வயிறும் உள்ளவர்களென்ற அர்த்தமல்ல; இவர்கள் மனிதர்களிலும் வேறாகத் தலையில் இரண்டு கொம்புகள் எதாவது முளைத்து விபரீதமாயிருப்பார்களென்பதுமல்ல; எல்லாம் மனித ரூபம்தான்! நம்மைப் போல இரண்டு கையும் காலும்தான்! ஆனால், அவர்களுடைய அகட விகட சாமர்தியத்துக்குத் தான் ஆச்சரியப்படவேண்டியிருக்கிறது!

ஃ

தம்பி நல்ல சம்பாத்தியத்திலிருக்க, அதே வீட்டில் அண்ணன் தன் ஆறு ரூபாய் சம்பளத்தைக் கொடுத்து விட்டு குடும்பம் குட்டிகளுமாய் இருந்து கொள்ள, உத்தமனான அந்தத் தம்பியும் தன் ஏழை அண்ணாவின் பெயராலேயே எல்லா விசேஷங்களையும் நடப்பித்துக் குடும்பத்தின் கௌரவமும், ஊர் தாம்பூலமும் அவனுக்கே கிடைக்கச் செய்து, தான் அவனுடைய வேலைக்காரன் போலிருக்கிறான்! எல்லா உழைப்பும் செலவுகளும் தம்பி செய்ய, அண்ணன் பெரிய பருப்பாயிருந்து கௌரவத்தை மட்டும் பெற்றுக் கொள்கிறான்! இதில் பெரிய பருப்பான அண்ணன் உழைக்கிற உழைப்பு ஒன்றுமில்லாவிடினும் விகடனான என்னைப்போல் வெள்ளை மனதாக இருப்பதில், தங்கக் கம்பியான தம்பி மூலம் அவன் வாழும்படி கடவுள் ஆசீர்வதிக்கிறார்! அண்ணன்—தம்பி இருவரிடமும் கபடமில்லை. இது அழகான குடும்பம்; நல்ல சங்கதி. இப்படியே ஊர் முழுதும் நல்லதாகவே இருந்து விடுகிறதா? காணோமே! கபட புத்தியும் ஏமாறிய

வன் தலையில் கைவைப்பது மல்லவா அதிகரித்துப்போ யிருக்கிறது!

ஃ

இன்னொரு பெரிய பருப்பு இருக்கிறது! அதுவேலை செய்யாமற் போனாலும், உடைக்கவும், கவிழ்க்கவும், கண்டதைக் கொட்டிக் கடா மூடா செய்யவும் தெரியும்! வீட்டிலுள்ள எல்லோரையும்விடத் தனக்கே அதிக மதிப்பை உண்டாக்கிக் கொண்டு, தான் சம்பாதிக்கா விட்டாலும் வீட்டுக்காரனை அதிகமாய்ச் சொத்து சேர்க்கும்படி ஒரு புதிய ஆவலை உண்டாக்கித் தூண்டி விடுகிறது! அதனால் வீட்டுக்கும் ஒரு புது மதிப்பு உண்டாகிறது! இந்தப் பெரிய பருப்பு யாரப்பா?—அதுதான் வீட்டுக்கு லக்ஷ்மீகரமாய்ப் பிறந்த குழந்தை!

ஃ

மேலே சொன்ன இரண்டு பருப்புகளும் நல்ல சரக்கு! இனி கோணல் சரக்கைக் கொட்டத் தொடங்குகிறேன்! எந்த வீட்டிலும் வேலை வெட்டியின்றி உட்கார்ந்து தின்னுகிற பெரிய பருப்புகள் இரண்டொருவராவது இருப்பார்கள்! இவர்களுக்கு தின்றுவிட்டுத் திண்ணையில் சாய்ந்து ஊர்கதைகளை மெல்லுவதே வேலை! அத்துடன், தங்களை வீட்டிற்கு வெகு முக்கியமான முதன்மைப்பட்ட மனிதனாகவும் காட்டிக் கொள்வார்கள்! ஆனால், உழைக்கிற உழைப்போ ஒரு மண்ணுமில்லை! உழைப்பது போலவு மிருப்பார்கள்! கல்யாணமோ, கருமாந்திரமோ எந்த சங்கதியிலும் இந்தப் பருப்புகளே பெரிய நாட்டாண்மைக்காரர்களாயிருந்து கொண்டு, அதிகாரங்கள் செய்ய, அதற்கு மற்றவர்கள் உட்பட்டும் நடந்து கொள்வது ஆச்சரியம்! எல்லாம் தாங்களே முன்னின்று செய்வதாய்க் காண்பித்து, ஒவ்வொரு வேலைக்கும் ஒவ்வொரு ஏமாந்த சோணகிரியைப் பிடித்து இன்னின்னது செய்யும்படி அனுப்பி விட்டுத் தாங்கள் எந்த வேலையும் செய்யாமல் தொந்தி குலுங்காமல் இருந்த இடத்திலேயே இருந்து கொள்வார்கள்! இந்தக் குளத்தைத் தூக்கு, அந்த மலையைத்தூக்கு என்று வாய் வீச்சிலேயே அதிகாரத்தைச் செய்து சமாளிப்பார்கள்! கடைசியில் தான் வந்திருந்ததால்தான் எல்லாம் சரிவர ஆச்சுது என்றும் மற்றவர்கள் நினைத்துக்கொள்ளும்படியும் செய்வார்கள்! தாங்களே ஒரு கலக முடிச்சு போட்டு விட்டு, பிறகு தாங்களே அதைச் சமாதானப் படுத்துகிறவர்களாகவும் காண்பித்துக் கொள்வார்கள்! இப்படி இவர்கள் வெளியில் பெத்த பேரும், மதிப்பும் பெறுவதைப் பார்த்து இவர்களுக்குத் தண்டச் சோறு கொட்டி யளக்கிற வீட்டுக்கார உழைப்பாளி இவர்களை விரோதித்துக் கொள்வது கூடாதென்றும், நல்ல சமயத்துக்குத் தனக்கு உதவுவார்களென்றும் நினைத்துக்கொண்டு இவர்களைத் தாங்குகிறான்! அதுவும் இவர்களின் கைராசிதான்!

ஃ

கடைசியில் இந்தப் பருப்புகள் செய்கிறதென்ன? தாங்கினவனையே அதிகாரம் செய்வதும் ஏறுமாறாக நடப்பதுமாகி, அவனுக்கே ஒரு முக்கியமான சங்கதியில் நம்பிக்கைத்

---

நேசப்பேய் சிலரைத்தான் பிடிக்கிறது. அந்தப் பேய் ஏவும் வேலைகளை அந்தப் பேய் பிடித்தவர்கள் உடனே செய்கிறார்கள். இவ்விதமே புது மனைவியின் மோகம் பிடித்தவர்கள் தங்கள் மாமியார் வீட்டு வார்த்தைகளுக்கு அதிகமான பெருமை தந்து தலைதள்ளிப்போகிறார்கள்.

துரோகமாக நடந்துகொண்டு, பெரிய தப்பிதத்தில் அவனை மாட்டி விட்டு, எதிர் பக்கத்தில் சேர்ந்துகொண்டு சத்துராதிக ளாகப்போய் விடுகிறார்கள்! இதைக் கண்ட வீட்டுக்கார உழைப்பாளி பெரு மூச்சு விட்டுக் கதறுகிறான்! இதுதான் இந்தப் பருப்புகளுக்கு உழைத்ததற்குக் கிடைத்த பன்னீர் லட்டு உருண்டை! ஆனால், இந்தப் பேதையின் பெரு மூச்சும் கதறுதலும் கடவுளுக்கு எட்டாமல் போய் விடுகிறதா?—தர்மம் தலை காக்காதா? ஆனாலும் ஒன்று; வெகுவாக உழைப்பதுபோல் காட்டிய இந்தப் பருப்புகளுக்குப் போட்ட தண்டச் சோற்றை ஒரு தர்மமாகச் சொல்ல விகடன் இஷ்டப்படவில்லை! ஏதோ பூர்வம் ஏமாறிப்பட்ட ஒரு கடன் தண்டம் என்றே சொல்லித் தொலைக்கவேண்டும்.

ஃ

இதுபோக, பெண் கொடுத்தும், வாங்கியு முள்ள இடங்களிலிருந்து அவர்களுக்கு மெத்த சொந்த பந்துவென்று இரண்டொருவர் வந்து குந்திக்கொண்டுவிட்டு முக்கியஸ்தர்களுக்கான வேலைகளை யெல்லாம் வெகு அக்கரையாகச் செய்வதுபோல் காட்டி, அவர்களுக்கு நல்லவர்களாக நடந்து கொண்டு, மற்றவர்களின் மேல் குதிரை யேறுகிற பெரிய பருப்புகளும் இருக்கிறார்கள்! வீட்டுக்காரர் கடைக்குப் புறப்பட்டால் உடனே சாக்கோ கூடையோ எடுத்துக்கொண்டு உடன் செல்லத் தயாராய் விடுவார்கள்! இப்படி முக்கியஸ்தர்களிடம் நாய்க்குட்டிகள் போல் நடந்து காட்டி, வீட்டிலுள்ள மற்றவர்களிடம் புலிக்குட்டிகள் போல் பாய்ந்து தங்களைப் பெரிய பருப்புகளாகவும், எந்த வேலையிலும் மகா அநுபோகஸ்தர்களாகவும் காண்பித்துக் கொள்வார்கள்! வந்து குந்தி மாதம் ஐந்தானாலும் அவர்களுக்குப் புறப்படுவதான யோசனையே இருக்காது! தாங்கள் இங்கு உத்தியோகத்தில் இருப்பதாகவும் தாங்கள் வீட்டுக்கெழுதி ஜம்பம் படிப்பார்கள்! மூன்று நாள் ரஜா பெற்றுவது வரும்படி இவர்களுக்குக் கடிதங்கள்வரும்! அந்தக் கடிதங்களை வெகு பக்குவமாய் மறைத்து விடுவார்கள்! கடைசியில் இவர்கள் உழைக்கும் உழைப்போ உண்ணுவதும் கழிவதும் உறங்குவதுமாக இருக்கும்! தங்கள் நடவடிக்கைகளை உற்று நோக்குகிறவனிடம் மட்டும் அதிகப்பேச்சு வைத்துக் கொள்ளாமல் மரியாதையாக நடந்து கொள்வார்கள்!

இன்னொரு தினுசு பருப்புகளின் சங்கதியோ அவர்கள் வெகு வெகு வேலைகள் செய்வது போலவே இருக்கும்! அந்த உத்தியோகத்தில் சில நாள்! இந்த உத்தியோகத்தில் சில நாள்! தேர்தல் காலத்தில் பெரிய மனிதர்களின் வாலைப்பிடித்துச் சில நாள்! பிறகு அந்தப் பெரியதலைகளையே யநுஷிக்கிறது சில நாள்! பிறகு கடன் அதிகமாகி வெளி நாடுகளுக்குக் கப்பலேறுவது சில நாள்! அங்கேயும் பெரியவியாபாரம் துவக்குவது சில நாள்! எல்லோரையும் ஏமாற்றிச் சொந்த ஊருக்கு வந்து வாழ்வது சில நாள்! கடைசியில் பேரு பெத்த

---

நமக்கு எது வெகு ஸமீபத்தில் நெருங்கி யிருக்கிறதோ அதுவே நம்முடைய பிரியத்திற்குப் பாத்திரமாகும். வெகு தூரத்திற்கிடந்த வஸ்து தன் மனைவியாகவோ தன் கணவனாகவோ நிச்சயிக்கப்பட்டு வெகு சமீபத்திலாய் விட்ட பிறகு— அதன் மூகலாவண்யம் தான் காணுவிடினும், அது எவ்வாறிருப்பினும் அதன்மீதே தன் ஆவலெல்லாம்!

பேரே தவிர எதிலும் அதிர்ஷ்டம் கிடையாது! காலாடியாகவும், பாதச் சுழியாகவுமே கிடக்கிறது! இவர்களுக்குத் தெரியாத பெரிய மனுஷ்யர்களில்லை! இவர்களை நம்பினவர்களும், இவர்களின் சடபுடலைக்கண்டு பணம் கொடுத்தவர்களும் கடைசியில் லபோ லபோவென்று வாயில் மண்ணைப் போட்டுக் கொள்ளும்படியாகவே முடிந்து விடும்; இதுதான் இந்தப் பெரிய பருப்புகள் கைநோகாமல் ஊரை ஏமாற்றி உழைக்கிற உழைப்பு! ஃ

வீட்டிலே ஆண் பெண் குழந்தைகள் இருந்தால், பெண் எவ்வளவோ வீட்டு வேலை செய்வதும், ஒரு வேளை முணு முணுத்தால், அப்பெண்ணின் தாய் நீ ஒரு வேலையும் செய்வதில்லையே—சொன்ன சொல் கேட்கிறதில்லையே—என்று கோபித்துக் கொள்ளுகிறள்! ஆனல்' எந்த வேலையுமே செய்யாமல் உண்டுவிட்டுக்கிடக்கிற தன் குமாரன் மீதோ ஒரு குற்றமும் காட்டுவதில்லை. அவன் உழைக்காமலே பெரிய கௌரவப்பட்ட பருப்பு ஆய்விடுகிறன்! இது ஆணுகப் பிறந்ததின் அதிர்ஷ்ட மாக்கும்!! இப்படியே வீட்டுக்கு விருந்தாக வரும் பெண்களும் எந்த வேலையும் செய்யாமல் இலையில் மட்டும் உட்காரும் வேலை செய்கிற பெரிய பருப்புகளாகிறர்கள்! ஃ

உதவிப் பத்திராசிரியர்களே மூளையுருக யோசித்து எல்லாம் எழுதிப் பத்திரிகையை நிறப்ப, அதை மேல் பார்த்து விட்டுப் பெரிய பத்திராசிரியர்தானே எல்லாம்செய்ததாக வெளியில் காண்பித்துக்கொண்டு பெரிய பருப்பாகி விடுகிறர். பெரிய வரும்படியும் கீர்த்தியும் பெற்றுக் கொள்கிறர்! உதவியாசிரியர்களின் பெயர் வெளியில் வருவதேயில்லை! பெரிய பத்திராதிபர் உழைத்ததாகவே எங்கும் பேர்! இப்படியே சிலர் உள்ளுக்கு ஒருவரைப் பத்திராசிரியராகப் போட்டுவிட்டு அவரே யாவும் எழுத, வெளியிலோ தாங்களே மஹா உழைக்கிற படே படே பத்திராசிரியப் பருப்புகளாகப்பட்டாலுங் க்டித்துக்கொள்ளுகிறர்கள்! வெளியில் உள்ளோருக்கு யாரால் பத்திரிகை நடக்கிறது என்கிற உள் ரகசியம் தெரிகிறதேயில்லை! வெளிவருவதுமில்லை! இது பணம்படைத்த ராசியாக்கும்!

ஃ

மச்சான், மாமி, மாமன், சகோதரிகளின் பிள்ளைகள் இவர்களெல்லாம் வீட்டில் வந்து குந்தி ஏதோ பிரமாத உழைப்பு உழைப்பதாகக் காட்டிப் பெரிய பருப்புகளாகிச் செய்கிற அதிகாரங்கள் வெகு தமாஷான வித்தையாகும்! எல்லா வேலைகளையும் மருமகள் தலையில் வைத்துவிட்டு, வெளிக்குத்தானே சகலமும் செய்து தாங்குவதுபோலக் காட்டிக் கொள்ளுகிற மாமிகளான பெரிய பருப்புகளின் உழைப்பும் வெகு விநோதமே!

ஃ

மானேஜராகவோ, தலைமைக் குமாஸ்தாவாகவோ, குட்டி குமாஸ்தா

---

என் நெஞ்சுக்குள் எழுந்த துயரப் புயற்காற்று எப்போது தணியுமோ! ஆனல், எதற்கும் ஒரு முடிவு உண்டல்லவா? எதுவும் நன்மைக்கே யல்லவா? ஹா! எத்தனை பயங்கரமாய் வஞ்சிக்கப்பட்டேன். என்னை வஞ்சித்த மனிதன் என் முகம் காண வெட்கி மறைகிறன். அதுவே அந்த வஞ்சக பாதகனுக்குப் போதிய சிக்ஷை!

வாகவோ இருந்துகொண்டு எஜமான னுக்கு வெகு உழைப்பாளி போல் காண்பித்து ஏய்த்துவிட்டு, தாங்கள் எந்த வேலையுமே செய்யாமல் மற்ற வர்களை வீண் அதிகார மிரட்டல்கள் மிரட்டியபடி நாற்காலியில் சொகுசாய் உட்கார்ந்து கொண்டு, உண்மையாக உழைத்தவர்களைப் பழித்து, அது சொத்தை, இது புளியங்காய் என்று ஒவ்வொன்றுக்கும் குறைபேசிக் கூலி யைக் குறைத்து வயிற்றலடித்து, எஜ மானனுக்கு மகாலாபம் சம்பாதித்துக் கொட்டிக் கொடுப்பது போலவும், தன்னாலேயே எல்லா வேலைகளும் நடப்பது போலவும், தான் இல்லா விட்டால் ஒன்றுமே நடக்காது போல வும் காண்பித்துக்கொண்டு செய்கிற இந்தப் பெரிய பருப்புகளின் கபட ஜால உழைப்புகளை விகடன் என் னென்று சொல்லிச் சிரிப்பேன்! இவர் களின் ஆரவாரத்திலே உண்மையாக வேலை செய்தவர்களின் உழைப்பை எஜமானன் அறிய முடியாமலே போய் விடுகிறதும் உண்டப்பா! எல்லோ ருமே இப்படியில்லை யென்கிறதையும் இங்கு கொஞ்சம் சேர்க்கவேணும்! இந்தப் பெரிய பருப்புகளிற் சிலர் தங் களின் வேலை ஸ்தலத்திலேயே பொழுது போக்க நாவல்களை வாசிப் பதும், அங்கேயே தங்களின் சொந்த வேலைகளைச் செய்துகொண்டு அதை எஜமானனின் வேலை போலத் தங்க ளுக்கு காண்பிப்பதுமுண்டு. இன் னும் எத்தனையோ தந்திரங்கள் அய் யனே! ॐ

இனி, பல நூற்றுக்கணக்கும் ஆயி ரக் கணக்குமாகச் சம்பளங்கள் வாங் கிக்கொண்டு அதற்கேற்ற நீட்டும் போக்குமாய் இருக்கும் பெத்த பெரிய பருப்புகளின் உழைப்போ, அவர்கள் உத்தரவாதமாய் ஒப்புக்கொண்ட பிர மாண்ட பேராண்ட மஹாண்டமாகிய வேலைகளை எவ்வளவு அழகாய் நிறை வேற்றுகிறார்க ளென்பதையும் விக டன் இதோ விளக்குகிறேன்! காலை யில் தூக்கத்திலிருந்து எழுந்திருப் பதே கஷ்டமான வேலை! அப்பால் தினக்ஷவரம், ஸ்நானம், புசிப்பு, காண வந்தவர்களுக்குப் பேட்டி, நியூஸ் பேபர் வாசிப்பு, பிறகு கொஞ்சம் ஓய்வு, அதற்கு மேலே தொந்தியைத் தூக்கி நெருக்கி நெளித்து வளைத்து களைத்து உடுப்பு தினுசுகள் உடுத்திக் கொள்ள அரைமணி! உடனே வாயிற் படியில் மோட்டார் வந்து நிற்கிற சப் தம்! அதற்குப் பிறகு வண்டிக்குள் குதித்து உட்காருகிறார்; அவர் ஆபீஸ் சேர்ந்ததும் அவரோடுகூட எல்லா வேலைகளும் சுறுசுறுப்பாகிறது! அந்த வேலையோ, 12-மணியிலிருந்து 3,4-மணிவரையிலுந்தான்! அதற்குள் பல முறை ஆபீஸைச்சுற்றி வருகிறது! உலாத்துகிறது! முகம் கழுவுகிறது! சிற்றுண்டி கொள்கிறது! இடையில் எங்காவது மோட்டாரில் சென்று திரும்பி வந்து உட்காருகிறது! கடைசியில் இவர்கள் பௌண்டின் பேனாவை எடுத்துத் தங்கள் முன்னே அடுக்கியிருக்கிற கடிதங்களிலே கண க்கு புஸ்தகம் முதவியதுகளிலே சில சில தவறுகள் பேசிவிட்டு, தங்களின் கையெழுத்தைப் போட்டுக் கொண் டேபோவது தான் பெரிய வேலை! அப்படி எழுதினதைப் பிளாட்டிங் பேபரில் ஒத்துகிறதற்குக்கூட இவர் களுக்குக் கஷ்டமாய்ப்போய் விடு கிறது! அதற்கென்று ஒரு பியூன் நின்றுகொண்டு ஒத்திக்கொண்டே யிருக்கணும்! இவ்விதமாக இந்தப் பெரிய பருப்புகள் இடுப்பு நோக என்ன கஷ்டமான வேலை செய்கிறார் களப்பா! இப்படி நோகாமல் நோன்பு கும்பிட்டு விட்டு, எல்லாக் குமாஸ்தாக் களும் செய்த வேலையைத் தாங்களே செய்ததாகக் காட்டி விட்டு, வீட்டிற் குப் புறப்பட்டு விடுகிறார்கள்! இந்த வேலை செய்யவே அவர்களுக்கு

ரொம்ப ஆயாஸமாய்ப்போய் விடு கிறது! மாசம் பிறந்ததும் சம்பளத்தை எண்ணிப் பெட்டியில் கொட்டிக் கொள்கிறார்கள்! ஆ! இவர்களின் உழைப்பே உழைப்பு! ஆனால், ஒரு சங்கதி; நாளைக்கு ஏதாவது நஷ்டமோ, மோசமோ, சிக்கலோ, தொல்லையோ நேர்ந்துகொண்டால், அது இந்தப் பெரிய பருப்புகளின் தலையில் தான் வந்து விடியும்! சுகத்துக்குத் தக்க பொறுப்பும் நிர்வாக விசாரமும் உண்டென்பதை விகடன் மறுக்கவில்லை! ஆனால், அவ்விதம் டீ கொடுத்து மோதிக்கொள்வது எப்போதோ ஒருபோது! மற்ற வேளையெல்லாம் மகாராஜாபோல சுகம் தானே! ஃ

மற்றொரு பெரிய பருப்புகளின் உழைப்பைச் சொல்லட்டுமா? தாலுகா போர்டிலே ஸ்தானம், முனிசிபாலிட்டியிலேயே ஸ்தானம், தேவஸ்தான டிரஸ்டியிலே ஸ்தானம், அத்துடன் ஜூரிகளிலே ஒருவர், இன்னும் கௌரவ மாஜிஸ்திரேட் பதவி, பஞ்சாயத்திலே ஒருவர், அங்கே மெம்பர், இங்கே கௌரவ காரியதரிசி, அந்தப் பாங்கிலே ஒரு டைரெக்டர், இந்த நிர்வாகக் கமிட்டிக்குத் தலைவர், இன்னொன்றுக்கும் பிரசிடெண்டு லபோ லபோ என்று வ்ாயில் அடித்துக் கொண்டு அநேக ஆயிரம் ஏழைகள் பணம் செலுத்தி ஏமாறிப்போகிற மாணப்பண்டு,இன்ஷுரன்ஸ் கம்பெனிகளுக்கு அக்கிராஸனாதிபதி — இப்படியாகப் பலஸ்தானங்களை வகித்துக் கொண்டு, இந்தப் பெரிய பருப்புகள் இவ்வளவு ஸ்தானங்களையும் எப்படித் தான் நிர்வகித்து உழைத்து வேலை செய்கிறார்களோ வென்று பிரமிக்கும் படியாக இருக்கும்! கடைசியில் ஒரு உழைப்பு மில்லாமல், அங்கு மிருந்து இங்கு மிருந்து கையெழுத்து போடுவதோடு முடிவு கட்டுகிறவர்களும் எவ்வளவோ பேர்! ஃ

இவ்வாறாகப்பெத்தபேரு படைத்துப் பெரிய பெருமாளான இந்தப் பெரிய பருப்புகளின் உழைப்பைப் பார்க்கவே, வ்கடனுக்கு இதுதான் பிழைக்கிறவழி யென்றும், உண்மையாச வியர்வை சொரிய உழைக்கிறவனுக்குச் சொட்டுச் சொல்லும் குறைப்பேச்சுகளுமே கதியென்றும் தோன்றுகிறது! நல்லதுக்குக் காலம் காணோம்! இப்படி உலகம் கோணல் போக்கில் இருந்தாலும், மேலே கடவுள் பார்க்கிறாரென்றும், அவர் நல்ல கூலி தருவாரென்றும் நம்பி மனதார உழைப்பதே நல்லதென்றும் விகடன் என் கோணைத் தடியைத் தூக்கிக் காட்டிச் சொல்லுகிறேன்! நீங்களும் உலக விநோதத்தைக்கேட்டுக் கொள்ளுங்கள்! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!!

---

## விடுவிப்பு.

இப்பத்திரிகையிலுள்ள "மூளைக்கு விருந்தின்" விடுவிப்பு:—(1) ரூ.2—10—0 (2) 2x2=4.... 2+2=4. (3) 20-பூவன்தார், 80-ரஸ்தாளி தார். (4) சுபம், வதுவை, தாமரை, அநாதி, விபவ, வன்னி. (பதுமநாபன்) (5) வருஷம், மாதம், வாரம், நாள், பகல் இரவு. (6) விகாரி. (7) நகையினால்.

சென்ற ஐப்பசி ஸஞ்சிகையிலுள்ளதின் விடுவிப்பு:—(1) அரசனோடு வந்த ஜனங்கள் அரசனையும் சேர்த்து 45. தோட்டத்துக்குள் போன ஜனங்கள் அரசனையும் சேர்த்து 9. (2) இராமங் தாரத்தால். (3) புரட்டாசி மாதம், சனிக்கிழமை. (4) மனம். (5) பரிதி (சூரியன்) (6) 2÷4=2. xxx 4-2 =2. (7) திருவிடை மருதூர். (8) மூன்று புடவை, இருபத்தொரு புஸ்தகம், எழுபத்தாறு பென்சில்.




சிலர் வலியப் பெண்களிடம் பேச வருவதேன் என்றதற்கு விகடன் உள்ளுக்கு ஏதாவது ஒரு அந்தரங்க நோக்கம் இருக்குமென்றானும் !

ஃ

ஒருவரிட மிருந்து சாமான்யமான தொன்றைப் பரிசாகப் பெற்றால், அதைக் கொடுத்தவர் பிறகு அதனி னும் உயர்ந்த தொன்றை அமுக்கிக் கொண்டு போய் விடுவாராம் !

ஃ

தங்களைத் தந்திரக்காரர்களென்று முழுதும் தெரிந்து போன இடத்தில் அதிகம் நெருங்குகிறதில்லையாம் !

ஃ

பத்திரிகையைப் படித்தவனும், புதுவிவாகம் செய்து கொண்டவனும் "அதில் ஒன்று மில்லை" யென்கிறார் களே தவிர, அதை விட்டு விட மாட் டார்களாம் ! ஃ

1. வீட்டு எண்ண மில்லாதவன் எவன் ?

2. உற்சாகத்தில் துக்கம் தெரி யாதவன் எவன் ?

3. வெகு சத்தியவந்தனென்று பெயரெடுப்பவன் எவன் ?

4. எவருக்கும் ஸலாம், கும்பிடு போட்டுச் சுற்றித் திரிபவன் எவன் ?

5. நித்தியானந்தமாய் நித்திரை செய்பவன் யார் ?

6. புது மாப்பிள்ளையாவது எப் போது ?

7. பெண்கள் எந்த சமயம் அதி கம் சிரித்துக் கொஞ்சி நெருங்கி மரி யாதையில் நிற்பார்கள் ?

விடை:—(1) கூத்திக் கள்ளன். (2) சூதாடி. (3) பொய்யன். (4) கப டன். (5) குடியன். (6) கல்யாணத் துக்குப் பெண் இருந்தால். (7) தங் கட்குக் கணவனிடம் ஒரு காரியம் ஆகவேண்டியபோது.

ஃ

தாய் தந்தையரை விட்டு எந்த சமயம் பிரிந்து விடுகிறதென்று ஒரு வர் கேட்க, அவர்களின் பிரியம் வேறோரிடத்திற்குத் தாவித் தன் க்ஷேமத்தில் சிரத்தை யற்றுவிடும் போதென்று விகடன் சொன்னானும் !

ஃ

அண்ணனுக்குச் செய்கிற வைத் தியம் வீண் ; அவன் எங்கே பிழைக் கப் போகிறான், வைத்தியனுக்குத் தரும் பணத்திற்கு எனக்கு ஒரு பட் டுச் சேலை வாங்கித் தந்தால் உங்கள் பெயரைச் சொல்லிக் கட்டிக் கொள் வேனென்று ஒரு தங்கை தன் பெற் றோரிடம் சொன்னாளாம் !

ஃ

விரோதப்பட்ட இருவரையும் மறுபடி சேர வொட்டாமல் மூன்றா வது மனிதன் தடுப்பதேன் என்ற தற்கு விகடன் அது, தான் சுரண்டுகிற லாபம் கெட்டுப் போகாதிருப்பதற்கே என்று பதில் சொன்னானும் !

ஃ

ஒருவன் மீறி எதிர்த்துக் கொண் டபிறகு அதுவரை அவன் ஏமாந்தவ னென்று மிதித்து அதிகாரம் செய்த வர்களெல்லாம் அடங்கிப் போவார் களாம் ! ஃ

தானே தேடிக்கொண்டு வந்தமரு மகள் தன்னிலும் மீறிய வாய்ப்பட்டி

யாயிருக்கவே, மாமி தோல்வியுற்றுத் தன் மகள் வீட்டுக்கும் குடிபோய்விட்டாளாம். ஃ

என்னுடைய பெண்டாட்டிக்குப் பாட்டிமேல் கால் போட்டுத் தூங்க கால் போட்டுத் தூங்கக்கூடாது; ஆனல், நான் என் அப்பனின் பெண் பக்கத்தில் என் அப்பன் அவள் மேல் லாம் என்று ஒருவன் விகடனிடம் சொன்னனும்! ஃ

எல்லோரும் சுலபத்தில் பத்திராதிபர்களாகி விடுவதில் அந்தப் பெயருக்கே கௌரவம் இல்லாமற் போய் விடுகிறதென்றெண்ணியே கனம் கவர்ன்மெண்டார் 500-ரூபா 1000-ரூபா டிபாஸிட் கட்டினல் தான் பத்திராதிபர்களாகலாமென்றூர்களாம்.

ஃ

பிழைப்பின்றிப் பிறர் வீட்டிலுண்டு அந்த வீட்டிலேயே எஜமானன் போல் அதிகாரஞ் செய்கிறவர்களை அவ்வீட்டார் விழித்துக் கொண்டு துரத்தும்போது அவர்களும் அடங்கி விலகி ஓடி விடுகிறூர்களாம்!

ஃ

தான் அன்னியனென்று உபசரித்த அவனே தன்னைச் சிறுவயதில் விட்டோடிப் போன தன் கணவனென்று அறிகிறபோது அந்தப் பெண் அதற்கப்பால் என்ன செய்வாளென்று ஒருவர் கேட்கிறூர். ஃ

சொத்துக்கள் இருந்தகாலத்தில் பெண் குழந்தைகளே பிறந்து, அந்த சொத்துகள் பறந்து விட்ட இந்நாளில் ஆண்குழந்தைகள் பிறந்திருக்கிறதே யென்று ஒருவர் விகடனிடம் நொந்துக் கொள்ள, பெண் குழந்தைகளைத் தக்க இடத்தில் கட்டிக் கொடுக்கக் கடவுள் சொத்துக்களை வைத்தார், ஆண் குழந்தைகள் தாங்களே பிழைத்துக் கொள்வார்களானதால் சொத்து வைக்கவில்லையாக்கும் என்று பதில் சொன்னனும்! ஃ

மனிதருக்கு வேலைக்காரனுயிருப்பது கை. மூக்கின்மேல் விரல் வைத்து ஆச்சரியமாகச் சொல்வது சை. தையற்காரனிடம் துணிகொடுத்துச் சொல்வது தை. வண்டிக்குப் போடுவது மை. கடன்காரன் பணத்தைக் கேட்பது வை. பணம் போடுவது பை. ஃ

ஆணின் விகாரத்தைப் பெண்ணும், பெண்ணின் விகாரத்தை ஆணும் அடக்கித் தணித்து விடுவதினலேதான் அவரவர்களும் வெளியே வெகு வெகு யோக்கியர்களாக நன்னடத்தையுடன் இருக்கிறூர்களாம்!

ஃ

தெரிந்த கடையில் வாங்கிய ஒரு சாமானைத் தெரியாத கடையில் வாங்கினல் இன்னும் குறைந்த விலைக்கு வாங்கலாமாம்!

---

விரத தினமென்று வீட்டிற்குப் பலரும் வந்து குந்துகிறூர்கள். ஒருவரேனும் விரதமில்லை. வீட்டுக்காரன் ஒருவனே விரதம். மற்றவர்கள் மூன்று வேளையும் புசித்து விரததினங்கட்குமேலும் இரண்டு தினங்கள் இருந்துவிட்டுச் செல்லுகிறூர்கள். இது விரத தினத்தின் செலவுகள் போலும்!

---

எந்த வீட்டில் சேவலைக்காட்டிலும் (அதாவது ஆணைக்காட்டிலும்) பெட்டை (அதாவது பெண்) உறக்கக் கூவுகிறதோ அந்த வீடு விசனகரமானது, சந்தோஷச் சாப்பாடு அங்கு இல்லை. எந்த இனிய உணவிலும் நல்ல பொழுதிலும் ஒரு கலகம் தோன்றிக் கொண்டு விடும்; கண்ணீர் பெருகவைக்கும்.

# சாமுண்டியின் பிற்காலவாழ்வு:



சாமுண்டி பிறந்த வம்சத்தில் சிறை வாசம் என்பது பரம் பரையாக வந்த பிதுரார்ஜித உரிமை யாயிருந்தது. எப்பொழுதும் பெற் றோருக்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்த சாமுண்டியும் பதினைந்தாவது வயதில் ஒரு கொலைக்குற்றத்தின் கார ணமாகக் கைது செய்யப்பட்டுப் பதி னுன்கு வருஷக் கடின காவல் அடைந்தான். ஃ

ஆனால், சாமுண்டி உண்மையி லேயே நல்ல மனதுடையவன். சக வாசதோஷத்தின் காரணமாக அவன் கொலைக் குற்றமொன்றில் சம்பந்தப் பட்டானேயன்றி வேறில்லை. கொலைக்குக் காரணமான பண ஆசை, காமம், இவற்றில் அவனுக்குப் பிடித் தமே கிடையாது. காலையிலும் மாலையிலும் அவன் சூரியனை நோக் கிக் கும்பிட்டுத் துதிப்பான். பிறருக் குத் தன்னால் ஆன உதவியைச் செய் வதில் பின்வாங்கமாட்டான். காரண மின்றிப் பிறர் மனதைப் புண்படுத்த மாட்டான். ஃ

சிறைக் காவலாளிகளுக்கு அவன் மீது நம்பிக்கை அதிகம். என்ன பொறுப்பான வேலையைக் கொடுத் தாலும் சாமுண்டி அதைச் சரிவரச் செய்து முடிப்பான். இக் காரணங் களால் சிறையதிகாரிகள் சாமுண்டி யின் சிறை வாசகாலத்தைக் குறைத் துப் பன்னிரண்டாவது வருஷத்தில் அவனை விடுவித்து விட்டனர்.

ஃ

பதினைந்தாம் வயதில் வெளியு லகை விட்டு உள் சென்ற சாமுண் டி இருபத்தேழாவது வயதில் மீண் டும் அவ்வுலகைத் தரிசித்தான். அவ னது தாய் தந்தையர் இறந்து வெகு காலமாய் விட்டது. அவனுக்குப் பழக்கமான உற்றாரோ உறவினரோ எவருமில்லை. சிறையை விட்டு வெளி வந்த சாமுண்டி நீரை விட்டு வெளி வந்த மீனெனத் தவித்தான். முன் பின்னறியாத தேசத்திற்கு வந்து விட் டதாக, அவன் உணர்ந்தான். சிறையுல கத்தில் அவன் வெகு இன்பமாக நாட் களைக் கழித்து வந்தான். இங்கோ அவனுக்கு முட்களின் மேல் நிற்பதா கத் தோன்றியது.

ஃ

இரண்டு நாள் அவன் சரியான சாப்பாடு அகப்படாமல் தவித்தான். கடைசியாக ஒரு தொழிற்சாலையில் வேலை யொன்றில் அமர்ந்தான். அது வும் அவனுக்குப் பிடிக்கவில்லை. தொழிற்சாலையின் இரைச்சலும் அங் கிருந்த அதிகாரிகளின் நடத்தையும் அவனுக்குப் பெரும் உபத்திரவமாகத் தோன்றின. முடிவில் அவ்வேலையை யும் விட்டு அவன் சென்னை நகரை யடைந்தான். ஃ

---

அவன் மீதும், அவள் மீதும் பதிந்த அன்பு இன்னொருவன் மீதோ அல் லது இன்னொருத்தி மீதோ பதிவது கஷ்டம். தன் இஷ்டப்படி அன்பு மனத்தை மாற்றிக் கொள்ளும் சக்தி அதமருக்கு இருக்கலாம்; உத்தமருக்கு அவ்விதம் இல்லை. ஒரே சொல், ஒரே உறுதி, ஒரேவித பற்றுதல், அதுவே கடைசி வரைக்கும். அதை நிறைவேற்றுதற்கே வாழ்நாள்!

தினது பிற்காலத்தைப் பற்றி அவன் ஆழ்ந்து யோசித்துப் பார்த்தான். தாயை விட்டு வந்த கன்று திரும்பவும் தாயிடம் ஓடுவது போல, அவன் தன்னைப் பதினைந்து வருஷ காலமாகப் போஷித்து வந்த சிறைத் தாயையடைய நிச்சயம் கொண்டான்.

ஃ

ஆங்கிலத்தில் இரு பழமொழிகள் உண்டு. 'கற்சுவர்கள் சூழ்ந்த இடமெல்லாம் சிறையுமாகாது; இரும்புக் கம்பிகள் ஒன்று சேர்ந்தால் கூண்டுமாகாது' என்று, 'மனிதனது மனம் நரகத்தை சுவர்க்கமாகவும் சுவர்க்கத்தை நரகமாகவும் செய்ய வல்லது' என்றும் அப்பழமொழிகள் கூறும். அதைப் போலவே, மற்ற மனிதர் நினைக்கவும் அஞ்சுகின்ற சிறைவாசம் சாமுண்டிக்கு மோக்ஷ உலகமெனத் தோன்றியது.

ஃ

மேற் கூறியப்படி தீர்மானித்தும் சிறைக்கு மீண்டும் செல்லும் வழியைச் சாமுண்டி தேடலானான். அவனைச் சில போலிச் சந்நியாசிகள் தம்முடைய கூட்டத்தில் சேருமாறு வற்புறுத்தினார்கள். ஆனால் யாசகம் செய்வதில் சாமுண்டிக்கு வெறுப்பு அதிகம். பிறருடைய தயவை நாடி என்றும் இருப்பது அவனுக்கு அருவருப்பை யளித்தது.

ஃ

கொலை, களவு செய்து சிறைக்குச் செல்லவும் அவனுக்குப் பிரியமில்லை. அக்கிரமமான காரியமெதையும் செய்ய அவன் விரும்பவில்லை. கடைசியில் அவன் மனதில் ஒரு யுக்தி தோன்றியது.

கூட்டம் நிறைந்த கடைத்தெருவின் வழியாக சாமுண்டி சென்று கொண்டிருந்தான். அவன் அழுக்கு வேஷ்டியையும் அழுக்குச் சட்டையையும் தரித்துக் கொண்டிருந்ததுடன் எங்கோ கண்டெடுத்த குல்லாய் ஒன்றையும் தன் மொட்டைத் தலையின்மீது அணிந்து கொண்டிருந்தான். அழுக்கு நிறைந்த வேஷ்டிகளை யணிந்துள்ள அவனது கறுத்த சரீரத்தில் அக் குல்லாய் பளிச்சென்று மின்னிக் கொண்டிருந்தது.

ஃ

கடைத்தெருவில் உள்ள கட்டிடங்கள் யாவற்றிலும் கண்ணாடிக் கதவுகள் ஏராளமாக வைக்கப் பட்டிருந்தன. சாமுண்டி தெருவின் ஓரமாக நின்று கொண்டு ஒரு கல்லை எடுத்து ஒரு கடையின் மீது எறிந்தான். கண்ணாடிக் கதவுகள் யாவும் பொத, பொத என்று உடைந்து விழுந்தன. கடைக்காரர்கள் யாவரும் வெளியே ஓடிவந்தனர். போலீஸ் சேவகன் ஒருவனும் அங்கு வந்து சேர்ந்தான். 'கண்ணாடியை உடைத்தவனைக் கைது செய்யுங்கள். சிறைக்கனுப்புங்கள்' என்று யாவரும் கூவினர். சாமுண்டி போலீஸ் சேவகன் முன் சென்று, 'நான் தான் கல்லை எடுத்து எறிந்தேன்' என்றி கூறிச் சிரித்தான். குற்றம் செய்தவன் எங்காவது போலீஸ் சேவகனிடம் வந்து குற்

---

உலகம் முழுவதையும் ஒரு தட்டிலும், தன் முதல் மனைவியை இன்னொரு தட்டிலும் வைத்தால் தன் முதல் மனைவியைத்தான் பிரியமாய் ஒப்புக்கொள்வேன் என்கிறார் ஒருவர். ஆனால், முதல் மனைவியுடன் கூடிவாழ்க்கை நடத்துவோர் அவ்விதமாக அதை ஒரு அருமையாக எண்ணாததேன்? என்பது வினா? எல்லாம் போய் விட்ட பிறகுதான் அருமைபோலும்!

றத்தை ஏற்றுக் கொள்வது உண்டா? 'போடா, பைத்தியக்காரா!' என்று போலீஸ் சேவகன் கூறிவிட்டு, வெகு தூரத்தில் மோடார் வண்டி யொன்றைப் பிடிப்பதற்காக ஓடிக் கொண்டிருந்த நாட்டுப்புற மனிதன் ஒருவனையே குற்றவாளி யென்று எண்ணி அவனைத் தொடர்ந்து ஓடினன்.

ஃ

சாமுண்டிகருத் தன் முயற்சி பலியாது போனது சகிக்க முடியாத துக்கத்தைத் தந்தது. அவன் மனம் சலியாது மீண்டும் பிரயத்தனம் செய்ய நிச்சயித்து முன் நடந்தான். அங்கோரிடத்தில் ஒரு பெரிய சிற்றுண்டிசாலை இருந்தது. சாமுண்டி அதற்குள் நுழைந்து மிட்டாய் தினுசுகளாக வரவழைத்து, இரண்டு மூன்று ரூபாய்க்குச் சாப்பிட்டான். சாப்பிட்டு விட்டுக் கையை வீசிக் கொண்டு வெளியில் வந்தான். பணத்தைத் தந்து விட்டுப் போகும்படி அங்கிருந்த சேவகர்கள் கூவினர். சாமுண்டியிடம் ஒரு காசும் இல்லை. சேவகர்கள் அவனைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு இட்டுச் செல்ல ஆயத்தமாயினர். அப்பொழுது அங்கு வந்த சிற்றுண்டிச் சாலையின் யஜமானர் விஷயத்தை அறிந்து, 'இவனை விட்டு விடுங்கள். இப்பெரு வயிறு படைத்த புண்ணியனுக்கு விருந்து செய்வித்த நற்பயன் நமக்குக் கிடைக்கும்' என்று கூறி அவனை விடுவித்துவிட்டார்.

ஃ

சாமுண்டிக்கு மனம் புண்ணாய் விட்டது. எவ்வழியில் முயன்றும் தான் போலீஸ்காரர் வசம் அகப்பட முடியாமல் போவதைக் கண்டு அவன் வியப்புற்றான். முயற்சி யுடையார் இகழ்ச்சியடையார் என்று எண்ணி மீண்டும் நடந்து சென்றான். அங்கு ஒரு மாதர் விடுதி இருந்தது. 'உள்ளே வரும் புருஷர்களைப் போலீசாரிடம் அனுப்பப்படும்' என்று அங்கொரு பலகையில் எழுதியிருந்தது. சாமுண்டி அதற்குள் நுழைந்தான். நுழைந்ததுடன் நில்லாமல் வெளியில் இருந்த நாற்காலி யொன்றில் அமர்ந்து இஷ்டப்படி யெல்லாம் பாடுவதற்கு ஆரம்பித்தான். கொஞ்சநேரத்தில் இரு மாதர்கள் வெளியில் வந்தனர். அவ்விருவரும் சாமுண்டியைக் கண்டு சிரித்துக்கொண்டே குடித்து விட்டுத் தன்னடக்கமின்றித் திண்டாடும் மனிதனது சேஷ்டைகளை யெல்லாம் காண்பதற்கு நமக்கு அவகாசமேற்பட்டது. இவன் இஷ்டப்படி யெல்லாம் பாடட்டும்' என்று கூறி அவனைக் கவனித்துக் கொண்டே நின்றனர். சிறிது நேரத்தில் இருபது முப்பது பெண்கள் அவ்விடம் வந்து சாமுண்டியின் பாட்டைக் கேட்டுக்குதூகலித்து நின்றனர். 'இன்னும் பாடு, பாடு.' என்று அவர்கள் கூவினர். இங்கும் தன் முயற்சி பலியாது போனதைக் கண்ட சாமுண்டி மனம் வருந்தி வெளிச் சென்றான்.

ஃ

அங்கொரு கடையில் ஒருவர் வெளியில் தன் குடையை விட்டு உள் சென்றிருந்தார். சாமுண்டி அக் குடையை எடுத்துக் கொண்டு நடந்

---

தான் இல்லாமல் தனது துணையின்றி அவனால் ஒரு காரியமும் ஆகாதென்றும், எதற்கும் தன்னையே எதிர்பார்த்து அழைக்கப்பட்டவனென்றும் சிலர் தங்களைப் பிரமாதமாக நினைத்துக் கொள்கிறார்கள். அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனால், இத்தகையோர் முழுவஞ்சகப் புரட்டர்களென்றும், மகா தனுக்கு ஜாலத்துரோகிகளென்றும் தெரிந்த பிறகு அவர்களை நம்பவோ, தன்னுடன் சேர்க்கவோ முடிகிறதா? பிரிந்தது பிரிந்ததே.

தான். குடையின் சொந்தக்காரர் தன்னைப் பிடித்துக் கொள்ள வேண்டுமென்றே அவன் மெதுவாகச் சென்ருன். சிறிது நேரத்திற்குப் பின்னர் குடையின் சொந்தக்காரர் அவனைத் தொடர்ந்து வந்தார். சாமுண்டிக்கு வெகு சந்தோஷமுண்டாயிற்று. கடைசியில் தான் போலீசார் வசம் ஒப்புவிக்கப் படுவது திண்ணம் என்று நம்பினுன். குடைக்காரரிடம் 'இது என் குடையல்லவோ' என்று கூறினுன். ஆனுல் அவ்வழியிலும் அவனது கோரிக்கை நிறைவேறவில்லை. ஏனெனில் குடைக்காரர், 'ஐயா, இது உங்களுடைய குடையாயிருந்தால் எடுத்துக் கொள்ளுங்கள். அதை இன்று காலையில் ஒரு ஹோட்டலில் கண்டெடுத்தேன். சொந்தக்காரரிடம் அதைச் சேர்க்க வேண்டுமென்றே நான் எண்ணி யிருந்தேன்' என்று கூறி வேறு வழியாகச் சென்று விட்டார். ஃ

பலவழிகளிலும் முயன்றும் சிறைசாலைக்குள் நுழைய இடமேற்படாது போனதும் சாமுண்டிக்கு வேறு எண்ணம் தோன்றிற்று. எங்காவது ஒரு வேலையில் அமர்ந்து கொஞ்சம் பணம் சேர்த்துக் கொண்டு, பிறகு சில்லரையாக வியாபாரம் செய்யவும், பிறகு ஒரு பெண்ணை மணந்து கொண்டு அமைதியாகக் குடும்பவாழ்க்கை நடத்தவும் நிச்சயித்துக்கொண்டு அவன் ஜவுளிக்கடை வீதி வழியாகச் சென்று கொண்டிருந்தான். சிறைச்சாலை செல்லும் நம்பிக்கையை அவன் இழந்துவிட்டான். பிற்காலவாழ்வைப் பற்றிய எண்ணங்களே அவன் மனதில் நிறைந்திருந்தன. அப்பொழுது திடீரென்று ஒரு போலீஸ சேவகன் மோட்டாரினுல் மோதிப் பெரும் விபத்துக்காளாக விருந்த சமயம் அதியிருந்தும் அவனைப் பிடித்து இழுத்துத் தப்பவைத்தான். இதைக் கவனித்து நின்ற அருகே யிருந்த கடை வியாபாரி இத்தகைய பலவானை விடக் கூடாதென்று, சாமுண்டியையழைத்து அவன் வரலாறு யாவற்றையும் கேட்டு விட்டுத் தம்மிடம் வேலைக்கு வைத்துக் கொண்டார். அவனுக்கு ஒரு விவாகமும் செய்வித்துக் குடும்பஸ்தனுக்கி நல்ல வழியில் அவன் புத்தி செல்லும்படியும் பழக்கினுர். கடவுள் கிருபையால் இப்பொழுது சாமுண்டி மாதம் முப்பது ரூபாய் சம்பளத்துடன் எஜமானனுக்கு நம்பிக்கையுள்ள பணியாளனுய் மனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வருகின்றுன். எல்லா குணங்களும் அருகிலுள்ளோர் ஆதரித்துத் தேற்றி ஊட்டுவிக்கும் வகைக்குத் தக்கபடி உயர்ந்தோ—தாழ்ந்தோ மாறுபட்டுக் காணலாகும்.

---

மசித்துணியைக் கையில் எடுத்துச் சமையல் அறையில் இருப்பதற்குப் பதிலாக, வெள்ளைக் கைத்துண்டைக் கரத்திலேந்தி நாற்காலியில் உட்கார எந்தப் பெண்ணுக்குத்தான் ஆசையில்லாமலில்லை. ஆசையோடு அதற்கு வேண்டிய உழைப்பும் முயற்சியும் கொண்டால் அப்படியே ஆகலாம் தான். அவ்விதமின்றிச் சோம்பிக் கிடந்து பெருமூச்சு விடுவதிற் பயனென்னவோ!

---

தன் முதல் மனைவியையும், தான் பிரிந்த மகவையும் தனக்குக்கொடுத்து, மற்ற செல்வங்களைக் கடவுள் அபகரித்திருந்தாலும் தன் மனம் நோகாதென்கிறுர் ஒருவர். அவளுடன் ஆநந்தமாகப் பிச்சையேற்றுண்டு இன்பமாக வாழ்வாராம். இத்தகைய எண்ணத்தினரே அப்பாக்கியத்திற்குக் கொடுத்து வைப்பதில்லை. முதல் மனைவியை விரோதித்திருந்தால் உயிரோடிருப்பாள்.

# கானம்



கானம் கலைஞானங்களில் ஒன்று. படிப்பினாலுண்டாகும் களைப்பினையும், தொழில் செய்ததனாலுண்டான ஆயாஸத்தையும் சங்கீதம் தணிவிக்கும். துன்ப முற்றோன் கானம் கேட்டதும் மனம் குதூகலத்தை யடையும் விதம் யாவருக்கும் அனுபவமே. காதலுக்குக் கானம் இன்றி யமையாதது. கானத்தால் இளகாத மனத்தவன் எத்தீச் செயல்களும் செய்ய உடன்படுவான்.

ஃ

இச்சங்கீதமானது நாடுகள் தோறும் வெவ்வேறு திறத்தானியலுகின்றது. மேற்றிசையோரின் கீதம் நமது கானத்தினின்றும் வேறுபட்டியங்கும். இந்துஸ்தானத்துச் சங்கீதத்திற்கும் தட்சிண பாகத்துச் சங்கீதத்திற்கும் வித்தியாச முளது. சங்கீதம் ஒவ்வொரு ஜாதியாரிடத்தும் இயற்கையில் அமைந்துள்ளது. ஆரியர்கள் வேதத்திற்குச் சுரம் அமைத்துப் பாடுவர்.

ஃ

தமிழ் பாஷையில் இயல், இசை, நாடகம் என முப்பகுதி. இசையானது இயல் இன்றி நடைபெறாது. ஆதி காலத்தில் தமிழில் இசை நூல்கள் பல இருந்தனவாகச் சிலப்பதிகாரம் கூறும். தாளமின்றி இசை சிறவாது. இக்காலத்திய கீர்த்தனங்கள் முன் இருந்தனவென நம்புதற்கு இடமேயில்லை. இசைக்கருவி ஐந்து விதமாம். அவை தோல், நரம்பு, தோளை, கஞ்சம், மீடறு எனப்படும். வீணையொன்றே பழங்காலத்திய இசைக் கருவி. யாழ் எனினும் வீணையெனினும் ஒக்கும். யாழ் நால்வகைத்தாம். அவை பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன.

ஃ

'எதற்குருகாதவனு மிசைக்குருகுவான்'. இசையினால் நோய் முதலியனவும், பைத்திய முதலியனவும் தணிகின்றன. ஆதியில் இராகம் 32—என்பர். இப்பொழுதோ ஆயிரக் கணக்கிலுள்ளன. நவரசங்களுக்கு வெவ்வேறு இராகங்கள் அமைந்துள்ளன. இசை பயில்வோர் பலர். அவற்றிற் கணிகையரும் ஒருவர். ஆடவரை மயக்குதற்கே இவர் கற்பதாம். கற்பவர் சிலரேனும், கேட்டு ஆநந்திப்பவர் பலராவர். ஆநந்தியாதார் ஒருவருமேயிலர். அவ்வாறுளரேல், அவர் இயற்கைப் பொருளுட் சிறந்த மனிதருடன் ஒருங்கெண்ணப் படார்; இன்னும் ஐயறிவுயிர்களினும் கீழ்ப்பட்டவரேயாவார்.

---

ராமனின் பேச்சைக் கேட்டு முன்பு கோவிந்தனை அவமதித்தனர். அந்த சமயம் ராமனின் கை ஓங்கி நின்றதும் செல்வமும் கூடியிருந்ததுமே காரணம். முன்பு இழிந்த நிலையிலிருந்த கோவிந்தன் இப்பொழுது உயர்ந்த நிலையில் மீசை முறுக்குகிறான். இப்பொழுது மறுபடியும் ராமன் கோவிந்தன் மீது புகார் கூறுகையில் ராமனின் பேச்சை மதிப்பாரில்லை. கோவிந்தன் பக்கமே இருந்து விடுகின்றனர். ராமனின் இழிந்த நிலையும் ஒரு காரணம்.

# சிறுமணித்திரள்

(508-ம் பக்கத் தொடர்ச்சி.)

930. பேசாமல் மௌனமாயிருப்பவனையும் ஜனங்கள் தூஷிக்கிறார்கள். விரிவாகப் பேசுகிறவனையும் தூஷிக்கிறார்கள்; இது வெகு காலத்து வழக்கம். ஒருவனை முற்றிலும் புகழவும் கூடாது. முற்றிலும் இகழவும் கூடாது.—புத்தர்.

931. தருமம் என்னும் காற்று வீசாவிட்டால் நமது கப்பல் கடலில் முழுகியே தீரும். ஆதலால் ஆண்டவா என்னுடைய பாய்மரத்தில் உனது அருட்காற்று வீசுமாக.

932. பரஸ்பரம் நல்லெண்ணம் இருக்கவேண்டியது அவசியம். நல்லெண்ணம் ஏற்படப் பிரார்த்தனை தான் சிறந்த சாதனம். ஆகவே, நல்லெண்ணத்தை ஆண்டவன் உண்டு பண்ணுமாறு நாம் பிரார்த்திப்போமாக. நடவடிக்கையில் சாத்தியமான வரையிலும் இந்த நல்லெண்ணத்தை உறுதி செய்ய வேண்டும்.

933. பிறர் கஷ்டப்படுவதைக்கொண்டு அதில் தாம் ஜீவிப்பது கேவலமென்பதைக் கூட இருப்பவர் உணருமாறு செய்யவேண்டும்.

934. என் அந்தக்காணத்தை நம்பி, அதாவது கடவுள் எனக்கு வழிகாட்டி, எனக்கு ஒரு புதுயோசனையையுண்டு பண்ணுவாரென்ற நம்பிக்கையுடன் அந்தந்தச் சமயத்தில் தோன்றும் வழியில்—நான் எல்லாவற்றையும் சகித்துச் செய்வேன்.

935. ஒருபடி பச்சை யரிசியைப் 16-சதம் கொடுத்து வாங்கி, 3-சதம் கூலி கொடுத்து இடித்து வறுப்பித்தும், 6-சதத்து விறகுடன் அதை இடியப்பம் அல்லது பிட்டு ஆக்குவதேயானால், 8-பேர் முழுத் திருப்திகரமாகச் சாப்பிட்டுப் பசி தணியக் கூடியதாக விருக்கின்றது. இந்த 8-பேரும் "இந்தியா பிராமணாள் ஓட்டல்" இருக்கும் இடத்திற்குச் சென்று குறைந்த தொகையாக 80 சதம் செலவு செய்தால் அரைவயிற்றுக்கு அருந்தி மரியாதையுடன் வெளியேறலாகும். கடைக்காரனின் இலாபமென்ன? 55 சதம். 25 சதத்திற்கு 55சதம் இலாபம். இதைவிட மேலான வியாபாரம் உண்டா? ஈ எஸ் எல். சி; வி. எஸ். எல். சி. 'பாஸ்' பண்ணிவிட்டுச் சந்திக்குச் சந்தி தட்டுக்கெடும் நம் நாட்டு வாலிபர்கள் இந்த இலாபத்தையேனும் உபயோகப் படுத்தலாமே! ("இந்து சாதனம்")

---

திரிச்சினாப்பள்ளிப் பொடியைச் சென்னைப் பட்டணத்திலுள்ளோர் சிலர் வெகு அருமையாய்ப் பாவித்து இழுக்கிறார்கள். திரிச்சியிலுள்ளோரிற் பலர் பட்டணம் பொடி வேண்டுகிறார்கள். தூரத்திலிருப்பதின் மீது தான் அதிக வாஞ்சை போலும்!

---

முரட்டுத்தனமும் சில வேளைகளில் நல்ல மருந்தாக உதவுகிறது. அவனை இளிச்சவாயனென்று நினைத்தவர்கள் அவன் முரட்டுத்தனத்தைக் கண்டதும், இனி எதிர்க்க முடியாதென்று விலகிக் கொள்கிறார்கள். கடிக்கா விட்டாலும் பாம்பு சீறிக் கொண்டிருந்தால் தான் அதற்கு மதிப்பு போலும்!

# பத்திரிகா தாமத விஞ்ஞாபனம்.

## I



மஹா விஷ்ணுவின் அவதாரமாகிய ரகுநந்தனர் பட்டாபிஷேகத்தைப் பெறமுடியாமல் பதினான்கு வருஷங்கள் வனத்தில் அலைய நேர்ந்தது. தர்மராஜனாதிய பாண்டவர்கள் அரண்ய வாஸஞ் செய்தனர். சூரிய சந்திரர்கள் இராகு கேதுக்களால் பீடிக்கப்பட்டுச் சில நிமிஷங்கள் வரையில் மறைந்திருக்கிறார்கள். மேற்கூறிய உதாரணங்களைப்போல நமது "அமிர்த குணபோதினி" பத்திரிகைக்கும் எதிர்பாராத விபத்து உண்டாகி, அதனால் கார்த்திகை, மார்கழி, தை மாத ஸஞ்சிகைகளைக் காலத்தில் வெளியிடுவதற்கில்லாமற் போய்விட்டது. இதற்குக் காரணங்கள் பலவாயினும், பொதுவில் கால வித்தியாஸமென்றே கொள்ளத் தக்கது. ஸ்ரீரங்கத்திலிருந்த நாம் சென்னையில் நிகழ்ந்த இவ்விபத்தைச் சில தினங்கட்குப் பிறகு தான் அறிய நேர்ந்து நெஞ்சில் ஸஞ்சலம் விளைத்தது. எனினும், "புலி பதுங்குதல் பாய்வதற்கு" என்னும் பழமொழியை யொப்பத் தாமதமான ஸஞ்சிகைகள் ஈசுவர கிருபையால் இனி அதிசீக்கிரத்தில் பிரசுரமாகி சந்தா நேயர்களும் திருப்தியுறுவார்களென்பது நிச்சயம். மனுஷ்யர்களுடைய மனம் நிஷ்களங்கமாய் உத்தமமானதாக இருக்கும் வரையில் பகவானுடைய கடாக்ஷமும் பூரணமாக நிறைந்திருக்குமென்பது பல இடத்துங் கண்ட அனுபவம்.

தொடர்ச்சியாக மூன்றுமாதங்கள்வரை ஸஞ்சிகைகள் வெளிவராதுபோகவே, சந்தாதாரர்களின் அபிமானமும் ஆவலும் அதிகரித்து நமக்கு எழுதியுள்ள கடிதங்கள் எழுநூற்றுக்கும் மேலாகவே இருக்கும். "இனிமேல் அமிர்தகுணபோதினி வெளிவராதெனில், தங்களை ஆசிரியராகக்கொண்ட வேறெந்தப் பத்திரிகையையாகிலும் ஆதரிக்க அவா மிருந்தவனா யிருக்கிறேன்" என்று எழுதுவாரும், 'அமிர்தகுணபோதினி' வெளிவந்த காலமுதல் தொடர்ச்சியாக அதை ஆதரித்து வந்த என்போன்றவர்கள், அதின் கம்பீரமான பாஷையின் நடையையும், அனுபவ கலாவிலாஸம் மிளிரும் வியாசங்களையும் இலகுவில் மறந்துவிட முடியவில்லை" என்று வரைவாரும், "தென்னாட்டில் இதற்கொப்பான பத்திரிகை வேறில்லையென்றே சொல்லலாம்" என்பாருமாகப் பல்லோர் தங்கள் உள்ளத்து ஆர்வத்தையெல்லாம் தெரிவிப்பாராயினர். அவர்களின் அளப்பரிய அன்பிற்கு நமது பிரேமபூர்வமான வந்தனங்களை ஸமர்ப்பிக்கிறோம்.

பக்கங்களை இனி 64-ஆகக் குறைப்பதைப்பற்றி இப்பத்திரிகையின் சொந்தக்காரர் நமது அன்பர்களை வேண்டிக்கொண்டிருக்கும் விஞ்ஞாபனத்தை இதன் அடியிற் காணலாம். பக்கங்கள் குறையினும் சுவையிற் குறையாதென்பது திண்ணம். ஆசிரிய ஸ்தானத்தில் இந்த இராமாநுஜனின் பிராணன் இருக்குந்தனையும் "அமிர்த குணபோதினி" அதன் சுவை நயத்திலும், அனுபவ கலாஞானத்திலும் மிக்குயர்ந்து இணையற்று விளங்குமென்பது உறுதி. "கடுகு சிறுத்தாலும் காரம்போகுமா" என்ற பழமொழியும் இங்கு பொருந்தும். நமது நெடுங்கால ஊழியமும் திறமும் மெய்மையும் நன்கறிந்த நமது அபிமானிகள் நம்மை எக்காலத்தும் அபிமானித்து நமது முயற்சியை ஆதரித்து வருவார்களென நம்பியிருக்கின்றோம். பகவான் எல்லோருக்கும் மங்களத்தைத் தந்தருள்வாராக.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, பத்திராசிரியர்.

II

தற்போது நேர்ந்த விபத்தின் காரணமாகவும், வேறு பல கஷ்டங்களாலும், காகிதவிலை அதிகரித்துவிட்டதனாலும் பத்திரிகையின் பக்கங்களை எண்பதிலிருந்து அறுபத்திநான்கு பக்கங்களாக மாற்றவேண்டி யிருப்பதை அன்பர்கள் அங்கீகாரம் செய்துகொள்ளுமாறு வேண்டுகின்றோம். இனி, பிரதி மாதமும் 64-பக்கங்களுடன் "அமிர்தகுணபோதினி" வெளிவந்துலாவுமென்பதை விநயபூர்வமாய்த் தெரிவித்துக்கொள்கின்றோம்.

பத்திரிகையின் தாமதத்தைக் குறித்து நமக்கு வந்த கடிதங்கள் ஏராளமாய்க் குவிந்துவிட்டமையின், அவற்றிற்கு விடை தருவதற்கு இயலாமல் பத்திரிகையை விரைவில் பிரசுரிப்பதற்கான ஏற்பாட்டைச் செய்யலானோம். ஆதலின், அன்பர்கள் நம்மை மன்னிக்க வேண்டுகிறோம்.

நமக்கு நேர்ந்த விபத்திற்காக நம்மையும் பத்திரிகையையும் அபிமானித்துள்ளவர்கள் மிகவும் வியஸனமுற்றிருப்பார்கள். நம்மீது பொறாமையுள்ள பிரபுக்கள் குதூகலித்திருப்பார்கள். ஆயினும், அன்னவரது மகிழ்ச்சியடங்க, கார்த்திகை, மார்கழி ஸஞ்சிகைகளை ஒன்றுசேர்த்து இரட்டை ஸஞ்சிகையாக இப்போது வெளியிட்டுள்ளோம். இதேவிதமாக தை, மாசி ஸஞ்சிகைகளும் இரட்டை ஸஞ்சிகையாக மாசிமாதம் 20-ம்தேதிக்குள் வெளியாகும். பங்குனிமாத ஸஞ்சிகை வழக்கம்போல் பங்குனி மாதம் முதல் தேதியில் பிரகடனமாகிவிடும்.

ஆகவே, நம் அன்பிற்கினிய சந்தாநேயர்களனைவரும் நம்மையும் நமது பத்திரிகையையும் என்றும் அபிமானித்து ஆதரித்து வருமாறு பிரார்த்திக்கின்றோம்.

தி. இராஜகோபால் முதலியார், புரொப்ரைட்டர்,
"அமிர்த குணபோதினி" ஆபீஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை.

# காளிதாஸர்



காளிதாஸர் என்பவர் ஆறாம்நூற்றூண்டின் மூற்பகுதியில் விக்கிரமாதித்தரின் ஸமஸ்தானத்தில் கவிமழை பொழிந்த நவகுஞ்சரங்களிற் சிரேஷ்டர். இவர் பிரபந்தங்களும் நாடகங்களும் அநேகஞ் செய்து அழியாக் கீர்த்தி பெற்ற ஒரு நிபுணர். இவர் செய்த நாடகங்களில் தற்காலம் பிரசித்தியாயிருப்பன சாகுந்தலம், விக்கிரமோர்வசி என்னும் இரண்டே. அவற்றிற் சாகுந்தலத்தின் மகிமை பரதகண்டந் தவிர ஐரோப்பாக் கண்டத்திலும் துலங்குகின்றது. இந்நாடகத்தை ஒரு நூற்றூண்டிற்கு முன்னர் ஸர்வில்லியம் ஜோன்ஸ் என்பவர் ஆங்கிலேயத்தில் கவியாய் மொழி பெயர்த்தனர். அதன் மூலமாய் மேற்றிசையார் ஸமஸ்கிருத நூல்களின் அருமையையும் பெருமையையும் சிறப்பையும் அறியலாயினர். இந்நாடகத்தைப்பற்றி ஜெர்மனிதேசத்தின் கவிவாணரில் உயர் சிறப்புற்றோங்கிய கீற்றி என்பவர் "இளம் பிராயத்தின் சுகங்களையும்—முதிர்ந்த வயதின் அனுபவங்களையும், ஆத்மாவை எப்பொழுதும் பரவசப்படுத்தும் ஞான விசேஷமெல்லாவற்றையும் அறிய நீ ஆவல் கொண்டாலும், மண் விண் இரண்டையும் ஒன்றாய்த் திரட்டி அதற்கு ஒரே பெயரிட நீ ஆசை கொண்டாலும், அவற்றிற்கெல்லாம் சாகுந்தலமென்ற ஒரு நாமமே யிடுவேன்; அதுவே போதுமானது" என்று திருவாய்மலர்ந்தருளினர்.

ஃ

காளிதாஸர் செய்த காவியங்கள் இரண்டுள. அவற்றில் இரகுவம்சம் என்பது பெருங்கதையாகிய இரகுநாதர் சரிதத்தைச் சொல்லும். மற்றொன்று குமாரசம்பவம். இதில் உமாதேவிக்குச் சிவபெருமான் பேரிலுண்டான காதலைப் பற்றியும், பின்னர் அவர்களின் கூடுதலைப்பற்றியும் காளிதாஸர் மனோரம்மியமாய்க் கற்பித்திருக்கின்றார். மேற்கூறிய இரண்டு நாடகங்களையும், இரண்டு காவியங்களையும் தவிர, காளிதாஸர் அநேக சிறு பிரபந்தங்களையும் செய்தனர். அவற்றில் மிகச் சிறந்ததும், மிக்க ஆநந்தத்தை விளைப்பதும் மேகதூதம் ஒன்றே. இப்பிரபந்தத்தில் மேகதூதன் தூது கொண்டு போகும் பொழுது எம்மார்க்கமாய்ச் செல்ல வேண்டுமென்று யட்சன் சொல்லுவதில், விந்தியமலை முதல் இமாலய பருவதம் வரையுள்ள தேசங்களை ஒன்றின் பின் ஒன்றாய் மதுரகவிகளால் வரைந்திருக்கின்றனர். இக்கவிகளில் அமைத்திருக்கும் கற்பனாலங்காரங்களை வேறு எத்தேசத்து நூல்களிலும் காண்டலரிது என்று உறுதியாய்ச் சொல்லலாம். இத்துணைச் சிரேஷ்டரான இந்த மகா கவியின் அந்திய காலம் எவ்வாறு நேர்ந்ததென்பதைக் குறித்து நிச்சயமான முடிவுடன் எவராலும் சொல்லக்கூடவில்லை. "விநோத ரஸ மஞ்சரி" யில் இவரது சரித்திராமிர்தத்தை விரிவாய்க் காணலாம்.

---

பள்ளிக்கூடத்தில் கஷ்டப்பட்டுப் படித்த பாடங்களில் முக்கால் பாகம் பிறகு பிழைக்கிற காலத்தில் உபயோகப் படுவதில்லை. அறிவுப் பயிற்சிக்கே படித்ததாகி, பிழைக்கும் படிப்பு வேறே கற்க வேண்டியதாகிறது.

# மனோபலத்தின் மகிமைகள்.



சிருஷ்டி மர்மங்களெல்லாவற்றிலும் மிகவும்இரகசியமானவை மனோமர்மங்கள். பஞ்சபூதங்களினால் ஆக்கப்பட்ட இம்மானவ சரீரத்தினுள் ஏதோ ஒரு சக்தி குடி கொண்டிருந்து, மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் ஐம்பொறிகளினால் வெளியுலகத்துஞானத்தைக் கிரகித்துப், புத்திக்கும் சுகதுக்க முதலியவற்றிற்கும் இருப்பிடமாய், காரியகாரணத்துக்கு மூலமாயிருப்பதாகப் பிரதி நிமிஷமும் நமக்கு நன்கு புலப்படுகின்றது. இது, தலையிலுள்ள மூளை, அதனுடன் சம்பந்தப்பட்டிருக்கும் நரம்புகள்—இவற்றின் குணமென்றும், சரீரம் நசித்த பின்னர் அதுகூட லயப்படுமென்றும், சிலர் வசனிக்கிறார்கள். மற்றுஞ் சிலர் மனம் தனிப்பட்டபொருளென்றும், சரீரம் நாசமடைந்த பிறகு ஆத்துமா வடிவமாய் அது நிலைபெற்றிருக்குமென்றும் எண்ணுகிறார்கள். இவ்விஷயம் எப்படியாயினும், தேகத்தில் பிராணனுள்ளவரைக்கும் மனத்தின் மகிமை அநேக விதங்களாய் நமக்குத் தெரிய வருகிறது. ஃ

மனோ பலத்தினால் மகா அர்புதமான காரியங்களநேகத்தைச் செய்யலாம். ஜனவசிய மிருகவசியங்களுக்கும், செய்யச் சாத்தியப்படாக் காரியங்களைச் செய்வதற்கும் இதுவே முக்கியமான கருவியாயிருக்கிறது. இம் மனோ பலமென்னப் பட்டது, சூக்ஷ்மதிருஷ்டியினாலும், தியானத்தினாலும் உண்டாகும். ஜபங்கள், பட்டினிகள், யோகங்கள் முதலியவை அசைவில்லாத் தியானத்துக்கு வழிகளே யன்றி வேறல்ல. ஆங்கிலேய பாஷையில் "மெஸ்மரிஸம்" என்று சொல்லப்படும் சக்திக்கு மனோபலமே மூலசாதனம். இச்சக்தியைச் செவ்வையாய் அப்பியசித்தவர்கள், எவரையாவது எதிரில் உட்கார வைத்துக் கொண்டு,கொஞ்சநேரம் அவருடைய கண்களுள் குறுவிழிகளுடன் உற்றுப் பார்த்துப் பிற்பாடு அவருடைய முக முதல் கீழே அடிகள் வரைக்கும் கை விரல்களுடன் மந்திரித்ததுபோலத் தடவியும் விசிறியும் அவரை உறங்கச் செய்வர். இதுவே யன்றி, அவ்வித நித்திராவஸ்தையிலிருக்கும் பொழுது அவர் மூலமாய் அநேகமான விசித்திர காரியங்களையும் செய்விப்பர்.

ஃ

கண்கள் திறக்க வொண்ணாது, எங்கே திறந்து பார் பார்ப்போம்—என்று அவனுடன் மெஸ்மர்காரகன் சொல்லியக்கால், எவ்வளவு முயற்சி செய்த போதிலும் அவன் கண்களைத் திறக்கமுடியாதவனாகவே இருப்பான். அதோ பார், உன்னுடைய துணி எரிவுண்டு போகிறது என்று சொன்னால் அவன் தடுமாற்ற முற்றவனாய் வஸ்திரங்களை யவிழ்த்துப் போடுவான். அதோ பார், ஏரி காண்கிறது, நீந்து என்றால், நீந்துவது போல் கால் கைகளை விரித்து நீச்சு போடுவான்.

---

ராஜி முயற்சி பலன் தருமா என்பது ஒருவரை யொருவர் ஏமாற்றம் பார்ப்பதைக் குறைத்துக் கொள்வதைப் பொறுத்தும், மாமியும் மருகியும் மனமொத்து விட்டுக் கொடுப்பதை யனுசரித்தும் இருக்கும்.

உன் காலில் பாம்பு சுற்றிக் கொண்டிருக்கிறது என்று சொன்னபொழுது, பயப்பட்டழுது கொண்டு பாம்பை யிழுத்தெறிவதற்காகப் பிரயத்தினப் படுவான். பானகமென்று சொல்லி உப்பு நீரைக் கொடுத்தாலும் குடித்துத்திருப்தியடைவான். உன் கையில் பழம் இருக்கிறது தின்னு என்றால், மெய்யாகப் பழம் தின்பது போலவே தின்று சந்தோஷப்படுவான். நீ தெருவில் திரியும் நாயென்றால், நாய்போல் குலைக்கத் தொடங்குவான். இவ்விதமான சொப்பனுவஸ்தையில் எந்த வழி காட்டப்படுமோ அதின் வழியே நடப்பான். இறுதியில் மெஸ்மரிப்பவன், அவனுடைய அடிகள் முதல் மூகம் வரைக்கும் விரல்களுடன் மேற்புறமாய் விசிறவே, அவன் துயிலெழுந்து, முன்னே நடந்த தொன்றுமறியேனென்று சொல்லுவான்.

ஃ

மெஸ்மரிப்பவனது மனோபலத்தினாலும், மெஸ்மரிக்கப் படுபவனது மனம் உட்படுவதனாலும், காணக் காண அவன் கண்கள் களைத்து மூடுண்டு போவதினாலும், முதலில் நித்திராவஸ்தைக்கும் பிறகு சொப்பனுவஸ்தைக்கும் வழியேற்படுவதாகக் காணப்படுகின்றது. மெஸ்மரிஸவாதியினுடைய விரல்களினின்று ஒரு விதப்பட்ட ஆகருஷணைச் சக்தி எதிராளியிடத்துப் போய்ப் பாய்கிறதென்றும், நித்திராவஸ்தை அதன் மகிமை யென்றும் சிலர் செப்புவார்கள். எந்தக் காரணத்தினால் உண்டான போதிலும், நித்திராவஸ்தையும் சொப்பனுவஸ்தையிற்போல நடவடிக்கைகளும் உண்டாவது நிச்சயம். மெஸ்மரிக்கப்படுபவன் அதிகமான மனோபலமுள்ளவனான பொழுதும், அவன் தன் மனத்தை உட்படுத்தாமல் மெஸ்மரவாதியைத் நிக்கரித்து இருக்கையிலும் நித்திராவஸ்தை யுண்டாக மாட்டாது. தூரத்திலிருப்பினும், மனத்தினில் உத்தேசத்தை மாத்திரம் நிறுத்திக்கொண்டு இதரர்களை மெஸ்மரிக்கும் மகா வல்லமை சிலருக்கு உண்டென்றும் சொல்லுவார்கள். ஆயினும் அப்படிப்பட்ட மகா புருஷர்கள் இதுவரையில் காணப்படவில்லை.

(தொடரும்.)

---

## தனிமையின் விசேஷங்கள்.

தனிமையில் இன்பமுமிருக்கிறது; துன்பமும் இருக்கிறது; ஏகாந்தமான ஓய்வும் இருக்கிறது; இளைப்பாறுதலும் இருக்கிறது; பல பல சிந்திக்க—எழுத வசதியும் இருக்கிறது; தானாகத் தன் துயரத்திற்குக் கதறித் தணிந்து ஆறுதற்கு வழியும் இருக்கிறது; இறைவனைச் சிந்திக்க இடமுமிருக்கிறது; தனியிடத்தே காதலும் மீற—நாணமும் விலகி மறைய—ரதிசுகாநுபவமும் இருக்கிறது. கடைசியில் தன் சவக்குழி யிருப்பதும் தனியிடத்திலேயே!

# சுயமரியாதை இயக்கம்.

("மாடர்ன் ரிவ்யூ" பத்திரிகையின் அபிப்பிராயம்.)



மக்களுக்குள் எப்பிரிவினராயினும் சுயமரியாதையைப் பெற விரும்புவரேல் அதற்கு ஒவ்வொருவரும் ஆதரவளிக்க வேண்டியது அவசியமாகும். ஆனல் "சுயமரியாதைக்காரர்"களின் தீர்மான விஷயத்தில் நாம் பின்வருமாறு நினைப்பது தவருயிருந்தால் திருத்த வேண்டுமாய்க் கோருகிருேம்.

தென்னிந்திய சுயமரியாதை இயக்கத்தார் சொல்லும் எல்லாக் கொள்கைகளிலும் நியாயமிருக்கின்றதென்று நம்மால் ஒப்புக்கொள்ள முடியவில்லை.

விருதுநகர் மகாநாட்டின் தலைவர் திரு. ஆர். கே. ஷண்முகம் அவர்கள் பேசியதாக நமக்கு எட்டிய செய்தியில்,

இந்தியாவில் மதம் என்று சொல்லப்படும் பலம் பொருந்திய ஸ்தாபனம் மக்கள் முற்போக்கிற்குத் தடையாகயிருந்து வருகின்றது என்றுபேசியிருக்கின்ருர்.

இதை அனுசரித்து மதங்கள் மறையவேண்டும் என்பதாக ஒரு தீர்மானமும் அம்மகாநாட்டில் செய்யப்பட்டிருக்கிறது. இதிலிருந்து சுயமரியாதைக்காரர்களின் நோக்கம் தெளிவாக விளங்குகின்றது.

திரு. ஷண்முகம் இந்தியாவின் நிலையைப்பற்றிப்பேசியதால், இந்தியாவின் பண்டைகால மத நிலையைப் பற்றிச் சற்று ஆராய்வோம்.

## முற்காலத்தில்

'வேதங்களை ஏற்படுத்திய ரிஷிகளும், அது யாருக்கு ஏற்படுத்தப்பட்டதோ அவர்களும், பிறவியில் பிராமணர்களா யில்லாமலிருந்தும் அனைவராலும் பிராமணர்கள் என்றே கருதப் பட்டிருக்கின்ருர்கள்.

பிரம்மத்தைவழிபடுபவர்கள்என்ற காரணத்தாலே பலர் பிராமணரானுர்கள். கீதாச்சாரியாரும் கீதைகேட்டவரும் பிராமணராகக் கருதப்பட்டார். ஆதலால் மக்கள் சீர்திருத்தமடைய அக்காலத்தில் மதம் தடுக்கவில்லை.

## மத்தியகாலத்தில்

புத்தால் புத்த மதம் ஜாதி முறையைத் தகர்த்தது. நானக்கரும் குரு கோவிந்தரும் தாழ்ந்தோர்களை

---

கோயிலில் உள்ள சாமிகளுக்கு மாமிகள் அர்ச்சகர்களே. அவர்கள் வைத்ததே சட்டம். அவர்களுக்கு அதுவே ஒரு ஜீவனமாதலின், அவர்களுக்குப் பணம், காசு தருவதில் புண்ணியமொன்று மில்லை. அவ்விதம் தருவதை அவர்கள் செய்த வேலைக்குக் கொடுக்கும் கூலி யென்றே கருதவேண்டும். அதைக் கடவுள் பேரால் செய்து விட்டு நாம் விலகி விடுவோம்.

உயர்த்தி அவர்களைச் சகோதரர்களாக்கினார்கள். வங்காளத்தில் சைதன்னியர் முஸ்லீம்கள் உள்படப் பலரை ஜாதி மத பேதமின்றி சிஷ்யராக்கிக்கொண்டார். கபீர்தாஸ் பல உயர்ந்த உபதேசங்களைச் செய்திருக்கிறார்.

### தற்காலத்திலும்

ராஜாராம் மோகனராய் பிரம்ம சமாஜத்தை உண்டாக்கினார். கேசப் சந்திரசேனர் அதை விர்த்தி செய்தார். ஜாதியை விடவேண்டு மென்றும் சொன்னார். தயானந்த சாஸ்வதி ஆரிய சமாஜம் உண்டாக்கினார். ஈஸ்வர சந்திர வித்தியாசாகரர் விதவா விவாகத்தைப் புகுத்தினார். வீரேசலிங்கம் பந்துலு சமூக சீர்திருத்தம் செய்தார் விவேகானந்தர் அரிய உபதேசங்களைச் செய்தார். மகாத்மா காந்தி பிராமணர் பிராமணரல்லாதாருக்கும் ஒரே மாதிரி போதிக்கிறார். ரவீந்தா நாதர் ஒரு பெரியார். இவர்கள் எல்லோரும் செய்த காரியங்கள் மத வுணர்ச்சியை நீக்கிச் செய்யப் பட்டவைகளல்ல. இப்படியிருக்க, இனி மத நம்பிக்கையில்லாவர்கள் செய்த காரியம் என்ன என்பதை யோசனை செய்து பார்க்கட்டும். சுயமரியாதைக் காரர் ருஷியாவைப் பின்பற்றுவதாகத் தெரிகின்றது. அங்கும் மதம் அடியோடு அற்றுப்போகவில்லை.

("குடியரசு")

## விதவை மணம், கலப்பு மணம் சரியா?

எல்லாம் பேச்சில் சரிதான். தீர்மானம் செய்ததும் சரிதான். துணிந்த துணிவும் சரிதான். விவாகத்திற்குப் பின் அதன் பயனாக உதிக்கும் மக்களுக்கு அதிலும் பெண் குழந்தைகளுக்கு எங்கு—எந்த ஜாதியில் வரன் தேடுவது? எவர் மணக்க சம்மதிப்பார்? வேளாளச் செட்டியார் வெங்கடேசராவின் பெண்ணை மணமுடித்து மூன்று பெண்களை ஈன்றால், வெங்கடேசராவின் வகையாரேனும் வேளாளச் செட்டியாரின் வகையாரேனும் அப்பெண்களை மணந்து கொள்ளத் தயார் என்றால் துணியலாம் தான். அந்தத் துணிவு காணாதபோது, ஏராளமான சொத்து படைத்திருந்தால் அதற்கு ஆசைப்பட்டாவது எவரேனும் வரலாம்; அவர் கழுத்தில் கட்டலாம். முதலில் இதற்கு ஒரு முடிவு செய்துகொண்டு பிறகு விவாகம் துணிவது மேலாகும்.

ஆறு இல்லா ஊருக்கு அழகு பாழ் என்கிறார்கள். அந்த ஆறே பல ஊர்களைக் கொண்டுபோய் விடுகிறது. ஒரு புத்திரன் வேண்டுமென்று எவ்வளவோ நோன்பு நோற்கிறார்கள். அந்தப் புத்திரனாலேயே அந்தக் குடியும் கெடுகிறது. தனக்குத் தாய் இல்லை யென்று ஒருவன் புலம்ப, மற்றொருவனோ தன் தாயால் எத்தனையோ அவமதிப்பும் எண்ணற்கரிய துன்பங்களும் அடைந்து ஐயோ என்று பிரலாபிக்கிறான். ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு குறையுண்டு.

# அத்தி மரம்



அத்திமரத்திலுண்டாகும் ஒவ்வொரு வஸ்துவும் பயனுள்ளதாகவே இருக்கின்றது. இதில் உழலத்தி, மலையத்தி, சீமையத்தி, நீரத்தி, கொடியத்தி, கல்லத்தி, பேயத்தி, நல்லத்தியென எழெட்டு வகைகளுண்டு. இவ்வத்தி விதையோ சிறியதாக விருந்தும், முளைத்துச் செடியாகி இலைகள் அடர்ந்து பெரிய மரமான பின்பு மேற்படி இலைகள் சிறுத்துக் காணும். இம்மலர்களை எவரும் கண்டதில்லை. யாவர் கண்களுக்கும் புலப்படாமல் மலர்ந்து மலர்ந்த தட்சணமே பிஞ்சாகிவிடுமென்றுஞ் சொல்கிறார்கள். சாதாரணமான நல்ல அத்திப்பிஞ்சானது மூலவாயு, கிராணி, வயிற்றுக் கடுப்புள்ளவர்களுக்குப் பத்தியக் கறியாக உதவும். அத்திக்காய் சமைத்துச் சாப்பிடும்படியானதே. அது மேக சாந்தி செய்யும் நல்ல பதார்த்தமாகக் காணப்படுகின்றது.

ஃ

அத்திக்காயைச் சிலர் ஊறுகாயாகப்போட்டும் வற்றலாக்கியும் உபயோகிக்கின்றார்கள். அத்திப்பழமோ அறியாப் பிள்ளைகளும் விரும்பித்தின்னத்தக்க மாதுரியமும் மிருதுவுமுள்ள பழமாக இருக்கின்றது. இந்தப் பழமானது உட்சூட்டைத் தணித்துத் தேகத்திற்கு மிகவும் குளிர்ச்சி தரும். அத்திப்பாலோ பித்தம், நீரிழிவு, முதலான சில வியாதிகளை நிவர்த்தி செய்யும். அம்மரத்தின் வேரில் இறக்கப்பட்ட கள்ளிற் சீனிச் சக்கரையையாவது பேயன் வாழைப் பழத்தையாவது கலந்து தினமுஞ் சூரியோதயத்திலுண்டுவர அந்தி மேகம், உட்சூடு, மூர்ச்சை, தாகம் இவை முதலாகிய வியாதிகள் நிவர்த்தியாகும்.

ஃ

அத்திப்பட்டையானது மூத்திரத்தோடு உதிரம் கலந்துவிழும் வியாதிக்கும் பெரும்பாடுக்கும் கஷாயத்திலாவது லேகியத்திலாவது சேர்த்துக் கொடுக்க மேற்படி நோய்கள் தீரும். மேலும், இப்பட்டையைச் சூரணஞ் செய்து நல்லெண்ணெயிற் கலந்து பிளவை முதலானவற்றிற்குப் பற்றும் போடலாம். அத்தியிலை வயலுக்குப் போடுந் தழையாகவும் உதவும். அத்திமர அடிக்கட்டையை இந்துக்கள் கோவில் அஷ்டபந்தனக் கும்பாபிஷேகத் திருப்பணி நடத்துங்காலங்களில் விக்கிரகமாக ஸ்தாபித்து மூர்த்தி பந்தனஞ்செய்து பூசிப்பதுண்டு. இஃதன்றி வாகனங்கள் செய்யவும் அத்திக்கட்டைகள் உதவும். அத்திமரப் பலகைகளைச் சிலர் கதவுகளுக்கு உபயோகிப்பார்கள். மற்றுஞ் சில்லரை வேலைகளுக்கும் மேற்படி பலகைகள் உதவும். ஆதலின் இம்மரத்தை மிகவும் பிரயோஜனமுள்ள மரமென்றே சொல்லலாம்.



---

சுலபமாகப் பெரிய மனிதர்களாகிப் பெயர் பெறுவதற்கு வழி எப்படியென்றும், அதற்கு யார் யாரைப் பிடிக்கவேண்டுமென்றும் சிலர் வெகு நன்றாகத் தெரிந்து அதில் எம். ஏ. பாஸ் செய்து தேறியு மிருக்கிறார்கள்.

# அதிர்ஷ்ட சக்கரம்



அதிர்ஷ்டத்தின் மீது யாருக்குத்தான் கண்ணில்லை? அதை யார்தான் எதிர்பாராதார்? தெருவில் காலணா கண்டெடுத்தால் அது ஒரு பெரிய அதிர்ஷ்டம்! அதைத் தவறிப்போட்டு இழந்தவன் எவ்வளவு தேடிவாடி வருந்தினானோ— அதைப்பற்றி விசாரிப்போர் கிடையாது. பக்கத்து வீட்டார் தங்கள் இல்லத்தைப் பழுது பார்ப்பதற்காகத் தங்கள் மேஜையை நமது வீட்டில் சில நாட்களுக்குப் போட்டு வைக்கிறார்கள். அந்த மேஜையை நாம் உபயோகித்துக் கொள்ளுகிறோம். ஏராளமான வி. பி. ஆர்டர்கள் வருகின்றன. நித்த நித்தம் மணியாடர்கள் குவிந்தவாறேயுள்ளன. உடனே என்ன நினைக்கிறோம்?—ஓ! இது "அதிர்ஷ்ட மேஜை" என்று சொல்லி விடுகிறோம். மேஜையின் அதிர்ஷ்டத்தால் தான் நமக்கு இவ்வளவு பணம் குவிந்தது என்று நமது எண்ணம். பிறகு வீடு பழுது பார்த்தானதும் மேஜையைப் பக்கத்து வீட்டார் கொண்டுபோய் விடுகிறார்கள். மேஜை நம்மை விட்டுப்போனதும் நமது பண வரவும் வியாபாரமும் குறைந்து விடுகிறது. மேஜை போனதால் அதிர்ஷ்டமும் போய்விட்டதென்கிறோம். பிறகு சில மாதங்கள் பொறுத்து அடுத்த வீட்டார் நமக்கே அந்த மேஜையை விற்றுவிட, நாமும் வெகு ஆவலாக வாங்குகிறோம். அந்த மேஜை வந்த நாள் முதல் ஒரு மணியார்டரையும் காணோம்! ஒரு வியாபாரமும் நடக்கவேயில்லை. வரவேண்டிய பணமும் தவறிப்போகிறது. கையிற் பணமின்றிக் கடனும் வாங்கி எங்கும் கடன் மயமாகி விடுகிறது. குழந்தைக்குக் காலணா தருவதற்கும் பின்வாங்க நேருகிறது. வீட்டுச் செலவுகளையே சிக்கனத்தில் மாற்றவேண்டி வருகிறது. இன்னும் நீளச் சொல்வதில் என்ன பயன்? மனைவியின் நகைகள் பாங்கியில் அடகுக்கும் போகின்றன! முன்பு அதிர்ஷ்ட சுமங்கலியாக இருந்த மேஜை இப்போது துரதிர்ஷ்டம் பிடித்த அமங்கலி மேஜையாக மாறி விடுகிறது! அது நம்முடைய மேஜையாகவே ஆகிவிட்டபடியால் அடுத்த வீட்டுக்காரரை எடுத்துக்கொண்டுபோ என்றும் சொல்வதற்கில்லை. அப்போது தூர இருந்து நமக்கு இரவலாகக் கிடைத்தபோது அது அதிர்ஷ்ட மேஜை! இப்போது நமக்கே சொந்தமாகி நமது வீட்டிற்கே வந்து விட்ட பிறகு அது துரதிர்ஷ்ட மேஜை!!

ஃ

அதிர்ஷ்டம் ஒரு சக்கரம் போல் சுழலக் கூடியதுதான். சக்கரத்தில் மேல் பாகம் கீழும், கீழ்பாகம் மேலும் வரும். அப்படியே அதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமும் சுழன்று வரலாம்.

---

இரவில் அமைகிற வேலைக்குத்தான் அபூர்வமான ஏகாந்தமும், அளவிடற்கரிய உற்சாகமும், விசேஷித்த வல்லமையும் வெகுகாலம் பெயர் நிற்கக்கூடிய பிரக்யாதியும், எல்லாவிதமான சிறப்புகளும் உண்டு. இரவு வேலையில் தான் எழுதபுத்திதீக்ஷண்யம் வெகு உன்னதமாய்ப் பிரகாசிக்கின்றது. பழக்கம் நித்திரையை விலக்கி இரவைப் பகல் போலாக்கிப் புது உருவாகி விடுகிறது.

இன்ன வேஷ்டியை யுடுத்திச் சென்ருல் வெற்றி கிடைக்கும் என்பதும், குறிப்பிட்ட மற்ருெரு வேஷ்டியைத் தரித்துச் சென்ருல் போனகாரியம் பாழ்தான் என்றும் என் நண்பரொருவர் அநுபவமாய்க் கூறியதையும் கேட்டிருக்கிறேன். உடுத்திக்கொள்ளும் துணிமணிகளில்கூட அதிர்ஷ்ட பேதம் புகுந்து கொண்டிருப்பது ஆச்சரியம்! ஃ

ராகு காலங்களில் அதிக துரதிர்ஷ்டம் வாய்ந்தது ஞாயிற்றுக்கிழமையில் வரும் ராகுகாலம் என்பது என் அபிப்பிராயம். இதை என் கண்ணெதிர் படாத நண்பர் ஸ்ரீ 'கல்கி'யும் தமது நூலில் எடுத்துக் காண்பித்திருக்கிருர். ஆனுல், அவரது பேரறிவுக்கும் என் சிற்றறிவுக்கும் வெகுதூரம்! அவருக்கு எழு வாரங்களின் ராகு காலங்களும் தெரிந்திருக்கும். எனக்கோ ஞாயிற்றுக்கிழமை ராகு காலம் மட்டுமே தெரியும். மற்றக்கிழமைகளில் எப்போது ராகுகாலம் வருமோ அறியேன். அதை அறியவும் நான் முயன்றதில்லை. ஒரு ஞாயிற்றின் ராகு காலத்தை மட்டும் அறிந்து நான் படுகிறதொல்லை போதாதா? இனி, பாக்கி ஆறு கிழமைகளின் ராகு காலத்தையும் அறிந்து நான் என் வேலைகளைக் கெடுத்துக் கொள்ளவேண்டுமா? ஒருபோதும் எனக்கு அந்த ஆறு கிழமைகளின் ராகுகாலங்கள் தெரியவர வேண்டாம்! எவ்வளவோ அவசர வேலைகளை அந்த ஞாயிறின் ராகு காலமாகிய 4½-மணிக்குச் சட்டென்று நிறுத்தி விட்டிருக்கிறேன் அந்த ராகு 6-மணிக்குத் தொலைந்த பிறகே என் வேலைகளைத் தொடங்குவது வழக்கம். ஒரு உதாரணம் சொல்லுகிறேன். என்னிடம் ஒரு நாவலை விற்பனை செய்ய ஒரு புது நூலாசிரியர் வெள்ளிக்கிழமையன்று வந்து கொடுத்து வாசித்துப் பார்க்குமாறு வேண்டினுர். நான் நாவல்களை விலைக்கு வாங்குவதில்லை யென்றும், வாங்கி மோசம் செய்வதுமில்லை யென்றும், நான் மற்றவர்கள் போகாத ஒரு கோணல் வழியில்—குறுக்குப் பாதையில் புது விதமாகப் போகிறதென்றும், அந்தக் கோணல் வழியில் ஒரு புது ருசியைக் காண்பித்து மற்றவர்களும் அதைப் பின்பற்றும்படி செய்வதே என் வழக்கமென்றும், மற்றவர்களின்வழிமுறைகளைத் தழுவுவதில்லை யென்றும், ஆனுல், என்னிலும் மேலான அறிவு படைத்த பெரியோர்களிடம் ஒரு நவீன விஷயம் தெரியவரின் அதில் என்னைப் பழக்கிக்கொள்வது என் இயல்பென்றும் சொன்னேன். நான் எவ்வளவு கூறியும் அவர் "நீங்கள் என் நாவலை வாசித்துப் பார்ப்பீர்களானுல் எவ்விதமும் அதை வாங்கி விடவே ஆசைப்பட்டு என்னைக் கெஞ்சுவீர்கள்" என்றும் வற்புறுத்தித் தந்து சென்ருர். நான் அன்று முழுமையும் என் வேலைகளை நிறுத்தி 400—பக்கமுள்ள அந்த நாவலை முற்றிலும் வாசித்து முடித்தேன். நானே பழங்காலத்துப் பேர்வழி. என்னை மயக்குவது கஷ்டம். இப்பொழுது விலைக்கும் அகப்படாத "பிரேம கலாவத்தியம்" என்ற நாவலையும், வேறு இரண்டு ஆங்கில நாவல்களையும் துணைகொண்டு எழுதியதாக இருந்தது. பாவம் எவ்வளவோ பாடுபட்டுத்தான் எழுதியிருந்தார். ஆயினும், படித்தளவிலேயே இவர் எதிலிருந்து எடுத்தார் என்பது ஆங்கிலம் அறியாதார்க்கும் விளங்கி

---

சிலருக்குத் தங்கள் பெயரையோ வியாபாரத்தையோ பத்திரிகையில் அது ஒரு பிரபல சமாசாரமாக வந்து விளம்பரமாகும்படி செய்துவிடுவதற்கான வழி வகைகள் நன்கு தெரிந்திருக்கிறது.

விடும். ஏனெனில், அந்த இரு ஆங்கில நூல்களும் மூவரால் மூன்றுவித பெயர்களுடன் தனித்தனியேதமிழில் மொழிபெயர்த்தாகி விட்டன.

ஃ

வெள்ளி, சனியும் போயிற்று. ஞாயிற்றுக்கிழமையும் வந்தது. மாலை 4½-மணி ராகு காலம் நெருங்கவே என் எல்லா வேலைகளையும் ஒரு மூட்டை கட்டிவிட்டு உட்கார்ந்திருந்தேன். கடியாரமும் அரைமணி அடித்து ஓய்ந்தது. அந்த சமயம் 'நாவல்' தந்து சென்ற ஆசிரியர் வருவதைக் கண்டேன். ராகு கால சந்திப்பு என்ன பலனைத் தருமென்பது என் மனதிற்குள் விளங்கிவிட்டது. அடடா! இவர் சற்று முன்பு 4-மணிக்கு வந்திருக்கக் கூடாதா என்று எண்ணினேன். அவரும் வந்து அமர்ந்தார். 'என்ன ராகுகாலத்தில் வந்தீர்களே! அதிலும் ஞாயிறு ராகு காலம் மிகப் பொல்லாத தாயிற்றே' என்றேன். அவர் முகமும் வாடிற்று. பின் வந்த காரியம் வெற்றியில்லாமல் தமது நாவலைத் திரும்பப் பெற்றுச் சென்றாரென்று இதைச் சுருக்கமாய் முடித்து விடுகிறேன். ராகு காலங்களை மட்டுமல்ல, சகுன காலங்களைக்கூட அதிர்ஷ்டம்—துரதிர்ஷ்டம் இவற்றுடன் சேர்த்திருக்கிறார்கள். அவ்வளவுடன் போகவில்லை. ஏழு கிழமைகளையும், நக்ஷத்திரங்களையும் இன்னும் என்னென்னவோவற்றை யெல்லாம் இந்த அதிர்ஷ்டவகைகளுடன் கூட்டி இணைத்து முடி போட்டிருக்கிறார்கள். இவற்றின் பலாபலன்களை உற்றுக்கவனிப்போர் தான் துன்ப மடைகிறார்களே யன்றி, அவற்றை லக்ஷியம் செய்யாதவர்களும், என்னைப்போல அந்த அறிவே யில்லாதவர்களும் துன்பமடைவதில்லை. ஒருகால் துன்பமடைந்தாலும் அது தங்களின் செயலால் என்று நினைப்பதே தவிர, இந்த ராகு—சகுனம்—கிழமை—நக்ஷத்திரங்களின் மேல் ஏற்றித் தோஷம் சொல்வதில்லை. ஃ

சகுனங்களைக் கவனியாமல் நடப்பவர்க்கு அநேகமாய்க் கெடுதி யுண்டாவதில்லை. கேடு கெட்ட நாளாகிய செவ்வாய்க்கிழமையைக் கவனியாதவர்களுக்கு எந்தத் துன்பமுமில்லை. செவ்வாய்க்கிழமைக்குப் பயந்து அன்றைய பிரயாணத்தை நிறுத்திப் புதன் கிழமை பிரயாணம் செய்தேன். அதன் முடிவு என்ன தெரியுமா? புயல்காற்றில் நெட்டை வண்டியாகிய தென்னிந்தியா ரயில்வண்டி சிக்கிக் கொண்டு பாக்கம் ஸ்டேஷனில் இரவு 10-மணிக்கு விழ, நானும் விழுந்து அலங்கோலமானேன். செவ்வாய்க் கிழமையே புறப்பட்டிருந்தால் இத்தத் துரதிர்ஷ்டம் நேர்ந்திராதன்றோ? அதிர்ஷ்ட நாளைக் கவனிக்கப்போய்த் துரதிர்ஷ்ட நாளில் சிக்கிக்கொண்டேன். ஃ

சோதிடம் பார்த்தால் அதிர்ஷ்டம் தெரியுமாம். என் நண்பரின் ஜாதகத்திலோ லக்ஷாதிபதி என்றிருக்கிறது. நாளைக்கும் அவர் பிக்ஷாதிபதியே! அவருக்கு சந்ததியே இல்லையென்று ஜாதகத்திலிருக்கிறது. அவருக்கு இப்பொழுது நான்கு சந்தானங்கள் இருக்கின்றன; நான் ஜாதகத்தை எப்படி நம்புவது? தன்

---

நாம் வந்த விருந்தினருக்காகப் பலகாரம் காபி முதலியவைகட்குப் பத்தரை அணா செலவிட்டால், விருந்தினர் தாமும் அந்தசமயம் செலவு செய்ததாய்க் காட்டிக்கொள்வதற்காகக் காலணா முருங்கைக் கீரையும், காலணா வாழைப்பூவும் வெகு நயமாக வாங்கி நம்வீட்டில் போடுவார்கள்!

குழந்தைகள் நால்வருக்கும் அவர் ஜாதகமே எழுதவில்லை. ஆனால், பிறந்த நாள், நிமிஷம், வருஷம், மாதங்களை மட்டும் குறிப்பிட்டு வைத்திருக்கிறார். ஜாதகம் பார்த்து நல்லதும் கேட்க வேண்டாம், கேட்டதும் கேட்கவேண்டாம். பகவத் ஸங்கல்பத்தின்படி அவ்வப்போது வருகிற இன்ப துன்பங்களைப் பங்கிட்டு கொள்வோமென்ற தீர்மானத்துடன் இருக்கின்றார். இது சரிதானா?

ஃ

அதிர்ஷ்டசாலிகள் என்போரில் வெகு பேர் துரதிர்ஷ்டசாலிகளாக இருக்கிறார்கள். ஏராளமான சொத்துகளோடு மனைவி கிடைத்தாள்-அங்கே புத்திர பாக்கியமில்லை! தோசை விற்றுக் கொண்டிருந்த பெண் டிப்டிக லெக்டரின் மனைவியானாள்—நாலாவது வருடத்தில் மாங்கல்ய மிழந்தாள்! குமாஸ்தாவாயிருந்தவன் பெரிய முதலாளியாகி விட்டான்—அவன் சொத்துக்கள் அர்பத்நட் கம்பெனியில் போய்விட்டன! சம்பளத்திற்கு உதவி ஆசிரியராக இருந்தவர் அந்தப் பத்திரிகா சாலைக்கே அதிபதியானார். ஒரு எளிய அச்சுக்கோர்ப்போராயிருந்தவர் பெரிய அச்சுக்கூடத்தின் சொந்தக்காரரானார். இவ்விருவருக்கும் ஆயுள் சுருங்கி, இவர்கள் உயர்ந்த நிலையுற்ற ஐந்தாவது வருடத்திலேயே காலமாய் விட்டனர்! இவர்களுக்குப் பிறகு இவர்களின் சொத்துக்கள் விற்கப்பட்டுப் போயின! இத்தகையோரை அதிர்ஷ்டசாலிகள் என்றழைத்துப் பயனென்ன? தனக்குக் கிடைத்த பத்து ரூபாய் சம்பளத்தில் ஏழுரூபாய் செலவிட்டு மூன்று ரூபாயைக் கண்டிப்பாய் மிச்சப்படுத்துகிறவனே அதிர்ஷ்டசாலி யென்று எனக்குத் தோன்றுகிறது. மேலும், இன்னொரு விஷயம்; அதிகமாய் அக்கிரமம் செய்யத் தலைப்படும்போதுதான் எத்தகைய அதிர்ஷ்டமும் சுருங்கி விடுகிறதென்பது பொதுவாகப் பலரிடத்துங் கண்டறிந்த அனுபவம்.

சாப்பாட்டுராமன்.

## பழய நாள் நினைவுகளின் அவதி!

தன் நாயகியோடு முன்பு வந்துசென்ற ஊரில் இப்போது அவள் இவ்வுலகினிலில்லாமல் தான்மட்டும் தன்னந்தனியே புகும்போது, எந்த மாத்தைப் பார்த்தாலும்—இடத்தைப் பார்த்தாலும்—தெருவைப் பார்த்தாலும்—கோயில் குளங்கள் கடைகளைப் பார்த்தாலும்—ஸ்வர்க்கம் சென்றுவிட்ட அவளது நினைவும் பழய ஞாபகங்களும் தோன்றிப் புண்மனத்தினனுய்வமாறி அலறும்படியாகிறது. காட்டில் வெகுகாலம் அன்ன ஆகாரமில்லாமல் கடவுளை நோக்கித் தவம் செய்யும் முனிசிரேஷ்டர்களைவிட, பதியே தெய்வமென்று கருதும் நல்ல கற்புடைய மங்கையர்களே மேலானவர்களாவர். அவர்களைப் பிரிந்த உள்ளமோ—?

# பதப் பிரயோகங்கள்.



நாம் நமது பாஷையை விசுவாசிப்பது உண்மையானால், அப்பாஷையின் பதங்களினுடைய பொருள்களை உள்ளபடி உணர்ந்து பொருத்தமான இடங்களில் அவைகளை அமைக்கப் பழகவேண்டும். ஒரு பையனுக்குப் பாடம் சீக்கிரமாய்த் தெரிந்து விட்டாலும், கேட்ட கேள்விக்கு அவன் சரியாய் உத்தரம் சொன்னாலும், அவனை நல்ல பையன் என்று சிலர் சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்வது சரியா, பார்ப்போம். எவனுக்குப் பாடம் சீக்கிரமாய்த் தெரிகிறதோ அவனைக் கெட்டிக்காரன் என்று சொல்லவேண்டுமே யொழிய, நல்ல பையன் என்று சொல்லக் கூடாது. கெட்டிக்காரத்தனத்துக்கும் நல்லகுணத்துக்கும் வெகுதூரம். நல்லவன் என்பதற்கும் கெட்டிக்காரன் என்பதற்கும் பொருள் வெவ்வேறு. தகாத காரியத்தைச் செய்யாமல், எது தக்கதோ அதைச் செய்கிறவன் நல்லவன் என்று அழைக்கப்படலாம். ஒரு சமயம் நல்ல குணமுள்ளவனுக்குக் கெட்டிக்காரத்தனம் இல்லாமலிருக்கலாம். கெட்டிக்காரத்தனமுள்ளவனுக்கு நல்ல குணமில்லாதிருக்கலாம். எத்தனையோ உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், தொழிலாளிகள் வெகு கெட்டிக்காரர்களாகத் தோன்றினாலும், நல்ல குணமில்லாதவர்களாகக் காணப்படுவதை நாம் பார்க்கின்றோமல்லவா? ஆகவே, இவ்விரண்டு பதங்களின் பேதா பேதங்களை நாம் நன்றாய் உணரவேண்டும்.

ஃ

ஒருவரைப் பற்றி "அவன் இறந்து போனார்" என்று சொன்னால், அது சாதாரணமாக அநுதாபத்துடன் கூறும் சொல்லாகலாம், அவ்விதமின்றி "அவர் மாண்டார்" என்று கூறின், அவர் தொலைந்தாரென்று அவரது மரணத்திற்குச் சந்தோஷப்பட்டுச் சொல்லும் சொல்லாகி விடலாம். ஒரே அர்த்தமுள்ள சொல் இடத்துக்குத் தக்கபடி வெவ்வேறு நிலையில் பொருள் கொண்டு நிற்பதாகின்றது, "அடா தம்பி" என்ற சொல் அன்பின் மிகுதியைக் காட்டுகின்றது. "அடா பயலே" என்னும்போதோ அடா என்ற பதம் இகழ்ச்சியைக் குறிப்பிடுகின்றது, "அடபயலே! குழந்தாய்! உன்னை இத்தனை நாள் பிரிந்திருக்க நேரிட்டு விட்டதே" என்னும் போது அது அன்பு முதிர்ச்சியை விளக்குவதாக மாறி விடுகிறது. "கடனுண்டு வாழாமை காண்டலினிதே" —"கடன் கொண்டும் செய்வன செய்தலினிதே" என்று ஒன்றுக்கொன்று எதிராகச் சொல்லப்படும் பொழுது, அந்தந்த இடத்திற்கேற்றபடி அதனதின் கருத்தை அமைத்துப்

---

சிலர் தாங்கள் பத்திரிகைக்கு எழுதியனுப்பிய விஷயத்தை வெளியிடுவதில்லை. அதை மற்றவர்கள் பார்த்த பிறகு தங்களிடம் வந்து சொல்வதை வெகு பெருமையாய் நினைத்துக் கொள்கிறார்கள். இந்தப் பெருமைக்காரர்களைக்கொண்டு பத்திராசிரியர் தமது பத்திரிகையின் பல பக்கங்களை நிரப்பி விடுகிறார்!

பொருள் கொள்ள வேண்டுமென்று விளங்குகிறது.

ஃ

சில தருணங்களில் யாரைப் பற்றியேனும் அனுகூலமாகப் பேச வேண்டிய இடத்தில், "இன்னாருக்கு நன்றியறிவிக்கிறேன்" என்று சொல்வதற்குப் பதிலாக "இன்னாருக்கு வந்தனமளிக்கிறேன்" என்று சொல்வது தகுதி யுள்ளதல்ல. இந்த வழக்கம் சாதாரணமாக அநேகரிடமிருந்த போதிலும், சில சமயங்களில் அது காதுக்கு வெகு விகாரமாகக் கேட்கிறது. ஓரிடத்திலே ஒரு கனவான் ஒரு விஷயத்துக்கு நூறு ரூபாய் நன்கொடை யுதவினார். அதற்கு சபாநாயகராயிருந்த கனவான்— "இந்த சபைக்கு வந்து நம்மிடம் ஆதரவு பாராட்டி நன்கொடை உபகரித்த கனவானுக்கு நான் வந்தனம் செலுத்துகிறேன்' என்றார். வந்தனம் என்ற பதம் மேலோர்களுக்கே உபயோகிக்கத்தக்க தாகையாலும், அதை நன்றி என்னும் பொருளிலே உபயோகிப்பது சில சமயங்களில் அசம்பாவிதமாக முடிகின்றது என்று ஒரு பிரபல கிரந்த கர்த்தா எடுத்துக் காட்டினார். ஆகவே, "வந்தனம் செலுத்துகிறேன்" என்பதை விட "நன்றி அறிவிக்கிறேன்" என்று சொல்லுதல் மிகப் பொருத்தமுடையதாகும் என்பது அவரது கருத்து. இந்தச் சாமான்ய விஷயத்திலேயே எத்தனை பிழைகள் உண்டாகின்றன பாருங்கள்! பேசப்போனைபோ சாகப் போனையோ என்பது பழமொழி. ஆதலின், இடமறிந்து பதங்களைப் பிரயோகிக்கத் தெரிந்து கொள்வது அவசியமாம்.

## படித்தவர் துயரம்.

வகுப்பு தோறுங் கிறுக்கேற வருந்தி படித்தேன் ;
பிழைக்கும் வழியைக் காணேன் !
பதுப்புறு பல் கைத்தொழிலோ பலசரக்குக்
கடை அறிவோ பயின்றிலேனே !
மிகுந் துன்பப் படுமேன்போல், மிகப் படிக்கச்
செய்தலினும் வியாபாரத்தில்
புகுந்துழைக்கு மளவு கல்வி புகட்டுதிரேல்,
பிழைப்(பு) உண்டு உம் புத்திரர்க்கே.

ஆரியூர்—வ. பத்மநாப பிள்ளை.

அவன் தன் பாத்தியதைகளை அறியாதிருந்த வரையில் அவனை அவமானப்படுத்தியும், அதிகாரம் செய்தும் கர்வித்திருந்தது ஒரு காலம். இப்போதோ அவன் தன் பாத்தியதைகளை உணர்ந்து தலை நிமிர்ந்து விட்டதால் அவனை அல்ப விஷயத்துக்கும் கெஞ்சும்படியாகிவிட்டிருக்கிறது. ஒருவனை எப்பொழுதுமே ஏமாற்றிக் கொண்டிருக்க முடியாது.

# திரவிய உற்பத்தி சாதனங்கள்

திரவிய உற்பத்திக்கு உழைப்பும், சாமான் அல்லது பொருளும் வேண்டும். இவை இரண்டும் இன்றியமையாத சாதனங்கள். பயிர் செய்ய நிலமும் ஆட்களும் தேவை. ரொட்டி சுடுகிறதற்குக் கோதுமை மாவும் ரொட்டிக்காரனும் வேண்டும். இப்படியே எல்லாப் பொருளையும் உற்பத்தி செய்வதில் உழைப்பும் பொருளும் உபயோகமாகின்றன. உழைப்பு இரு வகைப்படும். அவை மன உழைப்பும், தேக உழைப்பும் ஆம். ஒவ்வொரு தொழிலிலும் இவ்விருவகை உழைப்பும் உபயோகப் படுகின்றன. மேஜை செய்வதற்குத் தச்சனுடைய உழைப்பு தேவை. அதைச் செய்வதற்குமுன் அது எவ்விதமாகச் செய்ய வேண்டுமென்று யோசிப்பான். எத்தனை கால் இருக்கவேண்டும் என்றும், எத்தனை அறை யிருக்கவேண்டும் என்றும், அதற்கு இவ்வளவு பலகை செல்லு மென்றும் முதலில் யோசித்துத் தீர்மானிப்பான். இதைத் தான் மன உழைப்பு என்று சொல்லுவது. இது மிகவும் விசேஷமானது. பிறகு தச்சன் வேலையிற் பிரவேசித்து மேஜையைச் செய்து முடிக்கிறான். இது தேக உழைப்பாகும். இவ்விதமாகத் தச்சன் மனதினாலும் தேகத்தினாலும்உழைத்து மேஜையைச்செய்து முடிக்கிறான். ஃ

சில வேலைகளில் மன உழைப்பு அதிகமாய் உபயோகப் படுகின்றது. கடியாரம் செய்வதில் பயன்படுகிற மன உழைப்பு மிகவும் அருமையானது. தீராவியந்திரங்களை உற்பத்தி செய்தவர்களுடைய மன உழைப்புக்கு நேர் ஒன்றுமே கிடையாது. பொருளை நாம் உற்பத்தி செய்வதில்லை; ஒரு பொருளை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்தில் வைப்பதுதான் நம்முடைய உழைப்பு. அப்படி வைத்தபின் அவைகள் சுபாவ குணத்தால் சேர்ந்து புதிய பொருளாய் மாறுகின்றன. ஒரு மேஜையாவதும், ஒரு வீடு கட்டி முடிவதும் இப்படியே. விதையைப் பூமியில்போட்டு ஜலம் விட்டால் அது முளைத்து மரமாகும். இதில் நாம் செய்த தெல்லாம் விதையைக்கொண்டு போனதும், நிலத்திலிருந்து கொஞ்சம் மண்ணை எடுத்து வெளியில் போட்டதும், பின்பு விதையைக் குழியில் வைத்து மண்ணைத்தள்ளி ஜலத்தை அதன்மீது விட்டதுந்தான். இதுதான் நம்முடைய உழைப்பு. ஆகையால், தேக உழைப் பெல்லாம் பொருளை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டு போவதாயிருக்கின்றது. இடம் மாற்றுவதே தேக உழைப்பின் இலக்கணம். அது தவிர வேறில்லை. மனோ உழைப்போ தேக உழைப்பை விட அதிக மகத்துவமுள்ளது. மனோ உழைப்பால் ஒரு தீர்மானத்தைச் செய்துகொண்டு பிறகு அதைத் தேக உழைப்பால் பூர்த்தி செய்கிறோம். இவ்விதம் மனம்—தேசம் இரண்டிற்கும் உழைப்பு தருவதிலிருந்தே திரவிய உற்பத்தி உண்டாகின்றது.

---

ஸ்ரீமான்———அவர்கள் அடுத்த மாதம் தேகாரோக்கியத்திற்காக லண்டனுக்குச் செல்லுகிறார் என்று பத்திரிகைகளுக்குச் செய்தி அனுப்பி, அதுவும் பத்திரிகைகளில் வந்து விடுகிறது. ஆனால், புறப்படுவ தென்பதே கிடையாது. இவ்விதமே தங்கள் பெயர் அடிக்கடி பத்திரிகையில் வரும்படி ஏதேனும் ஒரு வேலை செய்துகொண்டே இருப்பது ஒரு சாமர்த்தியம்.

## ஹிந்தி—தமிழ் விளக்கம்

டீக்—சரி
ஜா—போ
அச்சா—நல்லது
பஹுத் அச்சா—ரொம்ப நல்லது
ஆ—வா
பைட்—உட்கார்
உட்—எழுந்திரு
கா—சாப்பிடு
நை ஜானு—தெரியாது
(B)போல்-பேசு, சொல்லு
ஸுன்—கேள்
தேக்—பார்
படு—வாசி, படி
லா—கொண்டுவா
பானி—ஜலம்
கர்—வீடு

பி—குடி
மதாசா—பாடசாலை
லே—எடு
தே—கொடு
ரஹ்—இரு
தூத்—பால்
இதர்—இங்கே
கியா—என்ன
அல்மாரி—அலமாரி
காம்—வேலை
கித்னா—எவ்வளவு
சடாயி—பாய்
உதர்—அங்கே
கிதர்—எங்கே
கிதாப்—புஸ்தகம்
ஹாம்—ஆம்
ஹாத்—கை

ஹைம்—இருக்கின்றன
ஜப்—அப்பொழுது
குச்—கொஞ்சம்
குர்ஸி—குறுச்சி
நஹி—இல்லை
ஸமீன்—தரை
தமாஷா—விளையாட்டு
மேஜி—மேஜை
சிட்டி—கடிதம்
கலம்—பேனா
காகஸ்—காகிதம்
ச்யா—மை
பஜே—மணி
(C) கப்—எப்பொழுது
தப்—அப்பொழுது

எஸ். இரங்காச்சாரி.

### சிலரது கதி !

மிகு பிரயாசையான தொழிலைச் செய்து, சாகும் பரியந்தம் கஷ்டப்பட்டுச் சம்பாதித்து தன் வாயையும் வயிற்றையும் கட்டிப் பிறருக்கு இட்டு, இவ்வளவு வரினும் செலவாகிப்போய்த் தரித்திரதேவி தாண்டவமாட, போதாதற்குக் கடனும் பட்டுச் செலவு செய்துவிட்டுக் கடைசியில் கெட்ட பேரும் வாங்கிக்கொண்டு போகவேண்டிய தாகச் சிலரின் கதி அமைகிறது ! அந்தோ ! பரிதாபம்!

விவாகம் செய்வித்தனுப்பிய தன் குமார்த்தியை மறுபடியும் போய்க் காண நேரம் கிட்டாமலே இன்று நாளை யெனக்காலம் போக்கிக் கடைசியில் அவளைப் பாராமலே தந்தை மரணமாவது என்ன பரிதாபம் !

வியாசங்களை நன்கு எழுதுதற்குக் கற்றுக் கொள்ள விரும்புவோர் இப்போதும் விலைக்குக் கிடைக்கிற "ஜநவிநோதினி" என்ற நூலை வாசிப்பின் தெரிந்து கொள்ளலாம், வாசிப்பதுமட்டும் போதாது, மனப்பாடம் செய்து விழுங்கிவிட வேண்டும், அந்த ஜநவிநோதினி போல் எழுத ஆரம்பிப்பின் எந்தப் பத்திராசிரியரும் வியாஸத்தைப் பிரசுரியாதிரார்.

# ஒரு ஆசிரியரின் இரவு.



வீட்டின் வெளிக் கதவு திறந்திருந்தது. கல்கத்தா வஸந்த பஜார் வீதியில் இரவு 12-மணிக்கு மேலுங்கூட ஜன நடமாட்டம் இருப்பது சாதாரணம். அன்று காலையில் வந்த பத்திரிகைகளையும் நான் சரிவர வாசிக்கவில்லை. மேலுக்கு ஒரு பார்வை பார்த்து விட்டு அவ்வளவில் வைத்ததுதான். அதற்குப் பிறகு தபால்கள் வந்த நேரத்தில் ஒரு நண்பர் வந்து குந்திக் கொண்டார். பகல் வேளையில் வரவேண்டாமென்று ஆயிரம் தரம் சொல்லியும் அவருக்குத் தெரியவில்லை. என்னுடைய அருமையான காலத்தில் இரண்டு மணிநேரத்தை வியர்த்தம் செய்து விட்டுப் பிறகு அவர் எழுந்து சென்றார். அதன்பின் என்வேலைகளில் சிரத்தையுடன் கவனம் செலுத்தினேன். எத்தனையோ ஜாக்கிரதையுடன் 'புருப்' திருத்தினும் "கல்மழை" என்பதை "மழைகல்" என்றும், "விமானம்" என்பதை "மானம்" என்றும் போட்டு விடுகிறார்கள். என்ன செய்வது? இரவு ஒரு மணி ஆகியும் என் வேலைகள் தீரவில்லை. ஒன்றரை மணிக்கு என்னுடைய வியாசம் ஒன்று முடிவு பெறும் தருணமாயிருந்தது. அதை முடித்து விட்டுக் குனிந்திருந்த தலையை மேல் தூக்கவும் இருவர் நேர்த்தியான உடைகளுடன் என்முன்பு நிற்பதைக் கண்டேன். அவர்கள் விலை பெற்ற மூக்குக் கண்ணாடிகளை யணிந்திருந்தனர். ஒருவர் "நெட்டை", மற்றவர் "குட்டை".

ஃ

நெட்டை:—பத்திராசிரியரே! வெகு சிரத்தையுடன் எழுதிக் கொண்டிருக்கிறீர்களே? நாங்கள் வந்து கால்மணி நேரம் இருக்கும்; உங்கட்குத் தெரியவேயில்லை யல்லவா? அவ்வளவு கவனம், அவ்வளவு ஊக்கம். பேஷ்!

நான்:—இந்த வியாசத்தை முடிக்காமல் படுத்துறங்கி விடுவேனாயின் இப்பொழுது என் நெஞ்சில் ஊறிப் பொங்குகிற எண்ணங்களின் ஊற்றும் சுறுசுறுப்பின் வேகமும் பிறகு தோன்றாது போய் விடலாம். அதற்காகவே இப்பொழுதே இதை முடித்து விட நினைத்ததில் நீங்கள் வந்தது கூட எனக்குத் தெரிய வில்லை. தாங்கள் யாரோ? அந்த நாற்காலியில் உட்காருங்கள்.

நெட்டை:—(உட்கார்ந்து கொண்டு) தங்களைச் சேவிப்பதற்காகவே வந்தோம். நெடுங்காலமாகப் பத்திராசிரியராயும் பிரபல நூலாசிரியராயுமுள்ள தங்களைத் தரிசிக்கும் பாக்கியம் இன்று தான் எங்கட்குக் கிடைத்தது. இந்த வகையில் ஏராளமான சொத்துக்கள் சேர்த்து விட்டிருப்பீர்களென்றோ?

நான்:—சொத்தா! அது பூஜ்ஜியர் தான். இந்த மணிபாக்ஸைப் பாருங்கள். அதிலுள்ள காலணாதான் இன்று

---

1900-வருஷத்தில் தென்னாப்பிரிக்கா போயர் யுத்தத்தின்போது காலணாப் பத்திரிகைகள் ஏராளமாய் வெளி வந்தன. 30வருஷங்கட்குப் பிறகு இப்பொழுது காலணாப் பத்திரிகைகள் அதிகரிக்க ஆரம்பித்துள்ளன. அதில் சில நின்றும் விட்டன. பழயநாளின் காலணாப் பத்திரிகைகளில் இப்பொழுது உயிருடன் இருப்பது கும்பகோணம் "யதார்த்த வசனி" ஒன்றே.

என்னிடம் இருக்கும் மிச்சம். இரண்டு மாதங்களாக வெகு பாடான பாடு! எங்கும் கடன்; நகைகள் அடகில் இருக்கின்றன. இன்றுமாலையில் தையற்காரன் இரண்டு ரூபாய் கேட்க, நான் இல்லையென, அதற்கு அவன் ஒரு ரூபாய் கூட இல்லையா என்றான். எனக்குக் கேவலமாகப்பட்டு மறுக்கப் பின்னடைந்து என் கையில் நாளை செலவுக்கு வைத்திருந்த ஒரு ரூபாயை அப்படியே கொடுத்தனுப்பினேன். அது போக, காலணாவே இப்பொழுது இருக்கிறது. பெட்ரோல் எண்ணெய்க்குப்பணம் இல்லாததால் ஒரு வாரமாக என் மோட்டார் தூங்குகிறது.

நேட்டை :—பாங்கியில் எவ்வளவு போட்டிருக்கிறீர்கள்?

நான் :—எந்தப் பாங்கியிலும் மிச்சம் இல்லை. தபாலாபீஸ் சேவிங்க் பாங்கியில் அந்தப் பாங்கிப் புஸ்தகம் என் கை விட்டுப் போகாதிருக்க ஐந்தணாவை அங்கு வைத்திருக்கிறேன். ஒரு பெரிய ஆசிரியரின் கதி இப்படியிருக்கிறது.

நேட்டை :—தாங்கள் சொல்வதை நம்பக்கூடவில்லையே. இத்தனை வருஷங்களாக சம்பாதித்ததை என்ன செய்தீர்கள்? குடி-தாசி வழக்கங்களுண்டா?

நான் :—கடவுள் கிருபையால் அவ்வழக்கங்களில்லாதது என்பாக்கியமே. பெரிய குடும்பம்; உட்கார்ந்து தின்று என்னை மோசம் செய்து விட்டார்கள். ஒருவர் போக ஒருவராக வரும் விருந்தினர் கூட்டம் அதிகம். சம்பாதித்ததெல்லாம் இதிலேயே தீர்ந்து விட்டது. என் கையும் சற்று தாராளக்கைதான். அசனுடும் பலவித செலவுகள். மூன்று முறை முனிசிபல் கௌன்சிலரானதில் அதிகப்பண வியயம். ஏதோ பகவான் கொடுக்கிறார், நடக்கிறது.

நேட்டை :—வீட்டில் எவ்வளவு நகைகள் வைத்திருக்கிறீர்கள்? அதோ தூங்குகிறது தங்கள் மனைவியா? கழுத்திலும்கையிலும் எதுவும்காணோமே?

நான் :—நகைகள் யாவும் பாங்கியில் அடகில் இருப்பதாக முன்பே கூறினேனே? இந்தியா சட்டசபைத் தேர்தலுக்காக அடகுக்குப்போனவை இன்னும் திரும்பி வீடு வரவில்லை.

நேட்டை :—அவைகள் எவ்வளவு மதிப்பு பெறும்? ஐயாயிரம் ரூபாய்கள் இருக்குமா?

நான் :—ஏதோ நாலாயிரம் ரூபாய்க்கு இருக்கலாம். 2600-ரூபாய்கள் கொடுத்துத் திருப்பின காலத்துக்கு அவைகள் சொந்தம்!

நேட்டை :—இப்பொழுது உங்கள் இரும்புப் பெட்டியில் எவ்வளவுதான் இருக்கும்?

நான் :—இரும்புப் பெட்டியா? அந்தந்த மாத வருமானமே எனக்குப் போதாமலிருக்க, இரும்புப் பெட்டி எனக்கு எதற்காக?

நேட்டை :—நாளைய செலவுக்கு என்ன செய்வீர்கள்?

நான் :—பகவான்தான் படியளக்க வேண்டும். இன்று காலையில் மூன்று அப்பத்திற்குப் பதில் ஒரு அப்பம் சாப்பிட்டேன். என் வயிற்றைக் கட்டலாம்; மனைவி மக்களின் வயிற்றைக் கட்ட முடிகிறதா?

நேட்டை :—தங்கள் வீட்டில் காபி வைக்கிறீர்களா? நாளை பால் வாங்கக் காசுக்கு என்ன செய்வீர்கள்?

---

ஒருவரிடத்தில் சில சாமான்களை இலவசத்தில் பெற்றுக்கொண்டு விட்டால், அதன் வட்டியாக அவர்களுக்கு ஓயாது உபசரிக்கும்படி நேருகிறது.

நான் :— செய்யிலும் பாலிலுமே வளர்ந்தவன். கால்படி வெண்ணெய் கால் ரூபாயாக இருந்த காலத்தில் பிறந்தவன். ஒரு தினம் பழய சாதம் உண்டால் மறுநாள் ஜ்வரம் வந்து விடும். காப்பி பலகாரமே வழக்கம். பால்காரன் கடனுக்கு எவ்வளவாயினும் ஊற்றுவான். என் பேர் பெரிய பேரல்லவா?

நேட்டை :—வீடு நிறையப் பெட்டிகளும் பீரோக்களுமாக இருக்கின்றனவே?—பணம் ஒன்றும் இல்லையா?

நான் :—எல்லாவற்றிலும் தங்கக் கட்டிகள் நிறைந்திருக்கின்றன. அவற்றை ரூபாயாக மாற்றினால் எல்லாம் பணம் தான். செலவுகளும் தாராளமாக நடக்கும். விற்றுப் பணம் வரு முன்பே பழய கடன் பாக்கிகள் எமனைப் போலக் காத்துக் கொண்டிருக்கும். என் செய்வேன்!

நேட்டை :— தங்கக் கட்டிகளை வைத்துக் கொண்டா விற்க முடியாமல் தவிக்கிறீர்கள். தாங்கள் கோலார் பொன் சுரங்கத்தில் வேலையிலிருந்தீர்களா? அப்பொழுது ரகசியமாகச் சேர்த்ததோ?

நான் :— (சிரித்துக் கொண்டு) தங்கக் கட்டிகள் என்றது நான் எழுதிய புஸ்தகங்களைத் தான். இங்கிலாந்திலேயே தங்கம் இல்லாதபோது, காலணு மிச்சம் வைத்துள்ள நான் தங்கக்கட்டிக்கு எங்கே போவேன்?

நேட்டை :—அவ்வாருயின், தங்கள் குடும்பத்திற்கு என்னதான் சொத்து வைத்திருக்கிறீர்கள்?

நான் :—எதுமில்லை. என் மோட்டார் வண்டி, புஸ்தகங்கள்கடனிலுள்ள தான் சொத்து. நகைகள் இவைகளே கடவுளையே நம்பியிருக்கிறேன்.

நேட்டை :—பிரபல ஆசிரியரான தங்கள் கதை வியப்பாயிருக்கிறது. இந்தப் பத்து ரூபாய் நோட்டை நாளை செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள், பாவம்!

நான் :— (அதைப் பெற்றுக் கொண்டு) பகவான் உங்கள் மூலம் எனக்கு அனுப்பியிருக்கிருர்; மிக்க வந்தனம்.

நேட்டை :— (தன்சட்டைப் பையிலிருந்தெடுத்து) இந்தத் துப்பாக்கியைப் பார்த்தீர்களா? ஒரு சாண் அளவே யிருக்கிறது. இதைக் கொண்டே ஒரே யடியில் 30—தடவை சுடலாம். என்னுடன் வந்தவரிடமும் வேறே யிருக்கிறது.

நான் :—(வியப்புடன்) தங்களுக்கு இது எதற்காக?

நேட்டை :—என் தற்காப்புக்காக. நான் ஒரு பிரபு. என்னை எதிர்ப்போரைச் சுடுவதில் என் குறி பிசகாது.

நான் :—தங்களுக்கு விரோதிகள் அதிகமோ?

நேட்டை :—தாங்கள் கூட அடுத்த நிமிஷத்தில் என் விரோதியாகி விடலாம். மனுஷ்யர்கள் எவ்வளவு சீக்கிரத்தில் மாறிவிடுகிருர்களென்று தங்களுடைய நூல்களில் விஸ்தாரமான அனுபவங்களை வாரிக் கொட்டியிருக்கிறீர்களே, மறந்தீர்களா?

---

முதலில் செய்த காரியம் நியாயமா, இல்லையா என்பது முடிவு செய்யப் படவேண்டி யிருக்கையில், அதையே மேற்கொண்டு செய்து கொண்டு போவது முந்திச்செய்த காரியத்தைச் சரியென்று மூர்க்கமாய்ஸ்தாபித்துக் கொள்வதற்காகக் கையாளப்படும் யுக்தி யென்றே கருதப்படும்.

நான் :—நாளை செலவுக்கு இல்லாத எனக்குப் பத்து ரூபாய் நோட்டைக் கடவுளே தந்ததுபோல் கொடுத்தவரையா விரோதிப்பேன்? ஒரு நாளுமில்லை. என் நெஞ்சில் கபடம் கிடையாது. உள்ளதை உள்ளபடியே சொல்லிவிடுவேன். என்னுடைய சத்தியமே எனக்குக் கஞ்சி ஊற்றுகிறது.

நேட்டை :—அவ்விதம் கபடமற்று வெள்ளை மனதாய்ச் சொல்லக் கூடியவரென்று நான் தெரிந்து கொண்டதால் தான், தங்களின் வார்த்தைகளுக்கு மதிப்பு தந்து யாவும் உண்மையென்று நம்பினேன். அதனால் தான் இரக்கப்பட்டு நாளைய செலவுக்கும் கொடுத்து உதவினேன்.

நான் :—சத்திய வழியிலேயே போவோம். மனதார உழைப்போம். உலகுக்கு நல்லதைச் செய்வோம். கடவுளை நம்புவோம். நம்மைக் காப்பதற்குப் பகவான் இருக்கும்போது நம்மைப் பற்றி நமக்குக் கவலை வேண்டியதில்லை. அவர் எல்லா ஆபத்துகளிலிருந்தும் தப்புவிப்பார். அது திண்ணம். இது என் அனுபவம்.

நேட்டை :—கடவுள் தங்களை ஆபத்துகளினின்றும் விடுவிப்பதை நான் நேரே கண்டேன். மணி மூன்றாகப் போகிறது. விளக்கை அணைத்துப் படுத்துக்கொள்ளுங்கள். நாங்கள் போய் வருகிறோம்.

ஃ

எனக் கூறித் தமது பவுண்டின் பேனாவை எடுத்து ஒரு காகிதத்தில் என்னவோ வரைந்து அதை ஒரு உறையிலிட்டு ஒட்டி அதன் விலாஸம் வரைந்து என் கையில் தந்தார். விலாஸத்தைப் பார்த்ததில் எனக்கே எழுதப்பட்டிருப்பதாய்த் தெரிந்து வியப்புற்றேன்.

நேட்டை :— நாங்கள் சென்ற பிறகு இதை வாசித்துப் பாருங்கள். நீங்கள் சுலபத்தில் தூங்க மாட்டீர்கள். ஒரு வேடிக்கை காட்டுகிறேன். நான் குறிபார்த்துச் சுடுவதில் தீரன், நீங்களே விளக்கை அணைக்கிறீர்களா? அல்லது நானே விளக்கைப் பார்த்துச் சுட்டு அணைக்கட்டுமா?—

நான் :—சுட வேண்டாம், நானே அணைத்து விட்டுப் படுக்கிறேன், நீங்கள் போய் வருகிறீர்களா?—

என் வார்த்தை முடிந்த அதே நிமிஷம் நேட்டை விளக்கை அணைத்துவிட்டுக் தூட்டையை அழைத்துக் கொண்டு வெளியேறினார். வாயிற்படியிலிருந்த தங்கள் ஸைகில்களில் இருவரும் ஏறிக்கொண்டு ஒருநிமிஷத்தில் பறந்து விட்டனர். அதன் பின் விளக்கை யேற்றி, என்னிடம் கொடுத்த கடிதத்தைப் பார்க்கப் பின் வருமாறிருந்தது :—

அன்புள்ள ஆசிரியரே,

நீர் பிரபல ஆசிரியராதலால் ஏராளமான சொத்துகள் படைத்தவரென்றெண்ணி உங்கள் வீட்டில் கொள்ளையிட வந்தோம். எங்களுக்கு அதிர்ஷ்டமில்லை. நீர் கபடமற்ற உண்மை மனிதர். காலணாதான் மிச்சமென்று யாவற்றையும் ஒளியாமல் சொல்லிவிட்டீர். தங்கக்கட்டிகளென்று நீர் கூறியதும் மயங்கினேன். கடைசியில் அவை புஸ்தகங்களென்று தெரிந்தது. அதை உமது தலையிலேயே போட்டுக் கொள்ளுங்கள். நாங்கள் போய் வருகி

---

எதிலும் அப்பொழுது ஏற்படுகிற தகாருக்குக் காரணமென்ன வென்று சொல்லப் படுகிறதோ அந்தக் காரணத்திற்குக் காரணமொன்றும் கூடவே இருக்கும்.

றோம். எங்கள் துப்பாக்கிக்கு நீர் இரையாகாததும், உமது வீடு கொள்ளை போகாததும் உமது நற்காலமே.

இங்ஙனம்

துரதிர்ஷ்டசாலி.

ஃ

இக்கடிதத்தை வாசித்ததும் திடுக்கிட்டுத் திகைத்து நின்றேன். "தூட்டை" உட்கார்ந்திருந்த நாற்காலியில் அவர் மறந்து வைத்துச் சென்றுவிட்ட கூர்மையான ஈட்டி ஒன்றும் இருந்தது. வந்தவர்களை நான் சற்றும் சந்தேகியாமலே போய்விட்டேனே! எத்தனைப் பயங்கரமான இரவு இது? "என்றுள்ளனக்குள்ளேயே சொல்லிக்கொண்டேன். கடவுள் கிருபையால் மலைபோல் வந்த விபத்து பனிபோல் நீங்கிற்று. அது மட்டுமா? நாளை செலவுக்கு எதிர்பாராத விதமாகப் பத்து ரூபாயும் கிடைத்தது. என்னிடம் கொள்ளையிட வந்தவனே அந்த ரூபாயை எனக்குக் கொடுக்கும்படியாகக் கடவுள் செய்தது ஆச்சரியமன்றோ! வேளை நல்லதாயின் கொல்லவந்தவனே கட்டித்தழுவ வருவான் போலும்!

## என்னிடம் பணம் கொடுக்கவேண்டாம்.

என்னிடம் வைத்துவைக்கும்படி நீங்கள் பணம் ஏதுவும் கொடுக்கவேண்டாம். நீங்கள் தந்த பணத்தைத் தனியாகவே வெகு பத்திரமாய் வைத்துவிடுகிறேன். பல மாதங்கள்வரை நீங்கள் கேட்பதேயில்லை. அந்தப்பணமும் அப்படியே கிடக்கிறது. பிறகு எனக்கே ஒரு அவசரச் செலவு வந்து என் பணம் போதாமல் உங்கள் பணத்தில் கை வைத்து அதைச் சிறிது சிறிதாக முழுதுமே செலவிட்டுவிடுகிறேன். மறுபடியும் அதற்குப் பதில் போடவேண்டிய பணத்திற்காக எனக்கு வரவேண்டிய பணத்தை எதிர்பார்த்து நிற்கையில் அந்தப்பணம் தராமலே கலங்கும்படியாக, அதன்மேல் நான் கடன் வாங்கி என் வீட்டுச் செலவுகளைச் செய்யும்போது, நீங்கள் அந்தசமயம் வந்து உங்கள் பணத்தைக் கேட்கிறீர்கள். என் கண்விழி பிதுங்குகிறது. இல்லையென்றும் பிறகுதருவதாகவும் சொல்ல முடியவில்லை. தரவும் கையில் இல்லை. உங்கட்கோ தந்த பணத்தைக் கேட்டால் இந்தப்பாவி சமயத்துக்கு இல்லையென்கிறானே என்று கோபம் வருகிறது. உங்கள் பணத்தை மோசம் செய்ய எனக்கு எண்ணமில்லையானாலும் இது மிக்க அவமானமாகிறது. திகைப்பாகிறது. ஆகவே, என்னிடம் கண்டிப்பாகப் பணம் தரவேண்டாம். எனக்கும் இந்தத் தொல்லை வேண்டாம்.

# 'ஹாம்ரன்ஸ்' ஜனங்கள்.



ஆப்ரிகா கண்டத்தில் அபிஸீனியா தேசத்திற்கு யாத்திரை சென்ற ஒருவர் 'காஸலா' வுக்குத் தெற்கிலுள்ள நாட்டில் அரேபியர்களைச் சேர்ந்த ஒரு வகை ஜாதியாரான 'ஹாம்ரன்ஸ்' என்னும் பெயருள்ள ஜனங்களின் வீரத்தைப்பற்றித் தெரிவித்திருப்பதை இங்கு சுருக்கமாய்க் கொடுக்கிறோம்.

ஃ

'ஹாம்ரன்ஸ்' ஜனங்கள் கத்தியாகிய ஒரே ஆயுதத்தைக் கொண்டே மான் முதல் சிங்கம், காண்டாமிருகம், யானை வரையிலுள்ள வனவிலங்குகள் யாவற்றையும் வெட்டி வேட்டையாடிக் கொல்ல வல்லவர்கள். கத்தி கேடயமும் ஆயுதமாக வைத்திருப்பவர்கள். குத்துவதிலும் வெட்டுவதிலும் அவர்களுக்கு ஒப்பானவர்களில்லை. அவர்கள் வைத்துக் கொண்டிருக்கிற கத்தியின் கூர்மையான நுனி சரீரத்தில் பட்ட மாத்திரத்தில் பிராணன் துடிப்பது போலிருக்கும். கத்தி உறைகளுக்கு யானைத் தோலினால் மூடி செய்திருக்கும். அவர்களின் யானை வேட்டை மிக்க ஸாகஸம் பொருந்தியது.

ஃ

குதிரை வைத்துக் கொள்ள சக்தியில்லாதவர்கள் இரண்டிரண்டு பேராக வேட்டைக்குப் போவார்கள். யானைக் கால் வடிவு எங்கே தெரிகிறதோ, அதைப் பிடித்துக் கொண்டு அது போயிருக்கிற வழியே போய் நல்ல மத்தியான வேளையில் யானை யிருக்கும் இடம் சேருவார்கள். நடுப்பகலில் யானைகள் தூங்கி உறங்கிக் கொண்டாவதிருக்கும், அல்லது, இன்னதென்று தெரியாமல் பிரமை பிடித்தாவதிருக்கும். ஆகையால், அப்போது அவைகளைக் கிட்டுவது மிகவும் எளிது. யானை தூங்கிக் கொண்டிருந்தால், ஒருவன் முன்பக்கமாய் பூனை போலப் பதுங்கிக் கொண்டு போய் ஒரே வெட்டினால் துதிக்கையைச் சேதித்துப் போடுவான். வெட்டுப் பட்ட யானை திடுக்கிட்டு விழித்துக் கொள்வதற்கு முன் வேட்டைக்காரர் தப்பி ஓடிப் போவார்கள். துதிக்கை யற்ற யானையும் ஒரு நாழிகை இரண்டு நாழிகைக்குள்ளே இறந்துபோம்.

ஃ

அப்படியின்றி யானை விழித்துக் கொண்டிருந்தால், அதை நெருங்குவது கூடாது. அப்பொழுது பின் புறமாய் அதற்குத் தெரியாமல் போய் பின்னங்கால் முட்டி நரம்பைப் பார்த்துக் கத்தியை ஓச்சி ஒரு வெட்டு போடுவார்கள். இதனாலேயே அதன் சக்தி முக்காலே மூன்று வீசமும் போய்விடும்; அப்புறம் மற்றொரு பின்னங்காலிலும் அப்படியே செய்வார்கள். இப்படிச் செய்வதனால் இரத்த நரம்புகள் அறுந்து போமாகையால், நிமிஷத்தில் இரத்தம் ஆறாய்ப் பெருகி மிக்க பரிதாபத்துடனும் யானை இறந்துபோம். ஏழைகளாயிருப்பவர்கள் இப்படிச்செய்து யானைகளைக் கொன்று தந்தம் சம்பாதித்து விற்றுப் பணம் சேர்த்த பிறகு, குதிரைவாங்கி வைத்துக் கொண்டு வேட்

டையாட ஆரம்பிப்பார்கள். யானைக்கு விசேஷித்த அழகு தரும் தந்தங்களே அதன் உயிருக்குச் சத்துருவாய் முடி கின்றன. ஃ

குதிரை வைத்துக் கொண்டிருப்பவர்கள் நன்னான்கு பேராய்க் கூட்டங் கூடி விடியற் காலத்தில் சவாரி புறப்பட்டு சாதாரணமாய் ஆற்றோரத்திலேயே அங்கு மிங்கும் யானைக்காகத் தேடித்திரிவார்கள். முதனாள் ராத்திரி தண்ணீர் குடிக்க ஆற்றுக்கு வந்திருந்த யானையின் காலடி கண்டு பிடித்து, எவ்வளவு தூரமானாலும் அதுபோயிருக்கிற வழியே போய் யானையிருக்குமிடஞ் சேர்ந்து, முதல் முதல் பெரிய கொம்புகளினால் யானையைத் தூண்டிக் கோப மூட்டுவார்கள். உடனே அது இவர்கள் மேல் திரும்பித் துரத்த ஓடிவரும். அப்போது மூலைக்கொருவராய் ஓடி மறைய யானையும் அலுத்து நிற்கும். முன்போலவே அதை மறுபடியும் தூண்டித் துரத்த முயலுவார்கள். அது மறுபடியும் துரத்தும். முக்கியமாய் அதிக சாமர்த்தியமுள்ள ஒருவன் மாத்திரம் அதன் முகத்திற்கு அருகாமையில் அதன் ஞாபகத்தை யெல்லாம் தன்மேல் செலுத்தும் பொருட்டு அதற்கு எட்டியதும் எட்டாததுமாய் ஓடிக்கொண்டிருப்பான். யானையும் இவனையே உக்கிரகமாய்ப் பார்த்துப் பின்செல்லும். யானையினால் தொடரப்பட்டு அதன் பராக்கிரம வேகத்திற்குத் தக்கபடி தானும் ஓடிச் செல்வதற்கு எவ்வளவு நிதானமும் சாமர்த்தியமும் வேண்டும்? இப்படி அவனும் யானையும் வேகமாய் ஓடிக்கொண்டிருக்கும்போது, அதற்குத் தெரியாமல் பின் பக்கமாய் ஓடிவரும் குதிரை வீரரில் ஒருவன் உருவிய கத்தியுங் கையுமாய்க் குதிரையை விட்டிறங்கி, யானையின்பின்னங்காலில் ஒருவெட்டு போட்டு சட்டென்று தன் குதிரை மீது ஏறிக்கொள்வான். வெட்டினால் பாதி ஒடுங்கிப் போயிருக்கிற யானை பின் திரும்புந் தருணத்தில், முன்னாலோடுகிறவன் கிட்டவந்து அதைத் தன்னைப் பின் தொடரச் செய்வான். யானையும் தட்டுத் தடுமாறிப் பின் செல்லும்போது பின்னிருப்பவரில் ஒருவன் சுலபமாய் மற்றொரு பின்னங் கால் நரம்பையும் வெட்டிப் போடுவான். இரண்டு வெட்டோடு யானையின் ஸகல பலமும் அற்றுப்போய், நின்ற இடத்திலேயே நின்று இரத்தம் பெருகியோடச் சீக்கிரத்தில் மடித்து போம். ஃ

இந்த மாதிரியான யானை வேட்டையினால் உண்டாகும் அபாயம் அவ்வளவு இவ்வளவல்ல. அநேக தடவைகளில் வேட்டைக்காரர்கள் அபாயத்திற்கு ஆளாகியு மிருக்கிறார்கள். ஒருதரம் ஒரு வேட்டைக்காரன் யானையைக் காலின்கண் வெட்டப் போகும்போது புல் தடுக்கிக் கத்தி அதன் மேற்படாமற்போக, பின் திரும்பின யானைக்குத் தப்பும்படி ஓடிவந்து கத்தி தன் காலிலேயே பாய்ந்து கீழே விழுந்தான். அந்தத் தட்சணத்தில் அவன் கூட்டாளி ஒருவன் ஓடிவந்து யானையின்காலை வெட்டி அவனைக் காப்பாற்றினான். இப்படிப்பட்ட அபாயங்களுக்கு இவர்கள் கொஞ்சமும் பின்னிடுகிறதில்லை. பீரங்கிகள், குண்டுகள் ஒன்றுமில்லாமல் தாங்களே நேராய்ப்போய்க் காட்டு மிருகங்களைக் கொல்லுகிற இவர்களின் சக்தி அபாரமானது. ஒருவருக் கொருவர் ஒத்தாசை செய்ய வேண்டுமென்ற ஐக்கியமும் கட்டுப்பாடும் இவர்களுக்குள் உண்டு. ஃ

---

பத்திரிகைகளில் பெயர் பிரபலமாய் வந்து விட்டதினாலேயே யோக்கியரென்றாவது நாணயநம்பிக்கையுடையவரென்றாவது சொல்லி விடுவதற்கில்லை.

நம் நாட்டில் தேளைக் கண்டதும் அதை அடிக்கத் தைரியமின்றி மனைவியையும் மற்றவரையும் பெருங்குரல் போட்டு அழைக்கும் வீர புருஷர்கள் எத்தனை பேர்! திருடன் என்றதும் நடுங்கும் பராக்கிரமசாலிகள் எத்தனை பேர்! மனைவியின் குரலுக்கு அஞ்சி ஸலாம் போடும் ஹிம் ஹங்கள் எத்தனை ஆயிரவர்! அவர்கள் இந்த 'ஹாம்ரன்ஸ்' ஜனங்களின் வீரத்தைப் பற்றி என்ன சொல்லுவார்களோ?



## அன்பு அந்த இழிவை எண்ணிடாது.

"ஓய்! இரும், இரும், உம்மைப்பற்றிப் பத்திரிகையில் எழுதுகிறேன்" என்று ஒரு அன்பர் கூற, அதற்கு மற்றவர் "மானங்கெட்ட ஜன்மங்கட்கு என்னதான் எழுதினாலும் புத்தி திருந்தாது" என மொழிந்தார். மனதில் அன்பு இருப்பின் தன் நேசன் எது பேசினும் குற்றமாய்ப் படுவதில்லை. தன்னை மானங்கெட்ட ஜன்மம் போலவே கோபியாதிருக்கச் செய்துவிடும். ஒருவரை நாம் எவ்வளவோ சினந்து விலக்கினும், அவருக்கு நம் மீது உண்மையன்பு இருப்பதால் மறுபடியும் நம்மிடம் வந்து உட்கார்ந்து விடுகிறார். "என்ன ஐயா, நேற்று அவ்வளவு கோபித்தேன், பேசினேன், இன்று அதை லக்ஷியம் செய்யாமல் வந்து உட்கார்ந்து கொண்டீரே" யென்றால், அதற்கு அவர் "இது மானங்கெட்ட ஜன்மம், என்ன திட்டினாலும் அது மனதில் தைப்பதில்லை" என்று புன்னகையுடன் மறுமொழி தருகிறார். இதற்குமேல் நாம் அவரைக் கோபிக்க வகையேது? உடனே, அவரைத் தழுவிக்கொண்டு ஆநந்திக்க வேண்டியதுதான். "பாட்டி எவ்வளவு வைதாலும் நான் மானங்கெட்ட ஜன்மமாய்க் கேட்டுக் கொண்டிருப்பேன்; ஆனால், அத்தை திட்டும்போது தான் என் மனதில் அது சுரீர் என்று பட்டு வேதனை தருகிறது" என்றான் ஒரு சிறுவன். பாட்டி தன்மீது அன்புள்ளவளென்றும், அத்தை அன்பற்றவளென்றும் அச்சிறுவன் நினைத்ததால் பாட்டியின் வசைகள் கற்கண்டாயும், அத்தையின் திட்டுகள் வேம்பாயும் தோன்றின. அன்பற்றார் ஒரு சொல் கூறின் அது புண்ணில் கோலிட்டது போலிருக்கும். அன்பு நிறைந்தவர் கூறினோ, எவ்வளவோ இழிவான பதமாகிய மானங்கெட்ட ஜன்மம் என்ற பதத்தை இழிவாக எண்ணுமலே தனக்குச் சொல்லித் தாழ்த்திக்கொண்டு சந்தோஷிக்க வைக்கும். யாவும் களங்கமில்லாத அன்பின் திருவிளையாடலே!

# வீட்டுச் சிக்கனம்.

புருஷன் :—என் உத்தியோக சம்பளம் குறைந்து விட்டது. இனி இந்தத் தடபுடல் செலவுகளைச் செய்ய என்னால் முடியாது. இப்படிப் போய் அப்படி வருகிறதும், அப்படிப்போய் இப்படி வந்து குந்திக் கொள்கிறதுமான சங்கதிகளுக்கு இனி நீ இடந்தரக் கூடாது.

மனைவி :—வீடு தேடி வருகிறவர்களை எப்படிப் போவென்று சொல்வது? அடுத்தவாரம் மாரியம்மன் திருவிழா வருகிறது ; பலரும் தான் வருவார்கள். யாரை வேண்டாமென்கிறது ?

புருஷன் :—வருகிறவர்கள் வரட்டும். வீட்டிலுள்ளதைப் புசித்துப் போகட்டும். நாட்கள் கணக்காகத் தங்கினால் யார் செலவு செய்வது ? தினம் காலையில் எட்டணா இட்டிலி, நாலணா பால், இரண்டணா சர்க்கரை என்றால் எவரால் முடியும்? அந்தப் பாழுங் காபியை நிறுத்தித் தொலை.

மனைவி :—குழந்தைகளுள்ள வீட்டில்காபியில்லாமல் முடியுமா? எனக்கு இட்டிலியே வேண்டாம் ; இவ்வளவு காபி கிடைத்தால் போதும்.

புருஷன் :—வீட்டில் காபி வைப்பதால் தான் வருவார் போவாருக்கெல்லாம் காபி வைத்துத் தர வேண்டியிருக்கிறது. வீட்டில் காபி வழக்கமில்லாவிட்டால் இட்டிலியும் ஒரு லோட்டா ஜலமுமாக முடிந்து விடும்.

மனைவி :—வந்தவர்களுக்குக் காபி தராவிட்டால் கேவலமாக நினைக்க மாட்டார்களா? அது நன்றாயிருக்காது.

புருஷன் :—இந்த வீட்டில் நெய் வழக்கம் கிடையாது. வெற்றிலை தாம்பூலம் போடுவதுமில்லை, ஆகவே, வந்தவர்களுக்கும் இவை கிடையாது. இவ்விதமே காபியையும் நிறுத்தி விட்டால் வந்தவர்களும் குற்றம் சொல்ல முடியாது.

மனைவி :—நீங்கள் எங்கேயாவது போய்விடுங்கள். நீங்கள் இருந்தால் எல்லாம் செய்ய வேண்டியதாய்த் தானிருக்கும்.

புருஷன் :— இவர்களுக்காகப் பயந்து கொண்டு நான் வீட்டை விட்டு வெளியில் போயிருப்பதா? அதெல்லாம்? முடியாது. நாளை நான் கடன் ஜெயிலுக்குப் போனால் இவர்கள் துணை வருவார்களா? அல்லது உதவுவார்களா?

மனைவி :—சாயந்திரம் வாங்குகிற பக்ஷணங்களை நிறுத்தி விடுங்கள். காபி யிருக்கட்டும்.

புருஷன் :—இரண்டையும் நிறுத்தித்தானாக வேண்டும். சீயக்காய் தான் கட்டாது. சீயக்காய், இலுப்பைக் கட்டி வாங்கி அறைத்துக் கொள்ள வேண்டும். ஏதாவது ஒரு காய்கறியில் ஒரு தினத்தை முடித்து விடவேண்டும். எப்படியாவது வரவுக்குள் செலவு இருக்க வேண்டும். இனி கடன்பட என்னால் முடியாது. எதிர் வீட்டுக்காரியுடன் நீ சண்டை போட்டுக் கொண்டு பேச்சு வார்த்தை

---

இன்று நமக்குச் சொந்தமாயிருக்கிற குமார்த்திகள் நாளைக்கு அந்த சொந்தமற்றுப் போய் அன்னியரின் வீட்டுப் பெண்களாகி நமக்குப் பாத்தியதையே யில்லாமல் போய் விடுவதும், அந்தத் துயரத்தை சகித்துத் தாங்குவதும் பெரிய பரிதவிப்பான காரியம் !

யில்லாமலிருப்பதில் வீட்டுச் சாமான்கள் அங்கே போகாமல் எனக்கு எவ்வளவோ லாபம். அப்படிப்போலவே யாருடனுவது சண்டையிட்டுப் பிரிந்து சிக்கனம் பண்ணு.

மனைவி :—இப்படிக் குத்திப்பேசினுல் நான் என்ன செய்கிறது? குழந்தை முறுக்குச் சுட்டுத்தரும்படி கேட்டான். உங்களுடைய தரித்திரம் பிடித்த செட்டுத்தனத்தைக் கண்டே நான் ஒன்றும் செய்யவில்லை.

புருஷன் :— நீ முறுக்கு சுட்டு விடிந்து போச்சுது! பக்கத்து வீட்டுப் பார்வதிக்கும், எதிர் வீட்டு எல்லம்மாவுக்கும் சுட்டதில் பாதி போய் விடும். மீதியிலும் பாதி எவ்விதமாவது மறைந்து விடும். போகக் குழந்தைக்கு நாலு முறுக்கு கிடைக்கும். மறு நாள் கேட்டால் எல்லாம் ஆய் விட்ட தென்பாய். இந்த லக்ஷணத்திற்குச் செலவு ஒன்றரை ரூபாய் ஆகிவிடும். எந்த முறுக்கும் சுட வேண்டாம். நான் கடையில் வாங்கிக் குழந்தைக்குக் கொடுத்து விடுகிறேன்.

மனைவி :—என்னைக் கண்டாலே உங்களுக்கு ஆகவில்லை. என் இப்படி வெடு வெடு என்று படுகிறீர்கள்?

புருஷன் :—ஏதாவது செலவுகளைக் குறைப்பதற்குக் கணவனேடு ஒத்துப்போனுலல்லவா மானமாய்க் குடித்தனம் செய்ய முடியும்? நான் தான் அங்கே சண்டை போட்டு விட்டு வந்தேனே? அதற்குள் முத்தம்மாள் இங்கு என் வந்தாள்?

மனைவி :— என்னைப் பார்த்துப் போக வந்தார்கள். இது கூடத் தப்பிதமா? வரக் கூடாதா?

புருஷன் :— பார்த்துப் போகவா வந்தது? நான் கோபத்துடன் இருக்கிறேனு, சாந்தமாயிருக்கிறேனுவென்று ஆழம் பார்த்து விட்டு மறுபடி வந்து குந்துவதற்கல்லவா வந்தது.

மனைவி :— எப்படியாவது எண்ணிக் கொள்ளுங்கள். குழந்தை அழுகிறது. பக்ஷணம் வாங்கி வாருங்கள்.

புருஷன் :— அதற்கு வாங்கினுல் மற்றதற்கும் உனக்கும் வாங்க வேண்டும். அதெல்லாம் சரிப்படாது. பசித்தால் சாதத்தைப் போட்டுச் சரிசெய். காபி பலகாரம் புசித்ததெல்லாம் போய் பழய சாதம் சாப்பிட்டவர்களில்லையா?

மனைவி :— பழயது சாப்பிட்டுக் காய்ச்சல் வந்து படுத்துக் கொள்ளச் சொல்லுகிறீர்களா?

புருஷன் :— எல்லாம் பழகினுல் சரியாகி விடும். இரண்டு காசு மிச்சம் பிடிக்காமல் வந்த தெல்லாம் செலவிட்டு அதற்கு மேலும் கடன் ஏற்படுவதானுல் நாளைக்கு யார் தாலியை அறுத்துக் கொடுப்பது?

மனைவி :—ஏன் இப்படித் தரித்திரப் பேச்சு பேசுகிறீர்கள்?

புருஷன் :—வரவுக்கு மீறிச் செலவிட்டால் தரித்திரம் தான். தரித்திரம் வாராதிருக்கத்தான் பேசுகிறேன். அதிகமாக ஆகிற செலவில் சிலவற்றைக் குறைத்து இரண்டு பணம் மிச்சம் பிடித்தால், அதுதான் புதிதாகச் சேர்ந்த சொத்து ஆகும். இது தெரியவில்லையே! நீ எதற்கும் வழி விடுகிறவளாகக் காணேமே?

மனைவி :—எப்படியாவது போங்கள் எனக்கென்ன? என் வயிற்றுக்கு எங்கேயாவது சோறு கிடைக்காதா?

என்று கோபத்துடன் குழந்தையை இரண்டு அடிகள் அடித்து விட்டு எழுந்து சென்றுள் குழந்தை கதறிக் கொண்டிருந்தது. கணவன் சிக்கன ஆலோசனையுடன்கவலையாய்நின்றுன்.

# மனித இயற்கை.



மனித இயற்கை என்று சொல்லி எல்லாவிதமான தவறுதல்களுக்கும் ஜனங்கள் ஒரு சமாதானமாகக் கூறுகின்றனர். இந்த சமாதானம் ஆதியில் நல்ல எண்ணத்துடன் தான் சொல்லப்பட்டதாயினும், இப்பொழுது அது மாறிப் போன வகையைப் பார்த்தால் மனதுக்கு மிகுதியும் வருத்தத்தை உண்டாக்குகின்றது. குற்றத்தைக் கொடுமைக் கண்களுடன்பார்க்கலாகாதென்றும், குற்றம்பலக்குறைவினுல் நிகழ்ந்ததாகுமென்றும், பலக்குறைவு அறியாமையின் குழந்தை—அதாவது, அறியாமையால் நேர்ந்ததென்றும் கருதி இவ்வகையிலே தவறிப் போகும் ஒரு சங்கதிக்கே அது "மனித இயற்கை" என்று சமாதானம் சொல்லப்படுவது வழக்கமாயிற்று. மனிதன் பெறுகிற அறிவு கடவுளின் அருளாகும். முயற்சியின் மூலமாகவும் மனிதன் அறிவு பெறுகிறுன். அவ்விதம் பெற்றுலும் மனிதனது இந்த முயற்சியின் அறிவொடு, கடவுள் தரும் அருள் விரைவில் பொருந்தி எளிதிலே கை கூடுவதில்லை. மனித முயற்சியின் அறிவுக்குக் கடவுளின் அருள் இல்லாத போது அங்கு மனிதன் சோர்ந்து வீழ்ந்துபோக, அந்த சமயத்தில் அது மனித இயற்கை என்று சொல்லப்படுவதாகிறது.

ஃ

ஆனுல், இப்போது அந்த மனித இயற்கை'' என்றசொல் மாறிக் கெட்டுவிட்டவகையோ மிகவும் கேவலமானது. அதற்கு இங்கு உதாரணங்கள் சில தருகிறேம். (1) இவ்வாறு ஏன் சோம்பலுடன் இருக்கிறுய்?—அவ்விதம் இருப்பது மனித இயற்கை. (2) ஏன் கோபிக்கின்றுய்?—அது மனித இயற்கை. (3) உன் காம விகாரத்தை நோக்கினுல், இவ்வீட்டுக்கு விருந்தினராக எவரேனும் குடும்பத்துடன் வரின் உன்னுல் யாருக்கு என்ன நேரிட்டுவிடுமோ என்றல்லவா கவலைப்படவேண்டியிருக்கிறது; ஏன்இவ்விதம் கெட்டுத் திரிகிறுய்?—அது மனித இயற்கை (4) ஏன்திருடுகிறுய்? அது மனித இயற்கை. (5) ஏன் வீணில் சண்டையிடுகிறுய்?—அது மனித இயற்கை. (6) ஏன் முட்டாளாய் முரட்டுத்தனமாய்ப் பேசுகிறுய்—அது மனித இயற்கை. (7) ஏன் தீவிரமாய் முயற்சி செய்யக் கூடாது?—அது மனித இயற்கை. (8) ஏன் அடிமையாயிருக்கிறுய்?--அது மனித இயற்கை. இவ்விதமாக, மனித இயற்கை என்றசொல் கோணலாய்ப்போய் அது பிரயோகிக்கப் பட்டிருக்கிற வழியை பாருங்கள்.

ஃ

உண்மையில் "மனித இயற்கை" என்பது என்ன? அது பயங்கொண்டவனைப் பாம்பைப்போல் தூக்கிப் பயமுறுத்தும் இயற்கையைக் கொண்டது. அச்சமற்று எதற்கும் துணிந்தவனையோ அவனது வலிமை பொருந்திய வழியிலேயே செல்லவிட்டு உற்

---

பகட்டுப் போன சுவாஸப் பையையுடைய ஒருவன் எப்படிக் கஷ்டப்பட்டுச் சுவாசம் விடுவானே அதே மாதிரியே தன் வேலையோ, பிழைப்போ கெட்டுப்போனவனும் இருக்கிறுன்.

சாகப்படுத்துவதுமாகும். மனித இயற்கை என்பது ஒரு ஆச்சரியமான சக்தி. சில காலங்களில் ஒவ்வொரு ஜாதிக்கும் ஒவ்வொரு சக்தி பொருந்திக் கொள்கிறது. அதை அந்த ஜாதியின் இயற்கை என்று கூறுகிறோம். மனித இயற்கைக்குத் தனி இயற்கையில்லை. தனி இயற்கை ஒன்று உண்டு என்று எவரேனும் கூறினால், எல்லா இயற்கைகளுடன் ஒட்டி வாழும் சக்தி கொண்ட இயற்கையே மனிதனுடைய தனி இயற்கை யென்று சொல்லலாம். புதிதாக வாழ்க்கை நடத்த வந்த பெண் வீட்டிலுள்ள எல்லாருடனும் கூடிப்பழகும் தன்மையளாய் நின்று, தன் கணவனிடம் மட்டும் காம சாந்திப்பெற்றுத்திருப்தி கொண்டு களிக்கின்றான். இது மனிதனது தனி இயற்கைகளில் ஒன்று.

ஃ

மனித இயற்கை என்பது மின்சாரத்தைப் போல ஓட்டங் கொண்ட பொருள். மனித இயற்கை அசையாப் பொருளை அசையச் செய்து நூதனத்தைக் கண்டு பிடிக்கும்; ஓடும் பொருளுடன் ஓடும்; நிற்கும் பொருளுடன் நிற்கும். இது ஒரு ஆச்சரிய சக்தி. எப்படி வளைப்பினும் வளையும். மனித இயற்கை இன்னதென்று உருவெடுத்து விளங்குவதற்கு ஓயாத உழைப்பும் முயற்சியும் அவசியமானது. அந்த உழைப்பும் முயற்சியும் குன்றினால் மனித இயற்கையிலும் தூசிபடிந்து போகும். பதினான்கு உலகங்களையும் கட்டியாளும் திறமை மனித இயற்கைக்கு உண்டு. இந்தத் திறமையானது உழைப்பு—முயற்சி இவற்றின் மூலமாகவே தான் வெளிப்படவேண்டும். ஒரு துர்க்குணத்தைக் கொண்டிருப்பவன் அதையே மனித இயற்கை என்று கூறிவிட ஒண்ணாது அது முயற்சியற்றவன் சொல். அந்தந் துர்க்குணத்தை யொழித்து நற்குணமுள்ளவனுகமாற முயற்சித்து அவ்விதமே ஆகி, அந்த நற்குணத்தையே மனித இயற்கையாக மாற்றி விடவேண்டும். இவ்விதம் மனித இயற்கையை அல்பத்திலிருந்தும், தாழ்விலிருந்தும், நீசத் தன்மையிலிருந்தும் மாற்றித் தூய்மைப்படுத்தி மேல்படிக்கு உயர்த்திக் கொண்டு போய்க் கௌரவப்படுத்த வேண்டும். கற்பை யழிப்பது மனித இயற்கை என்று சொல்லாமல், கற்பைக் காப்பதே மனித இயற்கை யென்று சொல்லும்படியான புனிதத் தன்மையில் மனித இயற்கையை உயர்த்தி மேன்மைப் படுத்த வேண்டும். இவ்விதம் ஓயா முயற்சியுடன் புரிவோருடைய உத்தம இயற்கை தான் மனித இயற்கை. அது தான் ஒழுங்கான இயற்கையுமாகும். மனித இயற்கையை நலந்தரத்தக்க செயலில் வழங்கவேண்டும். ஒரு தீயதைச் செய்துவிட்டு அது மனித இயற்கை யென்று கூறி, இவ்விதம் தீயதான தன்மையில் மனித இயற்கை என்ற சொல்லை வழங்கவொண்ணாது. அது நாசவழி.

---

பக்கத்தில் வைத்த சாமான் இன்னொரு பக்கத்தில் எப்படியோ போய்த் தொலைந்து பதுங்கிக் கொள்கிறது, அந்த சாமான் தான் அந்த நேரத்துக்கு மஹா அவசியப் பொருளாக இந்த மனம் வெகு பிரமாதமாய் எண்ணி விடுகிறது, ஆகவே, அதைத் தேடுவதே முதல் காரியமாகி பல இடங்களில் தேடியலுத்துக் காணாமல் பெருமூச்சு விட்ட பிறகு உட்கார்ந்திருந்த இடத்திலேயே மற்றொருபக்கம் இருப்பதாகப் பிறகு தெரிகிறது, அப்படா! எவ்வளவு கஷ்டம்! பாடு! முன்னேயே தெரியக் கூடாதா? இது ஒரு பெரிய சகிக்கொணாத அவஸ்தை, இவ்வளவுக்கும் மறதியே காரணம், ஒன்றை வைத்த இடத்தை மறந்து போவதில் வருந்தொல்லைகள் கொஞ்சமா?

# வெற்றியின் சூழ்ச்சி.

வெற்றியின் சூழ்ச்சிக்கு "வெற்றியின் ரகசியம்" என்று பொருள். வெற்றிக்கு ரகசியம் உண்டா? உண்டு. ஒரு காரியத்தில் ஒரு முடிவைக் கருதி அதற்கேற்ற சாதனங்களைக் கைக்கொள்ளுதலே வெற்றியின் சூழ்ச்சியாகும்—வெற்றியடையும் வழியுமாகும். வெற்றியடைவதற்குச் செல்லும் முறை கோணினல் முடிவும் கோணும். முறை நேராக இருந்தால் முடிவும் நேராயிருக்கும். முடிவை வகுப்பது கடவுளின் வேலை. தொடங்கும் முறையை வகுப்பது வெற்றிக்கு முயலும் மாந்தர்களின் வேலை.

ஃ

பால் வேண்டி, பசுவின் கொம்பின் பக்கம் ஒருவன் நின்று கொண்டால், பாலுக்குப் பதிலாய் முட்டு கிடைக்கும். அதைப்போல வெற்றியின் பொருட்டு நேரான சாதனத்தைக்கைக்கொண்டாலும், அந்த சாதனத்தைக் கையாளும் முறையைத் தெரிந்து கொள்ளவேண்டும். பசிப்பிணி தீர்வதற்கு சமைக்கப் புகுவதே சரியான சாதனமென்று தெரிந்து கொண்டாலும், அந்த சமையலின் சாதன வகையில் பதார்த்தங்களைக் கிரமமாகக் கையாளும் முறை தெரிந்திருக்கவேண்டுமன்றோ?

ஃ

சக்தி படைத்தவன் தான் வெற்றியைக் கோர முடியும். அவனலே தான் வெற்றியைக் கொண்டுவர முடியும். ஒரே மூச்சிலே தேரை இழுக்கும்போது சக்தியின் ஜோதி தெரிகிறது. ஒரே மனதுடன் காரியம் செய்யும் போது சக்தியின் விசேஷம் வெளியாகிறது. பிடிவாதத்துடன் வெற்றிக்காக எந்தக் கஷ்டத்தையும் தாங்கிக்கொண்டு அனுபவிக்கப் புகுவதில் தான் மனிதத் தன்மை விளங்குகிறது.

ஃ

தமது முயற்சியால் இனி பெறப்போகும் வாழ்வின் பெருமையையும் வீரியத்தையும் உணர்ந்தவர்கள் சோர்வடைய மாட்டார்கள். சோர்வை அன்னோர் கனவிலும் கருத மாட்டார்கள். சோர்வு என்றால் சந்தேகம் என்று அருத்தம். பக்தர்களுக்கும், தமது முயற்சியில் வெற்றியைக் கோருபவர்களுக்கும் சந்தேகம் எழலாமா? சந்தேகம் எப்பொழுது பிறந்ததோ, உடனே வாதும் வம்பும் பெருகும். முயற்சியுடன் புரிந்த வேலை தொலைந்து போகும், சாகும்.

ஃ

நம்மில் பலருக்குப் பூரண ஞானம் இல்லை. பூரண நடையொழுங்கும் இல்லை. பூரண நம்பிக்கையும் இல்லை. சோர்வில்லாமல் உழைக்கும் ஆற்றலுமில்லை. எதிலும் அவசர புத்தியே மேலோங்குகிறது. அவநம்பிக்கையே தாண்டவ மாடுகிறது. பொறுமை ஓடி விடுகிறது. சகிப்பு என்பதோ காணக்கிடைக்காது மறைகிறது. இத

---

அவனுடைய குழந்தை அவன் காலை மிதித்துக் கொண்டு அப்பாற் செல்லுகையில் அந்த மதிப்பு அவனுக்கு இன்பமாயிருக்குமாம்.

னிடையே ஊக்கம் வளர்வ தெப்படி? வெற்றி சிறப்ப தெப்படி?

ஃ

ஆத்திர புத்தியுடன் ஒன்றைப் பேசி விடுவதும், அவசரப்பட்டு ஒரு தீர்மானத்தைச் செய்து விடுவதும் வெற்றியின் சூழ்ச்சியல்ல. தான் இனி செய்யப்புகும் காரியத்தை முன்னதாகச் சொல்லுவதும், தான் முடிக்கப்போகும் காரியத்தை முடிவு பெறுவதற்கு முன்பு வெளியிடுவதும் வெற்றியின் சூழ்ச்சியல்ல. அதிகமாக வார்த்தைகளைக் கொட்டி விடுபவன் வெற்றி பெற முடியாது. வெற்றி பெறுவதற்கான ரகசியவழிகளைவெளி யிடின் வெற்றிக்கு அவன் பலஹீனம் விளைத்தோனுகி விடுகிறுன்.

ஃ

வீண் வார்த்தைகளின் மூலமாய்த் தன் பெயர் பகிரங்கப் படாமல், தான் வெற்றியாய் முடித்த காரியங்களின் மூலமாய்த் தன் பெயர் எங்கும் வியா பக மடையும்படி செய்து கொள் பவனே வெற்றியின் சூழ்ச்சியை யுணர்ந்தோனுவான். எந்த விஷயத் தையும் நிதானத்தோடு தன்னுள் அடக்குதலும், மௌனத்தையே அநேக சந்தர்ப்பங்களில் பின்பற்றுத லுமே வெற்றியின் சித்திக்கு வழி யாகும். ஃ

சரியான செலவுகளைச் செய்யத் தன்னிடம் பணமில்லாதபோது, அனுவசியமான அதிகப்பட்ட செலவு கள் தன்னிடம் என்னென்ன உண் டென்பதை ஆராய்ந்து அச்செலவு களைக் குறைக்க முயன்றுல், சரியான செலவுகளுக்கு வேண்டிய பணம் கிடைத்து விடும். கடியாரத்தில் எந்த சக்கரம் பழுது என்பதைத் தெரிந்து செப்பனிட்டால் அந்தப் பழுதின் காரணமாக ஓடாமல் பழுது பட்டது போல் நின்றிருந்த மற்ற முட்களும் ஓடத் தொடங்கிவிடும். அதிகப்பட்ட செலவு எது வென்று கண்டுபிடிப்ப தானது, கெடியாரத்தில் பழுதடைந்த சக்கரம் எது என்பதைக் கண்டுபிடிப் பது போலாம். ஃ

காலத்தால் உண்மை விளங்கும். முயற்சியின் வழியே நடந்துகொண்டு போனுலன்றி வெற்றிவழியின் முடி வைப் பார்க்க இயலாது. ஆகவே, வியாபாரத்திலோ, உத்தியோகத் திலோ, வேறெந்தக் காரியத்திலோ வெற்றியின் சிந்தனையோடு மேலே செல்லுவோம். பின்னே திரும்பிப் பார்க்கவேண்டாம். சந்தேகமும் வேண்டாம். தருமபுத்திரனைப் போல நாமும் கோரிய சொர்க்கம் செல்லு வோம். வெற்றியை அங்கு கண்டடை வோம். இடையிலே, வழியிலே வீண் வம்பு சண்டைகள் வேண்டாம். முன்னே போவோம். போகக் கடவோம்.

---

சிலர் ஒன்றைப் படிக்கத் தொடங்கியதும் முதலில் நாலுவரி வாசித்து, உடனே மத்தியில் அது எப்படிப் போகிறதென்று கவனித்துத் தக்ஷணமே கடைசி முடிவுக்கு வந்து அங்கு இரண்டொருவரிகளைப் பார்த்து விட்டு எல் லாம் வாசித்தாய்விட்டதாகக் கீழே போடுகிறுர்கள். ஆனுல், தாங்கள் எழுதிய வியாசத்தைமட்டும் மற்றவர்கள் முழுதும் சிரத்தையோடு வாசிக்கவேண்டு மென்று விரும்புகிறுர்கள்.

---

பெண் குழந்தைகளைப் பெற்றுேர் பூர்வஜன்மத்தில் அதிகக் கடன் பட்டு அக்கடனைத் திருப்பித்தாமலே இறந்தவர்களாயிருக்கலாமோ என் னவோ ;

# உப்பின் உயர்வு.



உப்பு இரு வகையாகக் கிடைக்கிறது, கடல் நீரை இறைத்து உப்பு தயாரிப்பர். உஷ்ண தேசங்களில் சூரியனுடைய வெப்பத்தால் கடல் நீரைச் சுண்டச் செய்து உப்பு உண்டாக்குவார்கள். சீததேசங்களில் கடல் நீர் உறையும்படி செய்து உப்பு எடுப்பார்கள். இவ்விரண்டுவகையிலும், உவர்ப்பான கடல் நீரினின்றும் நல்ல நீர் வேறாய்ப் பிரிந்துபோக அதிலுள்ள உப்பு மாத்திரம் அடியில் தங்கிக் கட்டி கட்டுகின்றது. 100-க்கு 27-பங்கு கடல் நீரில் உப்பு கலந்து இருக்கிறது மற்றொன்று கனிகளிலிருந்து வெட்டி எடுப்பதாகும். பூமிக்குள் அகப்படுகிற பலவகைத் தாதுக்களில் உப்பும் ஒன்று. கனிகளில் அகப்படுகிற உப்புக்குக் கல்லுப்பு என்று பெயர். அது கெட்டியாகப் பாறை பாறையாய் இருக்கும், அரபிதேசத்தில் வெட்டி எடுக்கப்படும் உப்புக் கற்கள் அதிக கெட்டியாயிருப்பதால், அவற்றை வீடுகள் கட்டவும் உபயோகப் படுத்துகின்றனர்.

ஃ

போலாந்தில் ஒரு உப்புக்கனி பூமிக்குள் அறுநூறு கஜம் ஆழத்தின் கீழ் இருக்கிறது. மேலே பலகையொன்று கயிற்றில் கட்டித் தொங்குகிறது. அதில் உட்கார்ந்தால் மேலே நிற்பவன் அந்தக் கயிற்றைத் தளர்த்தி விடுகிறான். மூச்சு விடுகிற நேரத்தில் அது அடிப்புறம் போய்ச் சேருகிறது. அங்கு அநேகம் விளக்குகள் ஓயாமல் எரிந்து கொண்டிருக்கின்றன. வெகு பேர் அவ்விடத்தில் வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். உப்பினால் அழகாய்ச் சித்திரித்த சிறந்த கம்பங்கள் உள்ள விசாலமான சபாமண்டபங்களும் பிராகாரங்களுமாய் பெரிய அரண்மனைபோலிருக்கிறது. இந்தக் கனி முன்பு ராஜாங்கத்துக் கைதிகள் வேலை செய்த இடம். உப்பாயினும், பனிக் கட்டியாயினும் அவற்றின் அதிக பளபளப்பான வெண்மை நிறத்தைக் கண்டால் மனிதர், மிருகம் யாவர்க்கும் கண் கெட்டுப் போவது கூட உண்டாம். ஃ

ஹாலாந்தில் பூர்வகாலத்துச் சட்டப்படிக் குற்றவாளிகளுக்கு மிகக் கொடிய தண்டனையாய் உப்பில்லாச் சோறு அளித்து வந்தார்கள். அந்தக் கைதிகள் அத்தண்டனையை கேட்டு மிகவும் நடுங்குவார்களாம். அவர்களில் அநேகர் உப்பு இன்மையால் தீரா நோயில் அடிபட்டு இறப்பார்களாம். சென்ற 1870—71—இந்த வருஷங்களில் ஜர்மனி தேசத்துப் படைகள் போராடப் போயிருந்தபொழுது பகைவர் தேசத்தில் அச்சேனைக்குச் சிறிதும் உப்பு அகப்படவொட்டாமற் செய்து விட்டார்களென்று சரித்திரம் கூறுகின்றது.

---

சிலர் கோபங் கொதித்து ஆத்திரப்படவேண்டிய சமயத்தில் சிரித்துக் கொண்டே மௌனமாய்த் தங்களை அடக்கிக் கொண்டு சாதாரணமாக இருந்து விடுகிறார்கள்! இது பெரிய சாமர்த்தியம்.

# சிறுத்தைப் புலியுடன் போர்.



ஒருதடவை நேபாள தேசம்போயிருந்த ஒருவர் ஒரு நாள் அங்கே தான் ஓர் இரவில் சிறுத்தைப் புலியோடு போராடியதைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:—

ஃ

நான் நேபாள தேசத்தில் சிறுத்தைக்காடென்று பிரசித்தி பெற்ற பயங்கரமான ஒரு அரணியத்தின் அருகில் புரந்தரபுரி யென்னும் ஒரு ஊரிலே கூடாரம் போட்டுக் கொண்டு இறங்கி யிருந்தேன். பகலிற் செய்த வேலைகளால் இரவில் அலுத்துத் தூங்குகையில் என் நாய் குரைத்த ஓசையால் கண் விழித்துப் பார்த்தேன். எனக்குப் பத்தங்குலம் தூரத்தில் அழகிய சிறுத்தை யொன்று என்னை நெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றது. என் கண்களும் அதன் கண்களும் ஒரே நோக்காயிருந்தன. அப்படி எந்நேரம் இருவரும் பார்த்துக் கொண்டிருந்தோமோ எனக்கே தெரியாது; சில நிமிஷங்கள் இருக்கலாம். சிறிது நேரம் அது கண்களைக் குறுக்கிப் பார்த்தது; சிறிது நேரம் நன்றாய் மலரவிழித்துப் பார்த்தது; சிறிது நேரம் கருவிழியை ஓரமாய்க் கொண்டு போய் கடைக் கண்ணால் பார்த்தது; சிறிது நேரம் நன்றாய்க் கண்கள் பளபள வென்று என்னை நேராகப் பார்த்தது. தோட்டத்தில் தனக்கு இரையான பறவையைப் பிடிக்கப் போகிற பூனைபோல் அந்தச் சிறுத்தைத் தன் வால் நுனியை மெதுவாய் ஆட்டிக் கொண்டேயிருந்தது. அது கண்டு இன்னது செய்கிறதென்று தோன்றாமல் நான் ஒருவிதப் பிரமை பிடித்தவன் போலிருந்ததாகத் தெரிய வருகிறது. ஆயினும், நாங்கள் ஒருவரை யொருவர் விழித்துப் பார்ப்பது மட்டும் நிற்கவில்லை. ஃ

அச்சமயத்தில்கூடாரத்திலிருந்த சில குதிரைகள் அசைந்ததினால் ஓர் அரவமுண்டாக, அது கேட்டு அந்தச் சிறுத்தை சிறிது தலையைத் திருப்பிற்று. அது தருணங் கண்டு நான் தலையணையின் கீழ் இருந்த சுழல் துப்பாக்கியைக் கையிலெடுத்துக் கொண்டேன். புள்ளிகள் அழகாய் அமைந்த மேனியுள்ள மிருகம் மறு நிமிஷத்தில் தலையைத் திருப்பி என்னைப் பார்த்துப் பல்லிளித்து விட்டு ஒரு குதியாய்க் குதித்துக் கூடாரத்துக்கு அப்பால் திறந்த வெளியே போய் நின்றது. நான் இரண்டு வெடி தீர்த்தேன். அதற்கு அது ஒரு கர்ச்சனை மட்டும் மறுமொழி கொடுத்ததேயொழிய மற்றபடி அங்குலமளவும் அசையவில்லை. அப்புறம் அது பேய் பிசாசு கூடப் பயந்தோடும்படி ஓயாமல் கர்ச்சித்தது.

ஃ

அப்போது அது நின்றநிலையைப் பார்த்தால், அப்படியே ஓடிப்போவோமா, அல்லது எதிர்த்துப்போய் நம் பகையைத் தீர்த்துக் கொள்வோமா?— என்று மனக்கவலை கொண்டு நிற்பது போலத் தோன்றிற்று. உடனே என் மற்றொரு துப்பாக்கியை எடுத்து அதன் மார்புக்கு நேராய்க் குறிவைத்து வெடிதீர்த்தேன், அந்த நிமிஷமே அதன் விதி

முடிவாயிற்று. இச் செய்கையால் என் எலும்பு கரம்பெல்லாம் நடுங்கிப் போயிற்றென்றாலும், அவ்வூராருக் கெல்லாம் நான் ஒரு பெரிய வீரனுபி னேன் கடவுள் கிருபையால் என் கடும் நித்திரையினின்றும் நான் விழிக்காதிருப்பேனுயின், என் கதி என்னவாகும்? ஆபத்து நெருங்குமுன் நம்மை விழித்துக்கொள்ள வைப்பது கடவுளின் செயல்தான்.

## தாராள புத்தி ஏமாற வைக்கும்.

உன் மனம் பரிசுத்தமாயிருக்கலாம். அன்பின் உன்னதச்சுவையை அதிகம் உணர்ந்ததா யிருக்கலாம். அத்துடன் கபடமற்று உன்னைப்போலவே உலகினரும் என்று பிழையாய் நீ நினைத்துவிட்டிருக்கலாம். எல்லோரும் அன்பினர், ஆப்தர் என்று மயங்கிப்போயிருக்கலாம். அதில் நீ பிரமித்துப்போய் உன் வீட்டிற்கோ, கடைக்கோ வந்தவனை, அவன் நம்மை மதித்துவந்தானே என்று நீ பிரமாதமாய் எண்ணிவிட்டு அவன் அன்பு மகா பெரிதென்றும் மதித்துவிட்டு உன்னிடம் இருக்கும் புஸ்தகங்களையோ, உயரிய வஸ்துக்களையோ, அவற்றின் விலை அருமை சிலாக்கியம்—தற்போது அவை கிடைக்காமை இவைகளையும் எண்ணிப் பாராமல் மடமடவென்று கைக்கு வந்தவற்றை யெல்லாம் தூக்கிக்கொடுத்துவிடுகிறுய். வந்தவனே வெகு பக்குவமாய் உனக்கு இனிக்கப் பேசிவிட்டு யாவற்றையும் சுற்றிக்கொண்டு உன் மனது குளிர இரண்டொரு சொற்களையும் பேசிவிட்டு மெதுவாக நழுவிவிடுகிறுன். தான் வந்தவேலை நல்லவேலை என்று நினைத்து நீ ஏமாறிய புத்தியுடன் தந்ததற்கு சந்தோஷப்பட்டுக்கொண்டு தொலைகிறுன். பிறகு அவன் உன்னைப் பார்க்க வருவதுமில்லை. உனக்கு ஒரு கடிதமும் எழுதுவதுமில்லை. அவனுல் உனக்கு எந்த வேலையும் ஆவதுமில்லை. உன்னை அவன் நினைப்பதுமில்லை. பிறகுதான் உனக்கு நல்லபுத்தி வந்து ஐயோ! அவ்வளவு அருமையானவற்றையெல்லாம் தூக்கிக்கொடுத்தேனே! பாவி யாவற்றையும் கைப்பற்றி நழுவினுனே என்று துக்கிப்பாய். ஆதலின் தாராளபுத்தியிலும் நிதானி. உனக்கு உதவாததாய்த் தோன்றுவதில் ஏதோ ஒன்றுமட்டும் கொடு. சமுத்திரத்தில் கொட்டினும் அளந்து போடு.

# வீட்டுத் தொழில்கள்



ஒருவரை யொருவர் நம்பி அன்னியோன்னியமாய்க் குடித்தனம் செய்வது சரிதான். எனினும், ஞாலவாழ்வில் இந்த அன்னியோன்னியம் நீடித்திராமல் இடையே தெய்வ சோதனையாய் மரணம் பிரித்து விடுகின்றது. மனைவியை யிழந்த கணவன் ஏற்கெனவே தன் ஜீவனத்துக்கு ஒருவகை தேடிக் கொண்டுள்ளானாதலால், மனைவி இறந்த தனாலேயே அவனது ஜீவன பாகம் கெட்டு விடுவதில்லை. அவனது காலட்சேபத்துக்கு எப்போதும் போல் ஒரு வருவாய் கிடைத்துப் பொழுதும் சுகமாகக் கழிகின்றது. ஆனால், கணவன் மரித்து விடிலோ மனைவியின் காலட்சேபம் சோதனைக் குள்ளாகின்றது. அவள் தன் கணவன் காலத்தில் தனக்கென்று எவ்வித சம்பாத்தியத்தையும் தேடிக்கொள்ள வில்லை, எந்தக் கைத்தொழிலிலும் பழகவுமில்லை. கணவனையே பூர்ணமாக நம்பி நின்றவளாதலின்—கணவனின் கையையே எதிர்பார்த்து நின்றவளாதலின் கணவன் கண் மூடியதும் காலட்சேபசெலவுக்கு என்னசெய்வதென்று பெரிதும் கலங்கிப் போகின்றாள். நேற்று பாலும் பாயாஸமும் உண்ட அவள் நிலை இன்று உப்பில்லாக் கஞ்சிக்கும் வழியிற்றுக் கனத்த சோதனைக்குள்ளாய் விடுகின்றது. மனைவிக்குச் சொத்தும், வீடும், நிலமும் வைத்துச் செல்வோர் சிலரேயாக, மற்றவர் கதி பெருந் திகைப்பேதான். இதுவே 100-ல் 75-பேரின் நிலை. பந்துக்களின் ஆதரவில் வாழ்வதும் இந்நாளில் கூடாமையாகின்றது. ஒரு குடும்பம் இன்னொரு குடும்பத்தை ஆதரிக்கும் சக்தி பழயகாலம் போல் இப்போதில்லை. ஆதரிப்பினுங்கூட எத்தனையோ வகைகட்கும், பாரபக்ஷ பேதங்கட்கும் உள்ளாகிச் சகித்துக் கொண்டு கணவன் போனபின்பு உலக்கையையே துணைகொண்டு உயிர்வாழ நேர்கின்றது. நெல் குத்திப் பிழைத்த பாவையருக்கும் தற்போது நெல் மிஷின்களால் பிழைப்பு கெட்டு விட்டது. எனவே, கணவனோடு கூடி வாழுங் காலந்தன்னிலேயே தனக்கென்று ஒரு தொழில் தெரிந்து கொண்டு அதில் ஒரு நாலு பணம் வரவும்செய்துகொண்டு வாழப்பார்ப்பது பின்னுக்குவரும் பெரும் சோதனையைத் தற்போதே சகிக்கக்கற்றுக் கொள்ளும் வழியாக இருக்கும். இந்த முக்கிய விஷயத்தை நம்மில் வெகு பேர் கவனிப்பதில்லை. அவ்விதமாகக் கலங்கும் காலம் தங்கட்கு வாதென்றே பெரும்பாலார் பேதமையால் எண்ணிவிடுகிறார்கள்!

நம் தேசத்தில் சில காலமாக சுதேச முயற்சி தோன்றி, அதனால் ஜனங்களது ஜீவனோபாயங்களை அபிவிருத்தி செய்யவேண்டுமென்கிற கவலை பொதுவாய் உண்டாயிருக்கிறது. ஆதிகாலத்துத் தொழில்கள் மலினப்பட்டுப்போய் விட்டபடியால், ஏழை ஜனங்கள் வருந்துவதை

---

பெண்ணையும் கொடுத்து, நகைகளையும் கொடுத்து, மேலுக்குப் பல சீர் வரிசைகளையும் கொடுத்து, மருமகளின் காலில் வீழ்ந்தும் கடுகத்தனை விசுவாசமும் காணோமே தேவா!

அனுபவத்திலேயே தெரிந்து வருகிறோம். இந்தியாவில் பெரு முதல்கள் வைத்து பாக்டரிகளில் (Factories) மேல் நாட்டாரைப் போல் தொழில் நடத்துவது சிறிது தூரம் தான் சாத்தியம். இத்தேசத்துத் தொழில்கள் கிராமாந்தரங்களிலேயே நடத்தப்படுவதாதலின், இந்தப் "பாக்டரிகளை" அதிகப்படுத்துவதால் நன்மை யுண்டாவது நிச்சயமல்ல. ஆகையால், இதற்கு முன் இருந்ததுபோல் தொழில்கள் தொழிலாளிகளின் குடும்பங்களால் நடத்தப்படுவதுதான் இந்தியாவுக்குப் பொருந்தும்.

ஃ

"மில்" களிலும், "பாக்டரி" களிலும் வேலை செய்வோர் லக்ஷக் கணக்காயிருந்தாலும், தங்கள் வீடுகளிலிருந்து தொழில் செய்து ஜீவிப்பவர்கள் கோடிக்கணக்காய் இருக்கிறார்கள். பெரு முதல் படைத்த தனவான்கள் பஞ்சாலைகள், சர்க்கரை ஆலைகள் முதலிய ஆலைகள் வைத்து நடத்துவது உசிதமாயினும், முதலில்லாமல் அன்றன்று சம்பாதித்து ஜீவனம் செய்பவர்களுக்கு இது சாத்தியமல்ல. இவர்கள் பரம்பரையாய்த் தங்கள் வீடுகளிலேயே யிருந்து செய்து வரும் தொழில்களைச் செய்வதுதான் சாத்தியம். ஆகவே, சுதேச முயற்சிகளால் பொது நன்மையை முற்படுத்த விரும்புவோர், வீட்டுத் தொழில்களையும் விருத்தி செய்யவேண்டும். மேல்ஜோடுகளும், பனியன்களும், தையல் வேலைகளும் இன்னும் பலவும் வீட்டிலேயே செய்யக் கூடியவை. ஒரு பெண்ணுக்கு ஆர்மோனியம் வாங்கித் தருவதிலும் ஒரு தையல் யந்திரம் வாங்கித் தந்து பயிற்சியை உண்டாக்குவது பரம பிரயோஜனத்தை விளைக்கும். சௌராஷ்டிர மாதர்கள் தங்கள் வீடுகளிலேயே இருந்து நூல்நூற்றுத் தங்களின் காலக்ஷேப செலவுக்கு வேண்டியதைப் பெற்றுக் கொள்கிறார்கள். அலங்கார மான பொம்மைகள் செய்தல் போன்றவற்றை இன்னும் பல ஸ்திரீகள் செய்து வருகிறார்கள். விநாயக சதுர்த்தசியின்போது விற்கப்படும் விநாயக மண் விக்கிரகங்கள் பெரும் பாலும் பல மாதக் கணக்காகப் பெண்களால் வீட்டில் தயாரித்தவைகளே. இவை சித்திரீகர்களின் வீட்டுப்பெண்கள் செய்யும் கைத்தொழில்களாக இன்றும் இருந்து வருகின்றன. எண்ணெய் விற்கும் வாணியச் செட்டியார்களின் மனைவிமார் அந்தத் தொழிலில் முக்கால் பாகத்தைத் தாங்களே செய்து விடுவாரா யுள்ளார். இதில் கணவன்மாருக்கும் எவ்வளவோ பெரிய உதவி.

ஃ

தற்காலம் நம்மவருள் கையினால் வேலை செய்து ஜீவிப்பது இளப்பமென்கிற எண்ணம் சாமான்னியமாயிருக்க, சற்று கௌரவமான நிலையிலிருக்கும் ஸ்திரீகளுக்குள் இந்த எண்ணம் இன்னும் அதிகமாகவே இருக்கின்றது. இருந்தாலும், எல்லா வகுப்பினரிலும், எல்லாக் குடும்பங்களிலும் இந்த எண்ண மிருப்பதாகச் சொல்ல முடியாது. வடக்கே பல இடங்களில் ஸ்திரீகள் வீட்டுக்குள்ளேயே யிருந்து குடும்பங்களில் பிரயோஜனப்படும் பல சிறிய சாமான்களைச் செய்து விற்றுச் சம்பாதிக்கிறார்கள். கூர்ஜா நாட்டில் ஸ்திரீகள் குல்லாய் செய்து விற்பது வழக்கமென்று சொல்லப் படுகிறது. தென்னிந்தியாவிலும் சில வீடுகளில் ஸ்திரீகள் போஜனம் செய்ய இலைகள்

---

பெரியோர்களைத் தரிசித்து அவர்களுடன் குலாவுவதற்குப் பூர்வ ஜென்மத்தில் பாக்கியம் செய்திருந்தால்தான் முடியும்.

தைத்து விற்பது எல்லோருக்கும் தெரியும். கணவனை இழந்த பெண்களிற் பல்லோர் தோசை, ஆப்பம், இட்டிலி, புட்டு இவைகள் சுட்டு அதனாலும் ஜீவிக்கிறார்கள். புத்திசாலிகளான பெண்கள் தங்களின் கணவன்மாருடன் கூடி வாழுகையிலேயே இந்தச் சிற்றுண்டித் தொழில்களை வீட்டில் செய்து வருவோரா யிருக்கிறார்கள். முறுக்கு முதலிய தின்பண்டங்களையும் தயாரித்து விற்கிறார்கள். அப்பளம் முதலியனவும் போடுகிறார்கள். காய் கறி விற்று ஜீவிற்கும் பெண்கள் தங்கள் பர்த்தாக்களுடன் கூடி வேலை செய்து மார்க்கட்டுகளில் காய்கறிகளைக் கொண்டுவந்து வெகு திறமையோடும் வியாபாரம் செய்வதை நாம் அனைவரும் அறிவோம். நிலம் தோட்டங்களுள்ளவர்கள் பகல் முழுதும் தோட்டங்களில் காய் கறி கனிகளைச் சேகரித்து மாலையில் வீடுகளுக்குக் கூடை கூடையாய்க் கொண்டு வந்து சேர்த்து, அதிகாலையில் வண்டிகளில் ஏற்றி மார்க்கட்டுகளுக்குக் கொண்டுபோய் மொத்த விலையாக யாவற்றையும் விற்றுத் தீர்த்துப் பணத்துடன் பத்து மணிக்கெல்லாம் வீடு வந்து சேர்ந்து விடுகிறார்கள். சில பெண்கள் மளிகைக் கடைகளையும் வைத்து நடத்தும் அனுபவமும் பெற்றிருக்கிறார்கள். சில பெண்கள் வைத்தியத் தொழில் கற்று அதனாலும் சுக ஜீவனம் செய்கிறார்கள். பல பெண்கள் மருத்துவச்சிகளா யிருந்து பிரஸவ காலங்களில் தங்களின் அனுபவத்தால் பெரும் உதவிகள் செய்து அதனாலும் ஜீவிக்கிறார்கள். பிராமண வகுப்பைச் சேர்ந்த பெண்களிற் சிலர் போஜன விடுதிகள் அமைத்து அதனாலும் வருவாய் தேடிக் கொள்கிறார்கள். சில படித்த பெண்மணிகள் பெரிய இடங்களில் வாழ்க்கைப்பட்டு யாவும் இழந்து அகதிகளாகித் தங்களின் படிப்பின் திறமையால் உபாத்தியாயனிகளாகி சுகஜீவனம் செய்வதையும் அறிவோம். விசேஷமாக, கிறிஸ்தவப் பெண்மணிகள் உபாத்யாயனிகளாகித் தங்கள் கணவன்மாருடன் வாழ்கின்றனர். ஆணும் பெண்ணுமாக இருவரும் ஸம்பாத்தியம் செய்கிறார்கள். சில பெண்கள்பத்திரிகைகளுக்கு எழுதியும், நூல்கள் இயற்றியும், பத்திரிகைகளை நடத்தியும் வாழ்கின்றார்கள்.

ஃ

சில மகம்மதிய குடும்பங்களில் வெளிவரும் வழக்கமில்லாத ஸ்திரீகள் வீட்டுக்குள்ளேயே யிருந்து சரிகை செய்தும், துணிகளில் வெகு அழகாகப் பூப்போட்டும் விற்று ஜீவனம் செய்கிறார்கள். வேறு சில வீடுகளில் பாய்கள், கூடைகள் முதலியவைகள் பிரம்பினாலும் கோரையினாலும் செய்து விற்பது வழக்கம். இம்மாதிரி பல வேலைகள் அங்கங்கே ஸ்திரீகளால் செய்யப்பட்டு வருகின்றன. இதனால் ஸ்திரீகளுக்குக் கௌரவக் குறைவென்று சொல்வது புத்தியீனமாகும். கடன் வாங்கியும், பிறருக்கு அடிமைப்பட்டும், பந்துக்களுக்குப் பாரமாயும், தகாத செய்கை செய்தும் ஜீவித்தல் இளப்பமே யன்றிக் கையினாலும் புத்தியினாலும் வேலை

---

பேஷான நம் மிட்டாய், பெரிய சேர் காலணா என்று பல மிட்டாய்க் கடைகள் போட்டி போட்டுக்கொண்டு ஒரு ஊரில் கிளம்பின. அதே ஊரில் ஒரு சேட்கடை மட்டும் அந்தப் போட்டியில் சேராமல் மிட்டாய் சேர் எட்டணா வீதமே விற்றுக் கொண்டிருந்தது. அந்தக் கடைக்கும் வியாபாரம் நடவாமலில்லை. அங்குதான் நல்ல மிட்டாய் கிடைக்கு மென்று பலர் ஓடி வாங்கினர். காலணாக் கடைகள் சீக்கிரம் மறைந்து விட்டன.

செய்து, பிறருக்குக் கஷ்டமாவது இம்சையாவது இல்லாமல் பொருளைக் கொடுத்துப் பொருள் வாங்கி மான மாய் ஜீவிப்பதில் என்ன இளப்பம்? ஸ்திரீயானாலும், புருஷனானாலும் இவ்வாறு தொழில் செய்து ஜீவிப்பது உத்தமமே யன்றி ஊராரை ஏமாற்றியும், பிறருக்குப் பாரமாயும், திட்டுவசைகளைக் கேட்டுக்கொண்டும் சுலபமாய் ஜீவிக்க முயலுவோர் கேவலம் அத்தமமான மனிதர்களே யாவார்கள்.

ஃ

யாதவ குல மாதர்கள் எருமை பசுக்களை சம்ரக்ஷித்து பால், தயிர், வெண்ணெய், நெய் விற்று சுகமாக ஜீவனம் செய்கிறார்கள். கூடைகளில் தயிர்க்குடங்களைத் தூக்கிச் செல்ல அவர்கள் நாணுவதே யில்லை. கௌரவமான குலத்தொழில்கள் செய்வதில் எவ்வித கேவலமுமில்லை. எவ்வளவு உயர்ந்த நிலையிலுங்கூடத் தொழில்களைச் செய்வதை விட்டுவிட வொண்ணாது. தொழிலற்றிருப்பதே கேவலமாகும். ஆடவர் சர்க்கார் உத்தியோகத்திலோ வேறு எந்த வகையிலோ மாதம் பத்து இருபது ரூபாய்கள் சம்பாதிக்கும் எளிய குடும்பங்களில் வீட்டு ஸ்திரீகள் வீட்டு வேலைகள் செய்த பிறகு ஒழிந்த நேரங்களில் மேற்குறித்த தொழில்கள் ஏதேனும் செய்து புருஷாது சம்பாத்தியத்துடன் தங்கள் சம்பாத்தியத்தையும் சேர்த்துக் கஷ்டமில்லாமலும் கௌரவமாயும் ஜீவித்தலில் என்ன பிசகு இருக்கக்கூடும்? உயர்ந்த நிலையிலுள்ளோருக்குக் கணவனுக்குப் பிறகு ஜீவிக்க செல்வ சம்பத்துகள் இருக்கலாம். தாழ்ந்த நிலையிலுள்ளோர் கணவனுக்குப் பிறகு எந்தத் தொழிலையும் செய்யத் துணிவும் பழக்கமும் சக்தியும் இருக்கலாம். நடுத்தர நிலையிலுள்ள ஸ்திரீகளின் பாடுதான் கணவனுக்குப் பிறகு பெரிய திண்டாட்டமும் திகைப்புமாகிறது. ஆகவே, நடுத்தர நிலையிலுள்ளோர் தம் கணவனின் முன்பாகவே பிற்காலத்திற்கு உதவும்படியாக ஏதேனும் வீட்டுத்தொழில் செய்து பழக்கப்பட்டுத் தேர்ந்து அதனால் கிடைக்கும் வரும்படியையும் சேர்த்து ஜீவனம் செய்தல் அவசியமாகும்.

---

ஒரு பத்திரிகை யென்று இருந்தால், அப்பத்திரிகையின் முக்கால் பாகத்து விஷயங்களையும் அதன் ஆசிரியரே எழுதிவிட சமர்த்தராயிருக்க வேண்டு மென்றும், அவ்விதம் எழுதினால் தான் பத்திரிகைக்கு மதிப்பு ஏற்படுமென்றும் காலஞ்சென்ற லோகோபகாரிப் பத்திராசிரியர் ஸ்ரீமான் வி. நடராஜ ஐயர் கூறியிருக்கிறார். அவ்விதமே தமது பத்திரிகையையும் நடத்தி வந்தார். நமது "அமிர்த குணபோதினி"யின் வழியும் அதுவே.

---

யோசனைகாரிய வேலைகளின் அலைகளிலே விழுந்து நீந்திக் கரையேறுதற்கு வெகுவாக முயன்று முடித்துக் கொண்டிருக்கும் தருணத்தில் சிலர் வந்து குந்திக் கொள்கின்றனர். இதுவானது, ஒருவன் ஒரு ஸ்திரீயுடன் ரமித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் அங்கு மற்றொருவன் வந்துவிடின் எவ்வளவு கஷ்டத்தை யடைவானோ அதைப் போன்றதாகும். பலவித யோசனைகளோடும், சிந்திதனாயிருப்பவன் அவ்வளவையும் விட்டு, அங்கு வந்தவர்களுடன் பேச வேண்டி நேருவதால்—முன் நினைத்த விஷயங்களும் மறந்து, கை வேகத்து எழுத்துகளும் தடைப்பட்டு, மனதிற்கு அப்போது இருந்த விரைவான சுறுசுறுப்பும் மாறி ஏமாறிக் கலங்க நேர்கிறது. ஹா! அவதியே!!

# பொக்காரா அரசனின் நீதி.



பொக்காரா ராஜ்யத்தில் அரசன் ஒரு நாள் தனது பரிஜனங்களுடன் மசீதுக்குச் சென்றான். செல்லும்போது மார்க்கத்தில், கந்தை கந்தையாய்க் கிழிந்த அங்கியுடன் தலையில் மண் படிந்த பாகையோடு ஒருவன் மன்னனுக்கு எதிர் முகமாய் விரைந்து ஓடிவந்து, பூபதியாகிய வேந்தன் பாதத்தண்டை சாஷ்டாங்கமாய் விழுந்து, "இறைவனே, எனக்கு நீதி செய்யத் தாழ்ந்து பணிந்து வேண்டுகிறேன்; சட்ட நிபந்தனைகளை மீறினேன்; சட்டப்படி எனக்குத் தண்டனை செய்வது தருமம்" எனக் குரலெடுத்து ஓலமிட்டான். அரசன் இவனை உன்மத்தன் என்றெண்ணிச் சென்று விட்டான். மறுதினமும் அரசன் செல்லும் வழியில் அவன் காத்திருந்து மன்னனைக் கண்டதும் கதறி, "அரசே, என் வறுமையின் கொடுமையால் என்னைப் பெற்ற மாதாவை வாய் கொண்ட மட்டும் வைதிட்டேன். அந்த எனது அக்கிரமத்தை நீள நினைத்து நீதி செய்யுங்கள்" என வழக்குரைத்தான்.

அது கேட்ட மன்னன், வழக்கு சொன்ன மனுஷனைப் பார்த்து, உன் வழக்கு குருக்கள்மார் சங்கத்தில் கேட்டுத் தீர்க்கப்படும் எனத்திட்டம் செய்தான். குருக்கள் சங்கத்தார் விசாரணை செய்து அவனைக் கல்லெறிந்து கொல்லும்படி ஆக்ஞை பிறப்பித்தனர். இத்தீர்ப்பைக் கேட்ட அரசன் பரிதபித்து, தலையாரிகளை அந்தரங்கத்தில் வரவழைத்து, "அவன் உயிர் பிழைக்க நினைந்து ஓடித்தப்பி விட எத்தனிப்பானானால் நீங்கள் தடை செய்யாது விட்டு விடுங்கள்; அவன் அவ்விதம் போகாவிடில் அவன் அடி தாளாது மூர்ச்சிப்பினும் விட்டு விடுங்கள்" எனக் கற்பித்து, பிறகு தான் கல் ஒன்றைக் குனிந்து எடுத்துக் கைதிமீது படும்படி மெதுவாய்ப் போட, அவன் அகமும் முகமும் மகிழ்ந்து மலர்ந்து முழந்தாள் மடக்கி நின்றான். அரசன் கருதியவாறு அவன் ஓடி உயிர்பிழைக்க நினைக்கவில்லை. ஆனதுபற்றி அந்தச் சேவகர்கள் அவன் உடல் எங்கும் உதிரமயமாமளவும் கைசலிக்க விறுவிறென்று கல்லெறிந்தார்கள். அவனே பிரக்ஞை தப்புமளவும் முழந்தாள் மடக்கி நின்ற நிலையில் குரல் எழுப்பி ஆநந்த பரவசனாகி அல்லாவைத் துதித்து வணங்கினான். கடைசியில் மூர்ச்சையாகி விழ, பின் அவன் இறந்தானெனக் கண்டனர்.

அந்தக் கண்ணராவி காண மனம் சகிக்காத அரசன் "அந்தப் பிரேதத்தை அரண்மனைக்குக் கொண்டு வந்து சேருங்கள்" என இரண்டொரு சொல் அன்றி மற்றொன்றும் சொல்லாமல் மௌனமாய்ப் போய் விட்டான். அதன் பின் பிரதம மந்திரியை வரவழைத்து நடந்த சங்கதியைத் தெரிவித்தான். அம்மந்திரி வேந்தன் முகத்தில் தாங்கரிய வியசனம் குடி கொண்டிருப்பது கண்டு அதை ஒருவாறு தணிக்கும் பொருட்டு பின் வருமாறு உபாயஞ்சூழ்ந்து புத்தி புகட்டினான் :—

"வெற்றிவேந்தனே! இந்த அல்ப விஷயத்திற்கு இவ்வளவு வருந்தலாமா? இறந்த மனுஷன் தமக்கு, மித்திரனு, நெருங்கிய சுற்றத்தானு? அல்லவே. இவ்வன்னியனுக்காகத் தாங்கள் துயரக் கடலில் மூழ்கி அவஸ்தைப்பட நிமித்தம் என்ன? விதிப்படிக் குற்றவாளி தன் தண்டனையை யடைந்தான். எத்தனையோ பெயர் துக்கத்திற்கும் கிலேசத்திற்கும் இலக்காகித் திக்கற்றுத் தடுமாறுகிறார்களே! இந்தச் செத்த நாயும் அத்தனை பெயரில் ஒருவனென எண்ணிக் கொள்ளுங்கள்" என்றான்.

ஃ

மந்திரி மொழிந்த யுக்தியை மறுத்து மன்னன் வாக்கினின்றும் பிறந்த மறுமொழி யாவது :—

"மதி மந்திரீ! உமது வாக்கில் நீதியில்லை, தயாளமில்லை; கடுஞ்சித்தமே குடிகொண்டுள்ளது. அதிகார பதவியை வகித்தோர் இவ்விதமே கன்னெஞ்சராகிறார்கள். அவர்களைத் திருத்துவதாயின் வேலையை விட்டு நீக்குவதே தக்க மருந்து. அதோ சாளரத்தின் வழியே பாரும். ஒரு ஏழை மனுஷன் இவ்வாண்மனையை ஏறெடுத்துப் பார்த்து ஆ! ஆ! அரசனுக்கு எத்தனை வைபவங்கள்! சௌக்கியங்கள்! அவருக்கு ஒரு குறைவுமில்லை! என வியந்து நினைத்து வீணே கொட்டாவி கொள்கின்றான். ஆனால், உண்மையிலோ மன்னவர்க்கு மனச்சவுக்கியம் இல்லை. எனக்கு எவ்வளவோ சுகசெல்வ அதிகாரங்களும், மாட கூட கோபுரங்களும் இருந்தாலும், இந்த ஏழை மனுஷனை மரணத்திற்குத் தப்புவிக்க மனங்கொண்டும் எனக்குச் சக்தி யில்லாது போயிற்றே! தீர்ப்பு செய்த குருக்கள்மார் தன் பிழை தெரிந்து வருந்தியவனுக்கு இவ்விதம் கொடுந்தண்டனை விதிக்கலாமா? அவன் மனம் நோக அவன் அன்னை செய்த ஸகிக்க முடியாத ஹிம்சையை இந்த குருக்கள் விசாரித்து நீதி செய்தார்களா? மதுபான வெறி பிடித்து அலைந்தவனைத் தண்டிக்கும் நியாயாதிபதி தன் வீட்டில் தானே மது வருந்தி எத்தனையோ தவறுகள் செய்வதில்லையா? தவறு இழைக்காத மனிதன் உண்டா? நீர் அவனைச் செத்த நாய் என்றீர். இவ்வளவு இரக்கமற்ற நீர் பிரதம மந்திரியாக இருத்தல் கூடாதாதலின் இந்த நிமிஷமுதல் விலகி விடக்கடவீர். இரக்கமற்ற மூட அதிகாரிகளை வேலையினின்றும் தள்ளுவதே கடவுளுக்குப் பிரியமான தர்மமாகும். தண்டனை விதிப்போர் தாமே அத்தண்டனைகளுக்கு ஆளானால் அப்போது தான் அந்தத் துன்பம் தெரியும்" என்றான்.

ஃ

இத்தருணத்தில் கல்லடிப்பட்ட ஏழை மூர்ச்சை தெளிந்து விழித்துக் கொண்டதாகச் சேவகர் ஓடிவந்து தெரிவிக்க, மன்னன் அங்கு விரைந்து சென்று அவனைத் தழுவிக்கொண்டான். அவனுக்கு வைத்தியர்களைக் கொண்டு சிகிச்சை செய்வித்தான். அவன் ஒரு வாரத்தில் குணப்பட்டுத் தேறியதும் அவனையே தனது பிரதம மந்திரியாகக்கொண்டு, இரக்கத்துடன் நீதி செலுத்துமாறும், எப்போதும் அவன் பட்ட கல்லடிகளின் நோவை மறவாதிருக்குமாறும் கூறினான். அந்த ஏழையும் தன் அன்னையின் ஆசியால் தனக்குக்கிடைத்த வாழ்வென்று உள்ளம் பூரித்துத் தன் அன்னையிடம் சென்று யாவும் உரைத்தான். தாயும் தன் தநயனின் சத்திய குணத்திற்குக் கடவுள் தந்த பரிசைநோக்கி மகிழ்ந்து மைந்தனை வாழ்த்தினள்.



## சிற்பம், சித்திரம், பிரதிமை நிர்மாணம், கீதம்.



குமாஸ்தா கல்வியிலேயே உழன்று திரியும் நாம், சிற்பம், சித்திரம், பிரதிமை நிர்மாணம், கீத வாத்தியம் முதலிய நூல்களைக் கவனிக்கத் தவறிப்போயிருக்கிறோம். இந்நூல்களை சகல ஜனங்களும் இயல்பாகவே ஒன்றிற்குப் பின்னொன்றாக இதே முறைப்படி வைத்திருக்கின்றனர். இம்முறை வைப்பானது இந்நூல்களுள் ஒன்றுக்கொன்றுள்ள தாரதம்மியத்தை விளக்குகின்றது. இவ்வொழுங்கை அனுசரித்தே படிப்படியாக இங்கு கூறுவோம்.

ஃ

சிற்பசாஸ்திரமானது சௌக்கியத்திற்கு இன்றியமையாத வாசஸ்தலங்களைக் கட்டுவதற்கும், பார்வைக்கு அலங்காரமான மாடமாளிகை கூட கோபுரங்களைச் சமைப்பதற்கும் ஆவசியகமான நூலாம். இச்சாஸ்திரத்திற்கும், யந்திர சாஸ்திரம்—பலன் தருமுயற்சி — வாணிபம் — பொது க்ஷேமம்—பொது அர்த்தம்—பொது சௌக்கியம்—சமயாசாரம் ஆகிய இவைகட்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. இது தேவாலயங்கள், நியாயஸ்தலங்கள், பண்டசாலைகள், நடனசாலைகள் முதலியவைகளை உண்டாக்குவதற்கு வேண்டிய நூலாம். இது அநேகருக்கு மிகுந்த பிரயோஜனத்தையும் இன்பத்தையும் அளிக்கின்றது. இது மற்ற நூல்களுக்கு இருப்பிடமானதும், ரக்ஷாஸ்தானமானதும், எல்லாவற்றிலும் அதிக உத்கிருஷ்டமானதும், சர்வ வியாபகமானதும், சாசுவதமானதுமாம்.

ஃ

பூர்வத்தில் நாகரிகமடைந்திருந்த ஜனங்களுடைய கட்டடங்களில் சிறப்புக்குரிய லட்சணங்கள் முற்றிலும் இல்லாதகட்டிடங்கள் கிடையா. யாத்திரை போகிறவன் தேவ ஆலயத்திற்குச் சமீபத்தில் சேருமுன்னமே வழிநடையினால் உண்டான தேக சிரமத்தினால் மெள்ள மெள்ள அயர்ந்து நடக்கும்போது, அவன் பார்வையானது சுற்றியிருக்கும் மற்றெல்லா வஸ்துக்களைவிட உயர்ந்து கிற்கிற கெம்பீரமுள்ள உன்னதமான கோபுரங்களின் மீது செல்லுகின்றது. சமீபத்தில் போகப் போக ஆலயத்துக்கு வெளிப்புறத்தில் ஜனங்கள் நிறைந்த மண்டபங்களையும், பக்கத்தில் புண்ணிய தீர்த்தங்களையும், அலங்காரமான படித்துறைகளையும், அழன்று சுழன்று வருவோர்க்கு இன்பமான நிழலைத் தரத் தழைத்து நீண்ட அரச மரங்களையும் காண்கிறான். கோபுர வாசலானது அகன்று உயர்ந்து ஒன்றுக்கும் அசையாத விதமாய்ப் பெருத்த ஆகிருதியோடும் விளங்குகின்றது.

---

சில நண்பர்களிடம் சொற்சோர்வு அதிகமிருக்கிறது. தங்களின் வாக்குகளை அவர்கள் நிறைவேற்றுவதே யில்லை. அவர்கள் ஊர் போய் ஒரு காரியத்தைச் செய்கிறேன், அனுப்புகிறேன் என்று நேரில் சொல்லுகையில் அதைக் கேட்போர் எதுவும் நடக்கப் போகிற சங்கதியல்லவென்று அப்போதே தீர்மானித்து விடுகிறார்கள், முடிவும் அவ்விதமே தானாகிறது.

ஆலயத்திற்குட் பிரவேசிக்கும்போது எங்கும் மண்டப் பிராகாரங்கள், திருக்குளங்கள், இவற்றிற்கு அளவின்றி உபயோகித்திருக்கும் கற்கள், அங்கங்கு செய்திருக்கும் நுண்ணிய சித்திரவேலைகள், கெர்ப்பக் கிருகத்தின் இருண்ட தோற்றம்—இவை யாவையும், ஆலயத்தின் அதிசயத்தையும், மகிமையையும், பழமையையும், மானிட உழைப்பையும், பக்தியையும் குறிப்பிக்கின்றன. இவ்வாறு இத்தேசத்துத் தேவாலயங்கள் கெம்பீரமாயிருப்பது மாத்திரமல்ல; கவிவாணருடைய வர்ணனைக்குக் கூட ஏற்றனவாயிருக்கின்றன.

ஃ

இத்தேசத்திலில்லாத கட்டிடங்களும், சாமான்களும், மாதிரிகளும் மற்றோரிடத்தில் உண்டோ? இவ்வாறிருந்தும் இத்தேசத்தின் ஸ்திதியென்ன? இத் தேசஸ்தர்கள் நன்றாய்க் கற்றுணர்ந்து தனவந்தர்களானவுடனே தங்கள் முன்னோர்களுடைய சாஸ்திரங்களைக் கைவிட்டு, தாங்கள் அவ்விஷயத்தில் அந்நியருக்குக் கற்றுக் கொடுக்க வல்லவர்களாயிருந்தும், அந்த அந்நியர்களுடைய ரீதிகளையே மேன்மையென நினைத்து அனுசரிக்கிறார்கள். இப்பொழுது இத்தேசத்தார் உபேட்சித்து வரும் ஸ்வதேசக் கைத்தொழிற் சாஸ்திரங்களை லண்டன்—பாரீஸ் என்கிற பட்டணங்களில் நன்றாய்க் கற்றுத் தேர்ந்த வித்துவான்கள் கூட அறிந்து கொள்ள விருப்பத்துடன் முயலுகிறார்களென்பதை இந்நாட்டினர் அறிய வேண்டும். நமது முன்னோர்களால் பெற்று நாம் இப்பொழுது கண்டும் வசித்தும் வரும் கட்டடங்களைச் சகல விஷயத்திலும் இகழ்வது நியாயமின்மையும் நன்றியற்றதுமாம். தங்களின் சொந்த தேசத்துக் கைத்தொழில்களின் இயல்பான அழகு—சிறப்பு இவைகளினிமித்தமும், அவைகள் தங்கள் பெரியோர்களின் குண விசேஷங்களை விளக்கிக் காட்டுகிற தன்மையினிமித்தமும் தாங்கள் அவைகளைப் பயின்று பாதுகாக்கவேண்டும். இத்தேசத்தவர்கள் அவரவருடைய தேசாசாரத்துக்கொத்த எல்லாவற்றையும் சாதாரணமாய் எண்ணி அசட்டை பண்ணாமலும், அந்நிய ஜாதியாருக்குரிய புதுமைகளைப் பகுத்தறிவின்றி வியக்காமலும் இருக்கவேண்டும். சொந்தமானதை அசட்டை செய்து அந்நியமானதை வியத்தலானது, நூதனமாய் விர்த்தியாகிக் கொண்டு வருகிற நாகரிகத்தைத் தழுவமுயலும் பூர்வ கால நாகரிகமுள்ள ஜனங்களுக்குச் சஹஜ குணமாயிருக்கிறது. ஆகவே, அசட்டை செய்யும் குற்றத்தை நீக்குங்கள். உங்கள் முன்னோர்களுடைய கிருத்தியங்களை மதியுங்கள். பேணுங்கள். அவைகளைப் பயின்று அவற்றைப் போல் செய்ய முயலுங்கள். இதனால் அவற்றை அடிமைபோலப் பின்பற்ற வேண்டுமென்றல்ல, அவற்றின் சுபாவத்தன்மையைச் சோரவிடாமல் கால தேசவர்த்தமானங்களுக்கு இணங்கச் செய்து திருத்திக்கொண்டு, விவேகத்தோடு அநுஷ்டிக்க வேண்டுமென்பதேயாம். ஃ

---

குறித்த ஒருவரை வரவேண்டாமென்று சொல்ல வாயெடுத்தும் சொல்லாதிருந்து விட, பிறகு அந்த ஒருவர் வராமலே போய்விடுகிறார். நாம் சொல்லி வராமலிருந்ததை விட, சொல்லாமலே அவர் தாமாக நின்று விட்டது மனதுக்குச் சந்தோஷமாகிறது. இவ்விதமே பேச வந்ததை நிதானமாய் நிறுத்திக் கொண்டால் பலசமயங்களில் அது பிரயோஜனத்தையே கொடுத்திருக்கிறது. ஆதலின் உன் வாயை அடிக்கடி அடக்கு.

சிற்ப சாஸ்திரத்துக்குப் பின் அதற்கு இரண்டாவதாக எடுத்துரைக்கப்படுகிற சித்திரமானது பிரபஞ்சத்திலுள்ள தாவரவர்க்கங்களின் சகலவித ஸ்வரூபங்களையும், தோற்ற விகற்பங்களையும் ஐயந்திரிபறத் தெளிவாய் விளக்குவதற்கு எற்ற கருவியாம். எவ்வளவு சுத்தமானதாய்இருப்பினும் சித்ரீகனது கோலால்வரையமுடியாத சொரூபமும், எவ்வளவு நிலையற்றதாயிருப்பினும் சித்திரக்கோலால் குறிக்கக் கூடாத விஷயமும், அது கொண்டாடக் கூடாத விருத்தாந்தமும், அந்த சித்திரம் திரட்டி விளக்கிக் காட்டாத மனோபாவமும் உலகில் கிடையா. சித்திரமானது சகலரும் அறிந்துகொள்ளத் தக்க பொதுவானதொரு பாஷையாம். ஃ

மூன்றாவதான பிரதமை நிர்மாணமோவெனில் அவ்வளவு விரிவானதல்லாவிடினும், மற்ற சாஸ்திர நூல்களைப் பார்க்கிலும் மிகக் கடினமானதாம். ஆனால், அதன் நோக்கம் மிகச் சிறந்ததும், அதற்கு வேண்டிய சாதனங்கள் அதிக விலை பெற்றவையும், அதன் பணி கடினமான உழைப்புள்ளதும், அதைச் செய்து முடித்தல் மிகுந்த பொருட் செலவுள்ளதுமாய் இருக்கின்றது. அது சிற்பிக்கு நீடித்த புகழையும், ஜனங்களுக்கோ சொற்ப நேர இன்பத்தையும் தருகின்றது, மேற்சொல்லிய சிற்ப, சித்திர பிரதிமை நிர்மாண, கீதமெனும் நான்கு நூல்களும் சிற்பநூலின் வழியாய்ச் சாஸ்திரத்தோடும், சித்திரம், பிரதிமை நிர்மாணம் இவைகளால் சரித்திரத்தோடும் சமயநூலோடும் சம்பந்தப் பட்டிருப்பதன்றியும், கீதவாத்திய நூலின் மூலமாய்ச் செய்யுளோடும் சம்பந்தப்பட்டிருக்கின்றன.

ஃ

நான்காவதாகிய கானசாஸ்திரமானது கேவலம் மானிட மனோபாவங்களை வெளியிடுங் கருவியாக மதிக்கப்படுங்கால், அது மற்ற இரண்டு நூல்களையும்போல அவ்வளவு சரியாய் விளக்கமாட்டாது. அந்தந்த ஜாதியாருக்குள் சாதாரணமாய் வழங்குகிறதும், கடவுள் துதியைப் பற்றியதுமாகிய பாட்டுகளைத் தவிர, மற்றபடி சங்கீதமானது ஒரு ஒழுங்கின்றி இருந்தபோதிலும், அது மனதைக் கவர்ந்து பரவசமாக்கத்தக்க சக்தியுள்ளது. அது உள்ளத்திலுள்ள ஒவ்வொரு சுகதுக்கத்தையும் தகுந்தபடி விளக்குகிறதுமன்றி, ஒருவருடைய மனோ நிலைமையை மற்றொருவருடைய உள்ளத்தில் மிகுந்த வலிமையோடு செலுத்தும் தன்மையையும் உடையது. ஃ

மேற்கூறிய இந்நான்கு நூல்களையும் அததற்குரிய குணவிசேஷங்களால் பகுத்தறிய முயன்றால், (1) சிற்பநூலானது அலங்காரத்தோடு கூடிய உபயோகத்தையும், (2) சித்திரமானது அறிவையும், அழகையும்; (3) பிரதிமை நிர்மாணம் பிழையற்ற மனோபாவத்தையும்; (4) கானசாஸ்திரம் மனதின் எழுச்சி நிகழ்ச்சிகளையும் விளக்குகின்றனவென்று சொல்லலாம்.

ஃ

இனி, இந்நான்கு நூல்களுள் ஒவ்வொன்றினுடைய நோக்கமும் எவ்வளவு தூரம் நிறைவேறியிருக்கின்றதென்பதைப் பற்றியும், அதை இன்னும் எவ்விதமாய்த் தேர்ச்சியடையச் செய்யலாம் என்பதைப் பற்றியும் அறியும் பொருட்டு நீங்கள் எப்பொழுது ஆராய்ச்சி செய்ய அவகாசம் எடுத்துக் கொள்ளப் போகிறீர்கள்?

---

# "ப்ரோபெல்" என்னும் பாலபோதகரின் அநுபவங்கள்.



சிரியர் "ப்ரோபெல்" ஜெர்மனி தேசத்தில் ஒரு சிறு கிராமவாசி. அவரது பிதா மதக்குருவா யிருந்தார். ப்ரோபெல்லின் ஒரு வயது முடிவதற்குள் தாய் கண் மூடினள். தந்தை மறு விவாகம் செய்துகொண்டார். உலக வழக்கப்படி அந்த மாற்றாந்தாய் ப்ரோபெல்லுக்குக் கொடியவளாய் நின்றாள். அவரது விருத்தியைத் தடுத்துவந்தாள். ப்ரோபெல் எதையும் நுட்பமாகக் கவனிக்கக் கூடியவர். ஒரு சமயம் அவரைக் காணவந்த சகோதாரிடம், உலகில் யாவரும் பெண்களாகவாவது, புருஷர்களாக வாவது பிறந்திருந்தால் ஸ்திரீ-புருஷ சச்சரவு இல்லாமலிருக்குமே யென்று கேட்டார். அதற்கு அந்த சகோதரர் வெவ்வேறு விதமான இரண்டு மலர் களையும் செடிகளையும் ஒன்றாய்ச் சேர்த்து ஒட்டுவதினால் புதிதாய்வேறு மலர்களும் செடிகளும் உண்டாகின்ற விதத்தைக் காண்பித்து, வெவ்வேறு விதமான இரண்டு பொருள் ஒன்றாய்க் கூடுவதின் காரியத்தை விளக்கினார். இது ப்ரோபெல்லின் மனத்தில் ஆழப் பதிந்தது.

ஃ

ப்ரோபெல் தம் வீட்டுக்குள்ளேயே கிடந்தார். வெளியில் அவரை அழைத்துச் செல்ல அன்பானவர் களில்லை. வீட்டிற்கு அருகிலுள்ள ஆலயத்தைப் பழுது பார்ப்பதை சாளரத்தின் வழியே கண்டு தாமும் மரச் சாமான்களை ஒன்றின்மே லொன்றாய் வைத்துக்கட்ட முயன்றார். இதிலிருந்து சிறு பிள்ளைகட்குக் கட்டடம் கட்டி விளையாடுவதில் அதிக ஆவலிருக்குமென்றும் உணர்ந்தார். பத்தாவது வயதில் தாய்மாமனால் அழைத்துக் கொள்ளப்பட்டு அங்குள்ள பாடசாலையிற் சேர்ந்தார். தனித்து ஓரிடத்தில் கிடப்பதைவிட தன் வயதுக்குச் சரியான சிறுவர்களுடன் கூடியிருப்பதில் அதிக சுறுசுறுப்புக்கு இட மிருக்கிறதென்று தம் அநுபவத்தைக் கொண்டே அறிந்தார். பறவைகள், பூச்சிகள், மலர்கள், மிருகங்கள், கற்கள் இவற்றைப் பார்ப்பதில் தமக்கு உண்டாயிருந்த அதிக விருப்பத்தைக் கொண்டு, பிற்காலத்தில் எல்லாக் குழந்தைகளும் செடிகளையும் ஜந்துக்களையும் நேரில் பார்த்து இயற்கைப் பொருட்பாடம் கற்பது ஆவசியகமென்று உணர்ந்தார். தான் பாடசாலையில் கற்ற கல்வியில் அவர் திருப்தி கொள்ளவில்லை. தாம் படிக்கும் விஷயம் தம் வாழ்நாளுக்காயினும், இவ்வுலகத்திற்கே யாயினும் உபயோகப் படத்தக்க தன்றென அவர்க்குத் தோன்றியது. எது நியாயமோ அதைச் சேய்யவேண்டு மென்பது அவருடைய கொள்கையே யன்றித் தமக்கு இஷ்டமா யிருப்பதையே செய்யவேண்டு மென்பதன்று.

ஃ

உண்மையான அறிவுபெற சர்வ கலாசாலையில் படிக்க அவர் விரும்பியும் மாற்றாந்தாய் பொறாமையோடும் தடுத்து விட்டாள். பிறகு வேளாளத் தொழிலில் அமர்ந்தார். ஆயினும் அவ்வன பரிபாலகர் அவருக்கு ஒன்றும் கற்பிக்கவில்லை. பிறருடைய உதவியில்லாமல் தாம் தனியாகவே உழைக்கும் இயற்கையுடையவராய் இருந்ததனால், வேளாளனுவதற்கான நூல்களைத் தாமே வருந்திக் கற்றார். எனினும், யஜமானன் பழக்கி வைக்காத குறையினால் வேளாண்மை செய்யக் கைப்

பழக்கம் மாத்திரம் அவருக்குச் சிறிதும் உண்டாகவில்லை. பிறகு தன் ஸகோதரின் உதவியால் சிறிது பணம் சேர்த்துக்கொண்டு கலாசாலையிற் சேர்ந்து வாசித்தா ரெனினும், அவர் அதிலே சம்பளம் முதலிய கடன் பட்டு வித்தியாசாலைச் சிறையில் வைக்கப்பட்டார். அந்த சிறையிலுங்கூட அகப்பட்ட புஸ்தங்களை யெல்லாம் யெல்லாம் வாசிப்பதில் கவனம் செலுத்தினர். பின் தன் தந்தையிடம் சென்று அவர் இறக்குமளவும் அவருடனேயே இருந்தார்.

ஃ

ப்ரோபெல்லின் இருபதாவது வயதில் நில விசாரணைத் தலைவர் வேலை கிடைத்தது. அதன்பின் அவர் உபாத்தியாயரானர். "முப்பது பிள்ளைகளுள்ள ஒரு வகுப்பின் முன்னே நான் முதலில் போய் நின்றபோது, பறவைகளுக்கு ஆகாயம் போலவும், மீன்களுக்கு நீர் போலவும், எனக்குத் தக்க வசதியில் போய்ச் சேர்ந்ததுபோல் எனக்கு அதிக சௌக்யமும் ஸந்தோஷமும் உண்டாயிற்று" என்று கூறியிருக்கிறர். பாடசாலையின் வீடுமுறை காலத்தில் ஸ்விட்ஜர்லாந்திலிருந்த பெஸ்தலோஜி என்னும் பிரசித்த பண்டிதரிடம் உபாத்திமைத் தொழிலுக்கான சகலமும் கற்றுத் திரும்பித் தமது பாடசாலைப் பிள்ளைகளைத் தேர்ச்சி பெறச் செய்தார். பின் தம் தேசத்தில் உண்டான யுத்தத்திற் கலந்து நாட்டின் நன்மைக்கு உழைத்தார். அதன்பின் தாமே ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தினர். சாதாரணமான உணவும், ஆடம்பர மில்லாத நடை யுடைகளும், காடு, மலை, ஆறு, மடுக்கள், செடி கொடிகள் முதலான பிரகிருதிப் பொருள்களின் மத்தியில் வாழ்வதே தம் மாணக்கர்களுக்கு நலமென்று கருதினர். புஸ்தகப் படிப்பு அத்தனையா யில்லாமல் பூமியும் ஆகாயமுமே அவர்களுக்குப் படிக்கப் புஸ்தகமாயிருந்தன. பிள்ளைகளுக்குச் சிரிப்பும் களிப்புமாய் விளையாடத் தக்த விநோதமான ஒரு வீடு போலிருந்ததே யன்றிப் பள்ளிக்கூட மாகத் தோன்றவேயில்லை. பிறகு ப்ரோபெல் விவாகம் செய்து கொண்டார்.

ஃ

தலை விதிப்படியே எதுவும் நடக்கும். ப்ரோபெல்லின் மனைவி காலமானள். பிறகு தமது சொந்த ஊருக்குச் சென்று அங்கு ஒரு பாடசாலையைத் திறந்தார். பிள்ளைகளைப் பத்திரமாய்ப் பாதுகாத்து அவர்களுக்குக் கல்வியைப் பயிற்றுவிப்பதற்காகவே பெண்மணிகள் முக்கியமாய் இவ்வுலகில் ஜனித்தனர் என்ற தமது கொள்கையை ஸ்திரீகள் நன்கு தெரிந்து கொள்ளும்படி செய்தார். பெண்களை உபாத்தினிகளாக ஏற்படுத்தினர். பாடசாலையின் புகழ் எங்கும் பரவியது. மறு விவாகமும் செய்துகொண்டார். அக்காலத்தில் ஜர்மனி அரசாங்கம் குடிகள் கல்வி கற்று சுதந்திரவாதிகளாவது துரைத்தனத்திற்கு அபாயமென்ற கருத்துடனிருந்ததால் ப்ரோபெல்லின் கல்விப் பயிற்சி மாதிரியானது குடிகளுக்கு சுதந்திர நினைவை யுண்டாக்கி விடுமென்று கருதி ஜர்மனி தேசத்தில் அவர் பாடசாலை ஏற்படுத்தக் கூடாதென்று தடுத்து விட்டனர். இது ப்ரோபெல்லுக்கு ஒரு பேரிடி விழுந்தது போலிருந்தது. பிறகு உபாத்திமைத் தொழிலைவிட்டு வியாபாரத்தில் சிந்தையைச் செலுத்தினரேனும், நெடுநாள் இருக்கவில்லை. அவரது எழுபதாம் வருஷத்துப் பிறந்த தினத்தை அனைவரும் சிறப்பாகக் கொண்டாடியபின் இரண்டு மாதத்தில் கடவுளின் திருவடி நீழலெய்தினர். இவரது பால போதனைகள் மறு ஸஞ்சிகையில் பிரசுரமாகும்.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)

# "அமிர்த குணபோதினி"

## பிரஜோத்பத்தி வருஷத்திய கார்த்திகை மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| அ-சி | 16 | 1 | தி | ஸப் 31-57, மூல 26-16, விருச்சிகரவி 1-58, கரிநாள், [விஷ்ணுபதி. |
| சி-ம | 17 | 2 | செ | அஷ் 36-13, அவி 31-37, கோஷ்டாஷ்டமி. |
| சி-அ | 18 | 3 | பு | நவ 41-54, சத 38-24. |
| சி | 19 | 4 | வி | தச 48-27, பூட் 46-1. |
| சி-அ | 20 | 5 | வெ | ஏகா 5 -14, உட் 53-52, வைசிக ஏகாதசி. |
| பி | 21 | 6 | ச | துவா 60-0, ரே 60-0, க்ஷீராப்திபூஜா, துளசிவிவாஹம், [வைஷ்ணவைகாதசி, |
| அ-சி | 22 | 7 | ஞா | துவா 1-47, ரே 1-30, பிரதோஷம். |
| சி | 23 | 8 | தி | திர 7-31, அச 8-25, பரணீதீபம், சாபாயனம், 14-14, [கிருத்திகாதீபம், கிருத்திகை விரதம். |
| சி | 24 | 9 | செ | சது 12-18, பர 14-19, கபிலபூஜா, ஜ்வாலாதோரணம், |
| அ-சி | 25 | 10 | பு | ○15-55, கிரு19-14, ஸர்வாலய விஷ்ணுதீபம், கரிநாள், |
| உ-ம | 26 | 11 | வி | பிர 18-24, ரோ22-56. |
| சி | 27 | 12 | வெ | துவி 19-44, மிரு 25-35. |
| சி | 28 | 13 | ச | திரி 20-1, ஆரு 27-15. |
| சி | 29 | 14 | ஞா | சது 19-19, புந 28-1, சங்கஷ்டசதுர்த்தி. |
| சி | 30 | 15 | தி | பஞ் 17-44, பூச 23-39. |
| சி | 1 | 16 | செ | ஷஷ் 15-15, ஆயி26-47 |
| சி-அ | 2 | 17 | பு | ஸப் 11-56, மக 24-56. |
| சி-ம | 3 | 18 | வி | அஷ் 7-43, பூர 22-15. |
| சி-அ | 4 | 19 | வெ | நவ 2-43, உப 54-14, உத் 18-42, காலபைரவாஷ்டமி. |
| ம | 5 | 20 | ச | ஏகா 50-32, ஹஸ் 14-26, ஸ்மார்த்த ஏகாதசி. |
| சி | 6 | 21 | ஞா | துவா 43-43, 9-36. [சிவராத்திரி. |
| அம-சி | 7 | 22 | தி | திர 36-43, ஸ்வா 4-29, உப 54-51, பிரதோஷம் |
| சி-உ | 8 | 23 | செ | சது 29-49, அநு 54-26, கிருஷ்ணாங்காரக சதுர்த்தி. |
| சி-ம | 9 | 24 | பு | ● 23-29, கேட் 50-17. [சந்திர தரிசனம். |
| சி | 10 | 25 | வி | பிர 18-9, மூல 47-14, மார்க்கசிரசுத்தம், திதிதுவயம். |
| பி-சி | 11 | 26 | வெ | துவி 14-7, பூரா 45-36. |
| சி | 12 | 27 | ச | திரி 11-43, உரா 45-46. |
| அ-ம | 13 | 28 | ஞா | சது 11-13, ஶ்ரவ43-7, பதரீ கௌரீவிரதம், நாகபஞ்சமி. |
| சி | 14 | 29 | தி | பஞ் 12-44, அவி 51-59, மஹாஷஷ்டி. |
| ம | 15 | 30 | செ | ஷஷ் 16-13, சத57-45, சாபாவி 37-37, சம்பாஷஷ்டி, ஷஷ்டீ விரதம், ஷடசீதி. |

(விருச்சிகம் (5-29); டிசம்பர்)

| ரா | | | |
|---|---|---|---|
| | 15உக்கு ராசி. | | குரு |
| சகுபு | ரவி | | கே |

# "அமிர்த குணபோதினி"

## பிரஜோத்பத்தி வருஷத்திய மார்கழி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| அ | 16 | 1 | புத | ஸப் 21-25, பூட் 60-0, மித்ர ஸப்தமி, தனுர்மாஸபூஜை |
| சி | 17 | 2 | வி | அஷ் 27-39. பூட் 4-43. |
| சி-அ | 18 | 3 | வெ | நவ 34-28, உட் 12-28. |
| பி-சி | 19 | 4 | சனி | தச 41-0, ரே 20-10. |
| சி-பி | 20 | 5 | ஞா | ஏகா 46-42, அசு 27-21, வைகுண்ட ஏகாதசி, பச்சை வர்ணர் பகழவர்ணர் கருடன். |
| சி-ம | 21 | 6 | திங் | துவா 51-11, பர 33-20, கரிநாள், திருப்பதி நவநதி தீர்த்தம். |
| சி-அ | 22 | 7 | செ | திர 54-10, கிரு 37-57, கிருத்திகா விரதம், பிரதோஷம், மராயனம் 46-13. |
| சி | 23 | 8 | புத | சசி 55-42, ரோ 41-8, பாஷாண கௌரீவிரதம். |
| ம | 24 | 9 | வி | ○ 55-46, மிரு 42-57, கரிநாள் (ராத்திரி ஆருத்ராபிஷேகம், மயிலை முதலிய கடலோர ஸ்தலங்களில் ஆருத்திரா தரிசனம். |
| சி | 25 | 10 | வெ | பிர 54-35, ஆரு 43-31, (உதயம்) ஆருத்ரா தரிசனம். |
| சி | 26 | 11 | சனி | துவி 52-26, புந 43-4, கரிநாள். |
| சி | 27 | 12 | ஞா | திரி 49-29, பூச 41-48. [கற்போட்டமாரம்பம். |
| சி-ம | 28 | 13 | திங் | சது 45-58, ஆயி 39-59, சங்கஷ்ட சதுர்த்தி, |
| சி | 29 | 14 | செ | பஞ் 42-1, மக 37-42. |
| அ | 30 | 15 | புத | ஷஷ்ட 37-43, பூர 35-5. |
| ம-சி | 31 | 16 | வி | ஸப் 33-8, உத் 32-11, காலாஷ்டமி. |
| அ-சி | 1 | 17 | வெ | அஷ் 28-19, ஹஸ்29-1, அஷ்டகை. |
| ம-அ | 2 | 18 | சனி | நவ 23-17, சித்2 5-42. |
| சி-உ | 3 | 19 | ஞா | தச 18-5, ஸ்வா 22-11, திதி துவயம். |
| ம-சி | 4 | 20 | திங் | ஏகா 12-53, விசா 18-43, ஸர்வைகாதசி. |
| சி-உ | 5 | 21 | செ | துவா 7-49, அநு 15-23, பிரதோஷம். |
| சி-ம | 6 | 22 | புத | திர 3-6, உப 55-57, கேட் 12-28, சிவராத்திரி. |
| சி | 7 | 23 | வி | ● 55-57, மூல 10-13. |
| பி-சி | 8 | 24 | வெ | பிர 54-7, பூரா 8-57, புஷ்ய சுத்தம், |
| சி | 9 | 25 | சனி | துவி 53-53, உரா 9-2, சந்திர தரிசனம். [முடிவு. |
| அ-ம | 10 | 26 | ஞா | திரி 55-19, ஸ்ரவ 10-39, கூடாரவல்லி, கற்போட்ட |
| சி | 11 | 27 | திங் | சது 58-30, அவி 13-57, தூர்வா கணபதீ விரதம். |
| ம | 12 | 28 | செ | பஞ் 60-0, சத 18-54, மஹாவியதீபாதம். [பூஜைமுடிவு. |
| உ-சி | 13 | 29 | புத | பஞ் 3-20, பூட் 25-12, போகிபண்டிகை, தனுர்மாஸ |

(16–22 பக்கத்தில்: டிச (சாப)மீ 5-20; 1–13 பக்கத்தில்: 1932 ஜனவரி)

| ரா | | | |
|---|---|---|---|
| ச சுக் | 15உக்கு ராசி. | | குரு |
| ர,கு | புத | | கே |

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.